ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



ஜம்புலி புத்தூர் கிருஷ்ணய்யங்கார் ஸ்வாமி

இயற்றிய

# சோலைமலைக் குறவஞ்சி

உரையாசிரியர்கள்:

**ஸ்ரீ உ. வே. T. K. இராமாநுஜய்யங்கார் ஸ்வாமி**

**ஸ்ரீ உ. வே. அலங்காரம் தேவராஜய்யங்கார் ஸ்வாமி**

பதிப்பாசிரியர்:

**ஸ்ரீ உ. வே. S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,**
அட்வகேட், M.A.B.L.
(ஆசிரியர்: ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்)
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.

[ஸ்ரீ. ரா. ஸ்ரீ. கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் குடும்ப தர்ம
...த்துகளின் ஆதரவில் வெளியிடப்பட்டது.]

ஸ்ரீ :

# அணிந்துரை

[மகாவித்துவான்

## மே. வீ. வேணுகோபாலப்பிள்ளை

20-A, சுப்பிரமணிய முதலி தெரு,
புரசைப்பாக்கம். — சென்னை-600007.]

**ஜம்புலி புத்தூர் கிருஷ்ணய்யங்கார் சுவாமி** அருளிச்செய்த '**சோலை மலைக்குறவஞ்சி**' என்னும் '**அழகர் குறவஞ்சி**' நூல் வடிவில் வெளிவருவதைக் கண்டு, மட்டிலா மகிழ்ச்சி அடைகின்றேன்! இந்நூலில் உள்ள நூற்று எழுபத்தைந்து பாடல்களையும் அவற்றிற்கு முன்னுள் மதுரைச் செந்தமிழ்ப் பத்திராதிபர் **ஸ்ரீ உ. வே. T. K. இராமானுச அய்யங்கார் சுவாமியும், ஸ்ரீ உ. வே. அலங்காரம் தேவராஜ அய்யங்கார் சுவாமியும்** உவந்து வழங்கிய குறிப்புரையும் படித்து இம்முயற்சியைப் பெரிதும் பாராட்டுகின்றேன்! கவிகள் அனைத்தும் 'சொல் நோக்கும், பொருள் நோக்கும், தொடை நோக்கும், நடை நோக்கும், துறையின் நோக்கும்' உடையனவாய்த் துலங்குகின்றன. நூலின் முப்பத்தொன்பதாம் செய்யுளாகிய **திரிமூர்த்தி அகவல்**—முத்தேவரின் வருணனையாய் முகிழ்த்து,

**"பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல்"**

என்னும் வள்ளுவரின் வாய்மொழிக்கேற்பத் திருமாலுக்கு ஏற்றந் தந்து, தீதில் செந்நெறியாகிய திருமால் நெறிக்குச்

சிறப்பளிப்பது இந்நூலின் தனிச் சிறப்பு என்பதை உணர்த்துவது ஓதி இன்புறத் தக்கது.

நூலாசிரியர் நூலின் காப்புப் பகுதியில் தம்முடைய மாதா, பிதா, பிதாமகர் மூவர்க்கும் வணக்கம் செலுத்துவது **ஔவையார்** அருளிச்செய்த

**"அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்"**

என்னும் முதுமொழிக்கும் புதுமொழியாய்ப் பொலிவது ஓதி இன்புறத்தக்க ரீதியாய் இலங்குகிறது.

இந்நாள்வரையில் ஏட்டில் மறைந்திருந்த உள்ளம் கவரும் இத்தெள்ளிய பிரபந்தத்தைத் தமிழ் உலகிற்கு அச்சேற்றி அளித்து, வைணவ உலகத்தின் நன்றி அறிதலுக்கு உரியவர்களாய்த் திகழும் **ஸ்ரீ S. கிருஷ்ணசுவாமி அய்யங்கார்** அவர்களின் நன்முயற்சியைப் பெரிதும் பாராட்டுகின்றேன்!

யாப்பறி புலவர்க்கு இப்பிரபந்தம் நீப்பரு விருந்தாய்த் திகழும் என்பது திண்ணம்.

**சென்னை-7**
**5–4–75** **மே. வீ. வேணுகோபாலப்பிள்ளை.**

ஸ்ரீ:

# பாயிரம்

[அலங்காரம் தேவராஜய்யங்கார் ஸ்வாமி, ஸ்ரீவில்லிபுத்தூர்]

**"ஆயிர முகத்தா னகன்ற தாயினும்
பாயிர மில்லது பனுவ லன்றே"**

என்றனர் ஆன்ருேர். இதனைக் கருத்தில்கொண்டு வயதாலும், அறிவாலும் உயர்ந்து, அடியேனால் வணங்கத் தக்கவரும், முன்னாள் "செந்தமிழ்" பத்திராதிபருமான, ஸ்ரீ உ. வே. T. K. இராமானுஜ ஐயங்கார் ஸ்வாமியை இந்நூலுக்கு முகவுரை எழுதும்படி கடிதம் எழுதிப் பிரார்த்தித்தேன். அன்னார் அடியேனுக்கு எழுதிய பதிலில், "இளமையும், திடகாத்திரமும், குறவஞ்சி ஆசிரியர் தலம் முதலியவற்றின் அறிவும் நிரம்பிய தேவரீரே முகவுரைப் பணியை எழுதி முற்றுவிக்க மிகவும் தகுதியுண்டு என்பது என் உறுதியான முடிவு. உபசார வார்த்தையன்று. அதை நிறைவேற்றப் பிரார்த்திக்கிறேன்" எனப் பணித்தனர். முற்றக்கற்ற மூதறிஞர்கள் எழுதவேண்டியது பாயிரம். சிற்றறிவுடைய அடியேன் இப்பணியை மேற்கொள்வது தகாதெனினும், பெரியோர் இட்ட கட்டளையை மீறுதல் கூடாதென்ற கருத்தினால் இதனை ஏற்று அன்னார் ஆசிகொண்டு பெரிதும் தயக்கத்தோடு இதனை எழுதத் தொடங்குகிறேன்.

திருமால் திருப்பதிகள் நூற்று எட்டினுள் மிகவும் பெருமை வாய்ந்தனவாகப் பெரியோர்களால் போற்றப் படும் தலங்கள் நான்கு. அவை முறையே கோயில், திருமலை, திருமாலிருஞ்சோலைமலை, பெருமாள்கோயில் என்பனவாகும். இவற்றுள் திருமலையும் திருமாலிருஞ் சோலைமலையும் நிலமடந்தையின் இரு தனங்களாக விளங்குகின்றன. "தென்னனுயர் பொருப்பும் தெய்வ வடமலையும் என்னுமிவையே முலையா வடிவமைந்த அன்ன நடைய வணங்கே" என்பது திருமங்கையாழ்வாரின் திருவாக்கு. "சோதி மதி வந்து தவழ் சோலைமலையோடிரண்டாய் மேதினியாள் கொங்கை நிகர் வேங்கடமே" என்ருர் பிள்ளைப் பெருமாளையங்காரும். ஸ்ரீ பூமி நீளாதேவியரின் தனபாரங்களில் மயங்கிக் கிடப்பவனன்ருே திருமால்.

ஆகவே, புவி மடந்தையின் தனபாரத்தில் மயங்கி மன்னிக் கிடக்கும் திருமால் திருமாலிருஞ்சோலைமலையைத் தன் வாழிடமாகக் கொண்டதில் வியப்பென்ன? இதன் காரண மாகவே நம் ஆழ்வார்கள் இத்திருப்பதியில் அதிக மோகங் கொண்டனர். ஆசாரிய சிரேஷ்டரான கூரத்தாழ்வானும், 'ஸுந்த₃ர பா₃ஹுஸ்தவம்' பாடி, தன் வாக்கால் அழகரைப் பரவி நின்றார். இவ்வளவு சிறப்பு வாய்ந்த திருமாலிருஞ் சோலைமலை அழகருக்கு 'சோலைமலைக் குறவஞ்சி' என்ற இந்நூல் இரண்டாவது குறவஞ்சி நூலாகும். இதற்குமுன், "அழகர் குறவஞ்சி' என்ற நூல் கவிகுஞ்சர பாரதியால் பாடப்பட்டு, 1960-ஆம் வருடத்தில் அடியேனுக்கு பந்துவும், ஆப்தருமான ஆழ்வார்திருநகரி பெரியன் ஸ்ரீநிவாசய்யங் கார் ஸ்வாமியால் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டது. அழகர் குறவஞ்சி ஐம்பத்து எட்டே பாடல்கள் கொண்டது. அதனிலும் வேறான இச்சோலைமலைக் குறவஞ்சி நூற்று எழுபத்து ஐந்து பண்சுமந்த பாடல்களால் நிறைவுறுகிறது. குறவஞ்சி என்பது தமிழிலுள்ள தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களில் ஒன்று. இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத் தமிழ் என்ற முத்தமிழில் நாடகத்தமிழ் வகையைச் சேர்ந்தது. இதனைக் 'குறத்திப் பாட்டு' எனக் கூறுவர். குறிஞ்சிநில ஒருவகையார் குறவர் எனப்படுவர். குறவர் குலக்கொடியான பெண் ஒருத்தியின் தன்மை பற்றிக் கூறும் நூல் என விரியும்.

அழகருக்குக் குறவஞ்சி பாடிய பாரதிகள் இருவர். ஒருவர் கவிகுஞ்சர பாரதி. மற்றொருவர் கிருஷ்ணபாரதி. கிருஷ்ணபாரதி என விளங்கும் கிருஷ்ணய்யங்காரால் பாடப்பட்டதே இச்சோலைமலைக் குறவஞ்சியாகும். இவர் பூர்வசிகை அந்தணக்குலத்தினர். இவரது ஊர் மதுரை மாவட்டத்தில் உள்ள ஜம்புலிபுத்தூர். வைகை அணைக் கட்டின் அருகில் உள்ளது. வைகைக் கரையில் அமைந் துள்ள இவ்வூர் ஆலயம் மிகப் புராதனமானது. இவ் வாலயத்தில் கோயில்கொண்ட மூர்த்தி 'ஸ்ரீ கத₃லீநரசிங்கப் பெருமாள்.' இவ்வாலயத்தின் அர்ச்சக பரம்பரையைச் சேர்ந்தவரே ஆசிரியர் கிருஷ்ணய்யங்கார். இவரது

தந்தையார் தெய்வப்பெருமாளையங்கார். மூதாதை சேஷ ஐயங்கார். காப்புச் செய்யுட்களில் இவர் தன்னைப் பெற்று வளர்த்த அன்னை தந்தையரையும், மூதாதரையும் வணங்கி 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்ற தமிழ் மரபையும், "மாத்ரு தே$_3$வோ ப$_4$வ। பித்ருதே$_3$வோ ப$_4$வ। ஆசார்ய தே$_3$வோ ப$_4$வ।" என்ற வடமொழி வேத$_3$ வழக்கையும் மனத்தில் கொண்டு மாதா பிதாக்களையும், ஆசாரியனையும் வணங்கி, ஒரு புதுமையைத் தன் நூலின்கண் தோற்றுவிக்கிறார். இது இவருக்குத் தாய்தந்தையர்மாட்டும் ஆசாரியனிடத்தும் உள்ள பக்தியைக் காட்டுகிறது. இவரது ஆசாரியன் திருவாய்மொழிப்பிள்ளை. தன் ஆசாரியனை தன் சிறப்புப் பாயிரத்திலும், நூலின் தொடக்கத்திலும் இரு இடங்களில் பரவிப் பணியும் பண்பு இவருக்கு ஆசாரியனிடம் உள்ள அளவற்ற அன்பைக் காட்டுகிறது. 'தாளதாமரைத் தடமணி வயல் திருமோகூர்' என்று நம்மாழ்வாரால் சிறப்பித்துப் பாடப்பட்ட திருமோகூர் ஸ்ரீ காளமேகப்பெருமாள் சந்நிதியில் இவர் சிலகாலம் அர்ச்சக கைங்கர்யம் செய்து வந்திருக்கிறார்.

இவர் ஒருசமயம் குற்றாலக் குறவஞ்சியைப் பார்வையிட நேர்ந்தது. குறவஞ்சி நூல்களில் சொல் தொடை நடை பொருள் முதலிய நயங்களால், சிறந்து விளங்குவது குற்றாலக் குறவஞ்சி. குற்றாலக் குறவஞ்சி சிவபெருமானைத் தலைவனாகக்கொண்டு விளங்கும் நூல். சிவபெருமானின் பெருமையினை விளக்கவந்த நூலாசிரியர், திருமாலையும் திருமால் அடியார்களையும், சிறுமைப் படுத்தும் வண்ணம் சில பாடல்களைப் பாடினார். குறிப்பாக, சிங்கன் வேட்டையைப் பற்றிச் சொல்லுமிடத்தில் "கும்பமுனிக்குச் சிவமான காலம் குதித்தோடிப் போன வைணவர் போலவும்" என்று சிங்கன் கூற்றாகக் கூறுகிறார். இதனைக் கண்ணுற்ற நம் கிருஷ்ணபாரதியின் மனம் புண்பட்டது. திருமாலே கும்பமுனிக்காக சிவனாகக் காட்சி தந்தான் என்றல்லவா பொருள் படுகிறது. ஆதியில் அங்கு திருமால் கோயில்தானே இருந்திருக்கவேண்டும்? ஸர்வாந்தர்யாமியான பகவான் சிவனில் இல்லை என்று எவ்வாறு கூறுவது? இதை

உணர்ந்த வைணவர்கள் எப்படிக் குதித்தோடுவார்கள்? என்று எண்ணமிட்டுக்கொண்டிருந்த கிருஷ்ணபாரதியை, அழகர்கோவில் கைங்கர்ய து₄ரந்த₄ரர்களான ஞானப்பிரான் திருமலை நம்பிகள், ஸ்ரீநிவாஸ நம்பிகள் (தெய்வசிகாமணி நம்பி) என்ற இருவரும் சுந்தரத்தோளுடையானுக்கு ஓர் குறவஞ்சி நாடகம் இயற்றித்தருமாறு வேண்டினர். அவர்களுடைய வேண்டுகோளுக்கு உடனே இசைந்து இந்நூலைப் பாடிமுடித்தனர்.

அக்காலத்தில் வாழ்ந்த பெரியோர்கள் பலர் இந்நூலுக்குச் சாற்றுக்கவிகள் அளித்துள்ளனர். அவைகளில் பெரும்பகுதி செல்லரித்து விட்டது. காணப்பட்ட சில வற்றுள் காகிதங்கள் நொறுங்கி சிதிலமாகிவிட்டது. அதில் இருகவிகளே முழுமையாகக் கிடைத்தது. அதனை அடியில் குறிப்பிடுகிறேன்.

ஸ்ரீவில்லிபுத்தூர் இலக்கணவித்வான் ஸ்ரீ உ. வே. அப்புவய்யங்கார் ஸ்வாமி அருளியது.

**"பூமகளுந் திருமணியும் புணர்மார்பன்**
**சோலைமலைப் புங்கவன் மேல்**
**மாமகிமை பெருவேயர் மரபில்வந்த**
**கிருஷ்ண மாசாரி சொன்ன**
**நாமகிழுங் குறவஞ்சி நாடகத்தை**
**நன்குவினுய் நாமேற் றெண்ணு**
**பாமகளும் வெட்கி மறைவாயிருந்தா**
**ளெனிலிதன் சீர் பகர லாமே"**

ஸ்ரீ உ. வே. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி இயற்றியது

**"மாமேவு மில்லமென வாழ்மார்பன்**
**சோலைமலை மாலின் மேல்**
**மாழுங்கிற்குடி கிருஷ்ண சாரியன**
**மறைவலோன் மகிழ்ந் தளித்த**
**தேமேவுங் குறவஞ்சி நாடகத்தைச்**
**செவியேற்றுச் செறுக்கொழிந்தே**
**பாமாது முடல்வெளுத்தா ளென்றால்**
**மற்றவர் தன்மை நவிலலாமோ"**

ஸ்ரீ :

# பாயிரம்

[அலங்காரம் தேவராஜய்யங்கார் ஸ்வாமி, ஸ்ரீவில்லிபுத்தூர்]

**"ஆயிர முகத்தா னகன்ற தாயினும்
பாயிர மில்லது பனுவ லன்றே"**

என்றனர் ஆன்ரோர். இதனைக் கருத்தில்கொண்டு வயதாலும், அறிவாலும் உயர்ந்து, அடியேனால் வணங்கத் தக்கவரும், முன்னாள் "செந்தமிழ்" பத்திராதிபருமான, ஸ்ரீ உ. வே. T. K. இராமாநுஜ ஐயங்கார் ஸ்வாமியை இந்நூலுக்கு முகவுரை எழுதும்படி கடிதம் எழுதிப் பிரார்த்தித்தேன். அன்னார் அடியேனுக்கு எழுதிய பதிலில், "இளமையும், திடகாத்திரமும், குறவஞ்சி ஆசிரியர் தலம் முதலியவற்றின் அறிவும் நிரம்பிய தேவரீரே முகவுரைப் பணியை எழுதி முற்றுவிக்க மிகவும் தகுதியுண்டு என்பது என் உறுதியான முடிவு. உபசார வார்த்தையன்று. அதை நிறைவேற்றப் பிரார்த்திக்கிறேன்" எனப் பணித்தனர். முற்றக்கற்ற மூதறிஞர்கள் எழுதவேண்டியது பாயிரம். சிற்றறிவுடைய அடியேன் இப்பணியை மேற்கொள்வது தகாதெனினும், பெரியோர் இட்ட கட்டளையை மீறுதல் கூடாதென்ற கருத்தினால் இதனை ஏற்று அன்னார் ஆசிகொண்டு பெரிதும் தயக்கத்தோடு இதனை எழுதத் தொடங்குகிறேன்.

திருமால் திருப்பதிகள் நூற்று எட்டினுள் மிகவும் பெருமை வாய்ந்தனவாகப் பெரியோர்களால் போற்றப் படும் தலங்கள் நான்கு. அவை முறையே கோயில், திருமலை, திருமாலிருஞ்சோலைமலை, பெருமாள்கோயில் என்பனவாகும். இவற்றுள் திருமலையும் திருமாலிருஞ் சோலைமலையும் நிலமடந்தையின் இரு தனங்களாக விளங்குகின்றன. "தென்னனுயர் பொருப்பும் தெய்வ வடமலையும் என்னுமிவையே முலையா வடிவமைந்த அன்ன நடைய வணங்கே" என்பது திருமங்கையாழ்வாரின் திருவாக்கு. "சோதி மதி வந்து தவழ் சோலைமலையோடிரண்டாய் மேதினியாள் கொங்கை நிகர் வேங்கடமே" என்றார் பிள்ளைப் பெருமாளையங்காரும். ஸ்ரீ பூமி நீளாதேவியரின் தனபாரங்களில் மயங்கிக் கிடப்பவனன்றோ திருமால்.

ஆகவே, புவி மடந்தையின் தனபாரத்தில் மயங்கி மன்னிக் கிடக்கும் திருமால் திருமாலிருஞ்சோலைமலையைத் தன் வாழிடமாகக் கொண்டதில் வியப்பென்ன? இதன் காரணமாகவே நம் ஆழ்வார்கள் இத்திருப்பதியில் அதிக மோகங் கொண்டனர். ஆசாரிய சிரேஷ்டரான கூரத்தாழ்வானும், 'ஸுந்த₃ர பா₃ஹுஸ்தவம்' பாடி, தன் வாக்கால் அழகரைப் பரவி நின்றார். இவ்வளவு சிறப்பு வாய்ந்த திருமாலிருஞ் சோலைமலை அழகருக்கு 'சோலைமலைக் குறவஞ்சி' என்ற இந்நூல் இரண்டாவது குறவஞ்சி நூலாகும். இதற்குமுன், "அழகர் குறவஞ்சி' என்ற நூல் கவிகுஞ்சர பாரதியால் பாடப்பட்டு, 1960-ஆம் வருடத்தில் அடியேனுக்கு பந்துவும், ஆப்தருமான ஆழ்வார்திருநகரி பெரியன் ஸ்ரீநிவாசய்யங்கார் ஸ்வாமியால் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டது. அழகர் குறவஞ்சி ஐம்பத்து எட்டே பாடல்கள் கொண்டது. அதனிலும் வேறான இச்சோலைமலைக் குறவஞ்சி நூற்று எழுபத்து ஐந்து பண்சுமந்த பாடல்களால் நிறைவுறுகிறது. குறவஞ்சி என்பது தமிழிலுள்ள தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களில் ஒன்று. இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத் தமிழ் என்ற முத்தமிழில் நாடகத்தமிழ் வகையைச் சேர்ந்தது. இதனைக் 'குறத்திப் பாட்டு' எனக் கூறுவர். குறிஞ்சிநில ஒருவகையார் குறவர் எனப்படுவர். குறவர் குலக்கொடியான பெண் ஒருத்தியின் தன்மை பற்றிக் கூறும் நூல் என விரியும்.

அழகருக்குக் குறவஞ்சி பாடிய பாரதிகள் இருவர். ஒருவர் கவிகுஞ்சர பாரதி. மற்றொருவர் கிருஷ்ணபாரதி. கிருஷ்ணபாரதி என விளங்கும் கிருஷ்ணய்யங்காரால் பாடப்பட்டதே இச்சோலைமலைக் குறவஞ்சியாகும். இவர் பூர்வசிகை அந்தணக்குலத்தினர். இவரது ஊர் மதுரை மாவட்டத்தில் உள்ள ஐம்புலிபுத்தூர். வைகை அணைக் கட்டின் அருகில் உள்ளது. வைகைக் கரையில் அமைந்துள்ள இவ்வூர் ஆலயம் மிகப் புராதனமானது. இவ்வாலயத்தில் கோயில்கொண்ட மூர்த்தி 'ஸ்ரீ கத₃லீநரசிங்கப் பெருமாள்.' இவ்வாலயத்தின் அர்ச்சக பரம்பரையைச் சேர்ந்தவரே ஆசிரியர் கிருஷ்ணய்யங்கார். இவரது

தந்தையார் தெய்வப்பெருமாளையங்கார். மூதாதை சேஷ ஐயங்கார். காப்புச் செய்யுட்களில் இவர் தன்னைப் பெற்று வளர்த்த அன்னை தந்தையரையும், மூதாதரையும் வணங்கி 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்ற தமிழ் மரபையும், "மாத்ரு தே₃வோ ப₄வ। பித்ருதே₃வோ ப₄வ। ஆசார்ய தே₃வோ ப₄வ।" என்ற வடமொழி வேத₃ வழக்கையும் மனத்தில் கொண்டு மாதா பிதாக்களையும், ஆசாரியனையும் வணங்கி, ஒரு புதுமையைத் தன் நூலின்கண் தோற்றுவிக்கிறார். இது இவருக்குத் தாய்தந்தையர்மாட்டும் ஆசாரியனிடத்தும் உள்ள பக்தியைக் காட்டுகிறது. இவரது ஆசாரியன் திருவாய்மொழிப்பிள்ளை. தன் ஆசாரியனை தன் சிறப்புப் பாயிரத்திலும், நூலின் தொடக்கத்திலும் இரு இடங்களில் பரவிப் பணியும் பண்பு இவருக்கு ஆசாரியனிடம் உள்ள அளவற்ற அன்பைக் காட்டுகிறது. 'தாளதாமரைத் தடமணி வயல் திருமோகூர்' என்று நம்மாழ்வாரால் சிறப்பித்துப் பாடப்பட்ட திருமோகூர் ஸ்ரீ காளமேகப்பெருமாள் சந்நிதியில் இவர் சிலகாலம் அர்ச்சக கைங்கர்யம் செய்து வந்திருக்கிறார்.

இவர் ஒருசமயம் குற்றாலக் குறவஞ்சியைப் பார்வையிட நேர்ந்தது. குறவஞ்சி நூல்களில் சொல் தொடை நடை பொருள் முதலிய நயங்களால், சிறந்து விளங்குவது குற்றாலக் குறவஞ்சி. குற்றாலக் குறவஞ்சி சிவபெருமானைத் தலைவனாகக்கொண்டு விளங்கும் நூல். சிவபெருமானின் பெருமையினை விளக்கவந்த நூலாசிரியர், திருமாலையும் திருமால் அடியார்களையும், சிறுமைப் படுத்தும் வண்ணம் சில பாடல்களைப் பாடினார். குறிப்பாக, சிங்கன் வேட்டையைப் பற்றிச் சொல்லுமிடத்தில் "கும்பமுனிக்குச் சிவமான காலம் குதித்தோடிப் போன வைணவர் போலவும்" என்று சிங்கன் கூற்றாகக் கூறுகிறார். இதனைக் கண்ணுற்ற நம் கிருஷ்ணபாரதியின் மனம் புண்பட்டது. திருமாலே கும்ப முனிக்காக சிவனாகக் காட்சி தந்தான் என்றல்லவா பொருள் படுகிறது. ஆதியில் அங்கு திருமால் கோயில்தானே இருந்திருக்கவேண்டும்? ஸர்வாந்தர்யாமியான பகவான் சிவனில் இல்லை என்று எவ்வாறு கூறுவது? இதை

உணர்ந்த வைணவர்கள் எப்படிக் குதித்தோடுவார்கள்? என்று எண்ணமிட்டுக்கொண்டிருந்த கிருஷ்ணபாரதியை, அழகர்கோவில் கைங்கர்ய து$_4$ரந்த$_4$ரர்களான ஞானப்பிரான் திருமலை நம்பிகள், ஸ்ரீநிவாஸ நம்பிகள் (தெய்வசிகாமணி நம்பி) என்ற இருவரும் சுந்தரத்தோளுடையானுக்கு ஓர் குறவஞ்சி நாடகம் இயற்றித்தருமாறு வேண்டினர். அவர்களுடைய வேண்டுகோளுக்கு உடனே இசைந்து இந்நூலைப் பாடிமுடித்தனர்.

அக்காலத்தில் வாழ்ந்த பெரியோர்கள் பலர் இந்நூலுக்குச் சாற்றுக்கவிகள் அளித்துள்ளனர். அவைகளில் பெரும்பகுதி செல்லரித்து விட்டது. காணப்பட்ட சில வற்றுள் காகிதங்கள் நொறுங்கி சிதிலமாகிவிட்டது. அதில் இருகவிகளே முழுமையாகக் கிடைத்தது. அதனை அடியில் குறிப்பிடுகிறேன்.

ஸ்ரீவில்லிபுத்தூர் இலக்கணவித்வான் ஸ்ரீ உ. வே. அப்புவய்யங்கார் ஸ்வாமி அருளியது.

**"பூமகளுந் திருமணியும் புணர்மார்பன்**
**சோலைமலைப் புங்கவன் மேல்**
**மாமகிமை பெருவேயர் மரபில்வந்த**
**கிருஷ்ண மாசாரி சொன்ன**
**நாமகிழுங் குறவஞ்சி நாடகத்தை**
**நன்குவினுய் நாமேற் றெண்ணு**
**பாமகளும் வெட்கி மறைவாயிருந்தா**
**ளெனிலிதன் சீர் பகர லாமே"**

ஸ்ரீ உ. வே. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி இயற்றியது

**"மாமேவு மில்லமென வாழ்மார்பன்**
**சோலைமலை மாலின் மேல்**
**மாமூங்கிற்குடி கிருஷ்ண சாரியனு**
**மறைவலோன் மகிழ்ந் தளித்த**
**தேமேவுங் குறவஞ்சி நாடகத்தைச்**
**செவியேற்றுச் செறுக்கொழிந்தே**
**பாமாது முடல்வெளுத்தா ளென்றால்**
**மற்றவர் தன்மை நவிலலாமோ"**

மேலே சொன்ன இரு கவிகளிலிருந்து இவ்வாசிரியர் வேயர் குலத்துதித்தவர் எனவும், மூங்கிற்குடியினர் எனவும் தெரிகிறது. இவ்வாசிரியரால் எழுதப்பட்ட நூல்கள் பல உண்டு. அவை கிடைக்குமாயின் அவற்றையும் வெளியுலகம் காணப் புத்தகவடிவமாக்கலாம் என்பது அடியேனது தாழ்மையான விண்ணப்பமாகும்.

இனி இக்குறவஞ்சியிலுள்ள சில பாடல்களின் நயத்தை அடியேன் சிற்றறிவுக்கு எட்டியபடி விளக்குகிறேன்.

1. வைணவ மரபுப்படி நம்மாழ்வாருக்குக் காப்புச் செய்யுள் கூறப்படுகிறது. 'பூ' என்ற மங்களச் சொல்லால் தொடங்குகிறது.

2. மாதா பிதாக்களுக்கு வணக்கம் செலுத்தும் பாடல்(3). தன் பிதா தெய்வப்பெருமாள் ஐயங்கார் என்பதும், பிதாமகர் சேஷ ஐயங்கார் என்பதும் பின்னுள்ளோர் அறிந்து கொள்ளும் வண்ணம் கூறி, அவர்களைத் தனக்குத் தெய்வமாகக் கொண்டாடுகிறார்.

3. 4-ல் மணவாள மாமுனியைத் தொழுகிறார்.

4. 5-ல் மணவாள மாமுனிக்கும் தனக்கும் ஆசாரியனாகிய திருவாய்மொழிப் பிள்ளையைப் பரவுகிறார்.

5. 6-ல் பரசமய கோளரியான எதிராஜனைத்துதிக்கிறார். இப்பாடல் ஆழ்ந்த கருத்தோடு சந்தப் பாடலாக மிளிர்ந்து படிக்கப் படிக்க இன்பம் பயக்கிறது.

6. 7-ல் பிரகலாதாழ்வான், தொண்டரடிப்பொடி, பெரியாழ்வார், திருமங்கையாழ்வார், மதுரகவியாழ்வார் ஆகிய ஐவரைத் தொழுகின்றார். குற்றாலக்குறவஞ்சியில் மூவர் துதியில், "அலையிலே மலைமிதக்க வேறினாலும்" என்று மூவரில் ஒருவரைக் கூறியதுபோல, இவ்வாசிரியர் ஐவர் துதியில் 'மலை மிதக்க வரு பிரகலாதாழ்வானும்' என்று அதே சொற்களைக்கொண்டு பிரகலாதனை வணங்கும் நயம் வியக்கத்தக்கது.

7. நித்யசூரிகள் வணக்கத்தில் (9) முற்றுமோனை வைத்துப் பாடிய அழகு படிப்போர் கருத்தைக் கொள்ளைகொள்கிறது.

8. 13-ல் செல்வத்துக்கு அதி$_4$தே$_3$வதையான பெரிய பிராட்டியாரைத் துதிக்குமிடத்தில் நவநிதி$_4$களையும், அவரது பீடம், கை, மிடறு, தனம், புறவடி, உள்ளடி, நகை, குழல், விழி ஆகிய ஒன்பது உருப்புக்களில் ஏற்றிக் கூறியது சுவைக்கத்தக்கது.

9. 14-ல் பூமிதேவியின் துதி, உருவக அணியாக அமைந்து அழகு செய்கிறது.

10. 15-ல் நீளா தேவியின் துதியில் நவரத்தினங்களையும் பொருத்திப் பாடுகிறார்.

11. 16-ல் தான் ஆராதித்த காளமேகத்தையே பரம் பொருளாகக் கருதித் தொழும் விதம் படிக்கப்படிக்கத் தெவிட்டாத தேனுகவிருக்கிறது.

12. அழகரைத் துதிக்கும் பாடல்களில் ஒன்றில் (17) மடக்கணியும், மற்றென்றில் (18) முரண்தொடையும், மூன்ருவதில்(19) ஒன்றுமுதல் பத்துவரையுள்ள எண்கள் தொனிக்கவும் புணர்த்த நயம் காணத்தக்கது.

13. நூல் ஆரம்பத்தில் (26) தன் ஆசாரியரான திருவாய்மொழிப் பிள்ளையை முதற்கண் வைத்துப் பாடியதன் மூலம் இவரது ஆசாரியப் பிரதிபத்தியின் பெருமையைக் காணலாம்.

14. திருமூர்த்தி அகவல்(39)மிகவும் சிறப்பான அம்சம். அதில் பிரமனுக்குரிய இலக்கணம், சிவனுக்குரிய இலக்கணம், திருமாலுக்குரிய இலக்கணம் முதலியவற்றை விஞ்சிய ஆதாரத்தால் விளக்கிக் காட்டி "பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம் கருமமே கட்டளைக் கல்" என்ற திருக்குறளினுல் தெளிய வைக்கும் அழகு மிகவும் நேர்த்தியாக அமைந்திருக்கிறது.

15. 44-வது திபதையில் சுந்தரவல்லியின் வருணனையில் முரண்தொடைப் பெருக்கத்தின் சிறப்பு மிகவும் அற்புதம்.

16. 49-வது தரு. சுந்தரவல்லி பந்தடித்தல்-இதனைப் பாடி இன்புறத்தக்கது.

17. 57-வது தருவில் ‘தென்றல் தாவுதே வென்றி யாளிபோல்’ என்ற உவமை நயம் உள்ளத்தைக் கவரு கின்றது.

18. 63ல் சுந்தரவல்லி திருமால் பெருமையைச் சொல்லுதல் என்ற அகவலில்—சைவர்கள் கூறும் அடி முடி தேடிய கதையை மறுத்தும், திருமால் திருப்பதிகள் நூற்றெட்டுக்கு சிவாலயம் ஆயிரத்தெட்டு என்றும், திருவாய்மொழி நாலாயிரத்துக்கு இவர்கள் தேவாரம் எண்ணுயிரம் என்றும் இரட்டித்ததைப்போல் திருவாழிமலை எனத் திகழ்ந்ததை மாற்றி அருணுசலப் பெயரிட்டழைத் தனர் என்றும், திருமால் உலகங்களை எல்லாம் உண்ட காலத்தில் சிவனும், கயிலையும், சுடலையும், அருணையும் யோக வலிமையால் திருமால் வாயிலகப்படாது ஒதுங் கியதுண்டோ ? என்று கேட்டும் சைவர்கள் பொய்ப் புராணத்தைச் செய்பவர்கள் என்று துலக்குகிருர்.

19. 76-84 பாடல்கள் முழுமையும் படித்து இன்புறத் தக்கவை.

20. 87-107 மலைவளம் நாட்டுவளம் முதலியவற்றை விளக்கும் நயம் மிகவும் சிறந்து விளங்குகிறது.

21. 118ல் குறத்தி ஆசாரியர்களைத் தொழுது வேண்டு வது மிகவும் அற்புதம்.

22. 152ல் சிங்கன் புலம்புதல் என்ற தலைப்பில் உள்ள திபதையிலும், 158ல் சிங்கன் சிங்கியைத் தேடிச்சென்று திருமாலிருஞ்சோலைக்கருகில் காணும் லாவணியிலும் திருமால் திருப்பதிகள் பலவற்றைக் கூறி மகிழ்விக்கிருர்.

23. 163, 164, 165 பாடல்கள் சிங்கன் சிங்கியின் அணி துணிகளைக் கண்டு ஐயுற்று வினுவுதலும், சிங்கி தரும் விடையும் நயமுணர்ந்து சுவைக்கத்தக்கன.

173 வாழ்த்துப் பாடலோடு நூல் நிறைவுறுகிறது. மற் றும் அழகர் கோவிலில் உள்ள திருமாலையாண்டாரிலிருந்து சகல கைங்கர்ய பரர்களையும் அவரது பெருமையினையும் ஆங்காங்கே விதந்தோதுகின்ருர். விரிவுக்கு அஞ்சி இம்மட் டோடு இதனை முற்றுவிக்கிறேன்.

இந்நூலின் கையெழுத்துப் பிரதி ஒன்று மிகவும் சிதிலமான நிலையில் அடியேனது மாமனார் P. S. நாராயணய்யங்காரிடமிருந்து கிடைக்கப்பெற்றேன். ஞானப்பிரான் திருமலைநம்பிகள் வைத்திருந்த இந்நூல் மிகவும் சிறப்புடையது. இதனை அச்சியற்ற வேண்டுமென்று கூறி, அதை என்னிடம் கொடுத்தார். இதனைப்பெற்ற அடியேன் சுத்தப் பிரதிபண்ணி மதுரைத் தமிழ்ச்சங்கத்திலிருந்து வெளிவரும் 'செந்தமிழ்' பத்திராதிபராயிருந்த ஸ்ரீ உ. வே. T. K. இராமாநுஜ ஐயங்கார் ஸ்வாமியிடம் காட்டினேன். அன்னாரும் மனமிசைந்து செந்தமிழ் பத்திரிகையில் இடமளித்து உதவினர். இக்குறவஞ்சியின் சில பாடல்களே செந்தமிழ்ப் பததிரிகையின் மூலம் அடியேனால் வெளியிட முடிந்தது. அதன்பின் நீண்டகாலமாக நூல் வடிவமாக வெளியிட முடியாமல் இருந்த இதனை ஸ்ரீ உ. வே. கிருஷ்ண ஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமி ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனத்தின் மூலம் வெளியிட முன்வந்து உதவினதுடன் இதற்கு ஒரு குறிப்புரையும் எழுதும்படி நியமித்தருளினார். அடியேன் முற்றக் கற்ற மூதறிஞராகிய T. K. இராமாநுய ஐயங்கார் ஸ்வாமியையே குறிப்புரை எழுதும்படி வேண்டினேன். அவர் அடியேனையும் உடனிருந்து பணிபுரியும்படி தூண்டி, இதற்குக் குறிப்புரை எழுதி உதவினர். அடியேனுக்கு உறுதுணையாமிருந்து குறிப்புரை எழுதி உதவிய ஸ்ரீ உ.வே. T. K. இராமாநுஜ ஐயங்கார் ஸ்வாமிக்கும், இதனை பத்திரிகைவாயிலாகவும் நூல்வடிவிலும் வெளியிட்ட ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்ஆசிரியர் ஸ்ரீ. உ. வே. கிருஷ்ண ஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமிக்கும் அடியேன் 'தலையல்லால் கைம்மாறிலேனே' என்று கூறிக்கொள்கிறேன்.

'தான் கற்ற நூலளவே யாகுமாம் நுண்ணறிவு' என்ற முதுமொழிக்கிணங்க எழுதிய இவ்வுரையில் உள்ள குற்றங்களைந்து குணத்தை ஏற்குமாறு பிழைபொருத்தருளும் பெரியோர்களின் பொன்னடி போற்றி நிறைவு செய்கிறேன்.

**தாஸன்,**

**அலங்கார தேவராஜன்.**

மேலே சொன்ன இரு கவிகளிலிருந்து இவ்வாசிரியர் வேயர் குலத்துதித்தவர் எனவும், மூங்கிற்குடியினர் எனவும் தெரிகிறது. இவ்வாசிரியரால் எழுதப்பட்ட நூல்கள் பல உண்டு. அவை கிடைக்குமாயின் அவற்றையும் வெளியுலகம் காணப் புத்தகவடிவமாக்கலாம் என்பது அடியேனது தாழ்மையான விண்ணப்பமாகும்.

இனி இக்குறவஞ்சியிலுள்ள சில பாடல்களின் நயத்தை அடியேன் சிற்றறிவுக்கு எட்டியபடி விளக்குகிறேன்.

1. வைணவ மரபுப்படி நம்மாழ்வாருக்குக் காப்புச் செய்யுள் கூறப்படுகிறது. 'பூ' என்ற மங்களச் சொல்லால் தொடங்குகிறது.

2. மாதா பிதாக்களுக்கு வணக்கம் செலுத்தும் பாடல்(3). தன் பிதா தெய்வப்பெருமாள் ஐயங்கார் என்பதும், பிதாமகர் சேஷ ஐயங்கார் என்பதும் பின்னுள்ளோர் அறிந்து கொள்ளும் வண்ணம் கூறி, அவர்களைத் தனக்குத் தெய்வமாகக் கொண்டாடுகிறார்.

3. 4-ல் மணவாள மாமுனியைத் தொழுகிறார்.

4. 5-ல் மணவாள மாமுனிக்கும் தனக்கும் ஆசாரியனாகிய திருவாய்மொழிப் பிள்ளையைப் பரவுகிறார்.

5. 6-ல் பரசமய கோளரியான எதிராஜனைத் துதிக்கிறார். இப்பாடல் ஆழ்ந்த கருத்தோடு சந்தப் பாடலாக மிளிர்ந்து படிக்கப் படிக்க இன்பம் பயக்கிறது.

6. 7-ல் பிரகலாதாழ்வான், தொண்டரடிப்பொடி, பெரியாழ்வார், திருமங்கையாழ்வார், மதுரகவியாழ்வார் ஆகிய ஐவரைத் தொழுகின்றார். குற்றாலக்குறவஞ்சியில் மூவர் துதியில், "அலையிலே மலைமிதக்க வேறினும்" என்று மூவரில் ஒருவரைக் கூறியதுபோல, இவ்வாசிரியர் ஐவர் துதியில் 'மலை மிதக்க வரு பிரகலாதாழ்வானும்' என்று அதே சொற்களைக்கொண்டு பிரகலாதனை வணங்கும் நயம் வியக்கத்தக்கது.

7. நித்யசூரிகள் வணக்கத்தில் (9) முற்றுமோனை வைத்துப் பாடிய அழகு படிப்போர் கருத்தைக் கொள்ளைகொள்கிறது.

8. 13-ல் செல்வத்துக்கு அதி$_4$தே$_3$வதையான பெரிய பிராட்டியாரைத் துதிக்குமிடத்தில் நவநிதி$_4$களையும், அவரது பீடம், கை, மிடறு, தனம், புறவடி, உள்ளடி, நகை, குழல், விழி ஆகிய ஒன்பது உருப்புக்களில் ஏற்றிக் கூறியது சுவைக்கத்தக்கது.

9. 14-ல் பூமிதேவியின் துதி, உருவக அணியாக அமைந்து அழகு செய்கிறது.

10. 15-ல் நீளா தேவியின் துதியில் நவரத்தினங்களையும் பொருத்திப் பாடுகிறார்.

11. 16-ல் தான் ஆராதித்த காளமேகத்தையே பரம் பொருளாகக் கருதித் தொழும் விதம் படிக்கப்படிக்கத் தெவிட்டாத தேனுகவிருக்கிறது.

12. அழகரைத் துதிக்கும் பாடல்களில் ஒன்றில் (17) மடக்கணியும், மற்றொன்றில் (18) முரண்தொடையும், மூன்றுவதில்(19) ஒன்றுமுதல் பத்துவரையுள்ள எண்கள் தொனிக்கவும் புணர்த்த நயம் காணத்தக்கது.

13. நூல் ஆரம்பத்தில் (26) தன் ஆசாரியரான திருவாய்மொழிப் பிள்ளையை முதற்கண் வைத்துப் பாடியதன் மூலம் இவரது ஆசாரியப் பிரதிபத்தியின் பெருமையைக் காணலாம்.

14. திருமூர்த்தி அகவல்(39)மிகவும் சிறப்பான அம்சம். அதில் பிரமனுக்குரிய இலக்கணம், சிவனுக்குரிய இலக்கணம், திருமாலுக்குரிய இலக்கணம் முதலியவற்றை விஞ்சிய ஆதாரத்தால் விளக்கிக் காட்டி "பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம் கருமமே கட்டளைக் கல்" என்ற திருக்குறளினுல் தெளிய வைக்கும் அழகு மிகவும் நேர்த்தியாக அமைந்திருக்கிறது.

15. 44-வது திபதையில் சுந்தரவல்லியின் வருணனையில் முரண்தொடைப் பெருக்கத்தின் சிறப்பு மிகவும் அற்புதம்.

16. 49-வது தரு. சுந்தரவல்லி பந்தடித்தல்–இதனைப் பாடி இன்புறத்தக்கது.

17. 57-வது தருவில் 'தென்றல் தாவுதே வென்றி யாளிபோல்' என்ற உவமை நயம் உள்ளத்தைக் கவரு கின்றது.

18. 63ல் சுந்தரவல்லி திருமால் பெருமையைச் சொல்லுதல் என்ற அகவலில்—சைவர்கள் கூறும் அடி முடி தேடிய கதையை மறுத்தும், திருமால் திருப்பதிகள் நூற்றெட்டுக்கு சிவாலயம் ஆயிரத்தெட்டு என்றும், திருவாய்மொழி நாலாயிரத்துக்கு இவர்கள் தேவாரம் எண்ணுயிரம் என்றும் இரட்டித்ததைப்போல் திருவாழிமலை எனத் திகழ்ந்ததை மாற்றி அருணைசலப் பெயரிட்டழைத் தனர் என்றும், திருமால் உலகங்களை எல்லாம் உண்ட காலத்தில் சிவனும், கயிலையும், சுடலையும், அருணையும் யோக வலிமையால் திருமால் வாயிலகப்படாது ஒதுங் கியதுண்டோ ? என்று கேட்டும் சைவர்கள் பொய்ப் புராணத்தைச் செய்பவர்கள் என்று துலக்குகிருர்.

19. 76-84 பாடல்கள் முழுமையும் படித்து இன்புறத் தக்கவை.

20. 87-107 மலைவளம் நாட்டுவளம் முதலியவற்றை விளக்கும் நயம் மிகவும் சிறந்து விளங்குகிறது.

21. 118ல் குறத்தி ஆசாரியர்களைத் தொழுது வேண்டு வது மிகவும் அற்புதம்.

22. 152ல் சிங்கன் புலம்புதல் என்ற தலைப்பில் உள்ள திபதையிலும், 158ல் சிங்கன் சிங்கியைத் தேடிச்சென்று திருமாலிருஞ்சோலைக்கருகில் காணும் லாவணியிலும் திருமால் திருப்பதிகள் பலவற்றைக் கூறி மகிழ்விக்கிருர்.

23. 163, 164, 165 பாடல்கள் சிங்கன் சிங்கியின் அணி துணிகளைக் கண்டு ஐயுற்று வினவுதலும், சிங்கி தரும் விடையும் நயமுணர்ந்து சுவைக்கத்தக்கன.

173 வாழ்த்துப் பாடலோடு நூல் நிறைவுறுகிறது. மற் றும் அழகர் கோவிலில் உள்ள திருமாலையாண்டாரிலிருந்து சகல கைங்கர்ய பரர்களையும் அவரது பெருமையினையும் ஆங்காங்கே விதந்தோதுகின்ருர். விரிவுக்கு அஞ்சி இம்மட் டோடு இதனை முற்றுவிக்கிறேன்.

இந்நூலின் கையெழுத்துப் பிரதி ஒன்று மிகவும் சிதிலமான நிலையில் அடியேனது மாமனார் P. S. நாராயணய்யங்காரிடமிருந்து கிடைக்கப்பெற்றேன். ஞானப்பிரான் திருமலைநம்பிகள் வைத்திருந்த இந்நூல் மிகவும் சிறப்புடையது. இதனை அச்சியற்ற வேண்டுமென்று கூறி, அதை என்னிடம் கொடுத்தார். இதனைப்பெற்ற அடியேன் சுத்தப் பிரதிபண்ணி மதுரைத் தமிழ்ச்சங்கத்திலிருந்து வெளிவரும் 'செந்தமிழ்' பத்திராதிபராயிருந்த ஸ்ரீ உ. வே. T. K. இராமாநுஜ ஐயங்கார் ஸ்வாமியிடம் காட்டினேன். அன்னாரும் மனமிசைந்து செந்தமிழ் பத்திரிகையில் இடமளித்து உதவினார். இக்குறவஞ்சியின் சில பாடல்களை செந்தமிழ்ப் பத்திரிகையின் மூலம் அடியேனால் வெளியிட முடிந்தது. அதன்பின் நீண்டகாலமாக நூல் வடிவமாக வெளியிட முடியாமல் இருந்த இதனை ஸ்ரீ உ. வே. கிருஷ்ண ஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமி ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனத்தின் மூலம் வெளியிட முன்வந்து உதவினதுடன் இதற்கு ஒரு குறிப்புரையும் எழுதும்படி நியமித்தருளினார். அடியேன் முற்றக் கற்ற மூதறிஞராகிய T. K. இராமாநுய ஐயங்கார் ஸ்வாமியையே குறிப்புரை எழுதும்படி வேண்டினேன். அவர் அடியேனையும் உடனிருந்து பணிபுரியும்படி தூண்டி, இதற்குக் குறிப்புரை எழுதி உதவினார். அடியேனுக்கு உறுதுணையாமிருந்து குறிப்புரை எழுதி உதவிய ஸ்ரீ உ.வே. T. K. இராமாநுஜ ஐயங்கார் ஸ்வாமிக்கும், இதனை பத்திரிகைவாயிலாகவும் நூல்வடிவிலும் வெளியிட்ட ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்ஆசிரியர் ஸ்ரீ. உ. வே. கிருஷ்ண ஸ்வாமி ஐயங்கார் ஸ்வாமிக்கும் அடியேன் 'தலையல்லால் கைம்மாறிலேனே' என்று கூறிக்கொள்கிறேன்.

'தான் கற்ற நூலளவே யாகுமாம் நுண்ணறிவு' என்ற முதுமொழிக்கிணங்க எழுதிய இவ்வுரையில் உள்ள குற்றங்களைந்து குணத்தை ஏற்குமாறு பிழைபொருத் தருளும் பெரியோர்களின் பொன்னடி போற்றி நிறைவு செய்கிறேன்.

தாஸன்,

**அலங்கார தேவராஜன்.**

# பதிப்பாசிரியரின் குறிப்புரை

சோலைமலைக் குறவஞ்சியை இயற்றியவரான ஜம்புலி புத்தூர் கிருஷ்ணய்யங்கார் ஸ்வாமியைப்பற்றி எந்தை யாரும், திருக்கோஷ்டியூர் ஸ்தாநீகம் ஸ்ரீ. உ. வே. வேங்கடாத்$_3$ரி அய்யங்கார் ஸ்வாமியும் தாம் கேள்விப்பட்ட பல விஷயங்களை அடியேனிடம் சொல்லியிருக்கிறார்கள். திருக்கோஷ்டியூர் ஸ்வாமியின் மாமியாருக்கு அவர் மிகவும் நெருங்கிய உறவினர். அவர் நினைத்தமாத்ரத்தில் கவிபாடவல்ல ஆஶுகவி என்றும், சொன்ன வாக்குப் பலிக்கும் அருட்கவி என்றும் விளக்கும் பல செய்திகளை அவருடன் பழகியவர்கள் சொல்லுவார்களாம். ஶாஸ்த்ர வசனங்களைக் கொண்டு பூர்வஶிகை$_2$யின் பெருமையை விளக்கும் ஶிக$_2$ா நிர்ணய ஶாஸ்த்ரம் என்னும் நூலை அவர் இயற்றியுள்ளார் என்றும், அதைத் தான் ஒருமுறை பார்த்திருப்பதாகவும், அதை முடிந்தால் ஸம்பாதி$_3$த்து அச்சியற்ற வேண்டும் என்றும் எந்தையார் கூறுவர். சுமார் 27 வருடங்களுக்குமுன் ஸுத$_3$ர்ஶனம் ஐந்தாம் இதழில் (11-ம் பக்கத்தில்) ஜம்புலிபுத்தூர் கிருஷ்ண ஐயங்கார் ஸ்வாமி இயற்றிய சோலைமலை குறவஞ்சி நூலை வெளியிடவேண்டும் என்னும் பாரிப்பை எந்தையார் வெளியிட்டார். அது ஸ்ரீ வில்லிபுத்தூர் அலங்காரம் தேவராஜய்யங்கார் ஸ்வாமியினுல் இப்போது நிறைவேறியுள்ளது.

இந்நூலை ஒருமுறை படிப்போர்க்கு—இந்நூலாசிரியரது தமிழ்ப் புலமையும், கவிபாடும் திறமையும் விளங்குவதோடு, வடமொழியிலுள்ள ஶ்ருதி, ஸ்ம்ருதி, இதிஹாஸம், புராணங்கள், ஶில்பம், ஸங்கீ$_3$தம், வான நூல் முதலான சாத்திரங்கள், ஆழ்வார்கள் ஆசார்யர்களது ஸ்ரீஸூக்திகள், குருபரம்பரைச் செய்திகள் முதலானவற்றில் இவ்வாசிரியர் ஆழ்ந்த அறிவுபெற்ற அருங்கவி என்பதும் விளங்கும்.

39-ம் பாடலான திரிமூர்த்தி அகவலில் மும்மூர்த்திகளின் ஸ்வரூபஸ்வப$_4$ாவங்களை இவர் வருணித்திருப்பதைக் காணும் போது, திருநெடுந்தாண்டகத்தன்று நம்பெருமாள் திருமுன்பே நடக்கும் அரையர் ஸேவையைத் திருச்செவி

சாத்தி, அதை அடியொற்றி மிக விரிவாக இத்திரிமூர்த்தி அகவலைப் பாடியுள்ளார் என்பது விளங்கும். இப்பாடலும், "சுந்தரவல்லி திருமால் பெருமை செப்புதல்" என்னும் தலைப்பில் உள்ள 63-ம் பாடலும் இவரது சாத்திர ஞானத்தையும், வைணவ சம்பிரதாய ஞானத்தையும் குன்றிலிட்ட விளக்காக்கிக் காட்டுகின்றன. 63-ம் பாடலில்—திருவண்ணுமலையென்று இப்போது வழங்கும் ஊர் ஆதி₃யில் திருவாழி மலையென்னும் பெயர்பெற்ற விஷ்ணுஸ்த₂லமாக விளங்கிவந்தது என்பதற்கு ஜைமினிப₄ாரதத்தைச் சான்ருகக் காட்டி, வல்லாளகண்டன் என்னும் விஷ்ணுத்₃வேஷி ராஜாவால் அது சிவத்தலமாக மாற்றப்பட்டது என்று இவர் கூறும் வரலாற்றுச் செய்தி குறிக்கொள்ளத் தக்கது. நவீனர்கள் சிலர் திருமாலிருஞ்சோலைமலையை ஆக்ரமிக்கும் எண்ணத்துடன், ஓர் இரவில் கள்ளத்தனமாக அதில் ஒரு முருகன் கோயிலைக் கட்டி, அதற்குப் பழமுதிர்சோலை என்னும் பழம் பெயரைச் சூட்டி, இத்தகைய பல செயல்களைச் செய்வதற்கு உறுப்பாக—'மலைகள் அனைத்துக்கும் முருகனே தலைவன்' என்று வலிந்து கூறுவது — போதாயன ஸூத்ரகாரர் ஜயாதி₃ ஹோமத்தில் ஓதும் "**விஷ்ணு: பர்வதாநாம் அதி₄பதி:**" [விஷ்ணுவே மலைகளுக்குத் தலைவன்] என்னும் வேத₃ மந்திரத்திற்கு முரண்பட்டது என்று இவர் காட்டும் ஆத₄ாரமும் நடுநிலையாளர்களால் காணத்தக்கது. இத்தகைய இந்நூலின் பெருமைகளை விரிப்பிற்பெருகும்.

இந்நூலை வெளிக்கொணர அரும்பாடுபட்ட ஸ்ரீவில்லிபுத்தூர் அலங்காரம் தேவராஜய்யங்கார் ஸ்வாமிக்கும், குறிப்புரை வழங்கிய முன்னுள் "செந்தமிழ்" பத்திராதிபர் ஸ்ரீ உ. வே. T. K. இராமாநுஜ அய்யங்கார் ஸ்வாமிக்கும், அணிந்துரை வழங்கிய மகாவித்துவான் மே. வீ. வேணுகோபாலப்பிள்ளைக்கும் தமிழுலகமும், வைணவவுலகமும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளது.

| | |
|---|---|
| **ராக்ஷஸ-ஹு** | **இங்ஙனம்,** |
| **வைகாசி விசாகம்** | **ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,** |
| **24—5—1975** | **ஆசிரியர், "ஸ்ரீவைஷ்ணவ ஸுத₃ர்ஶனம்"** |

ஸ்ரீ:

ஸ்ரீ ஸௌந்தரவல்லீ ஸமேத ஸௌந்தரராஜ பரப்ரஹ்மணே நம:

**ஜம்புலிபுத்தூர் கிருஷ்ணய்யங்கார் ஸ்வாமி இயற்றிய**

# ★—சோலைமலைக் குறவஞ்சி—★

மூலமும் குறிப்புரையும்

*காப்பு*

*நேரிசை வெண்பா*

**1. பூமாது மாமணிநூல் பூணுமால் சோலைமலைக்**
**கோமான் எனநின்ற கொண்டற்குப்—பாமாறன்**
**செந்தா மரைஅடிகள் சேவித்துச் செப்புவன்யான்**
**பந்தாடல் கூர்குறத்திப் பாட்டு.**

## குறிப்புரை

[ குறிப்புரை வழங்குபவர்:- **ஸ்ரீ உ. வே.**
T. K. ராமாநுஜய்யங்கார் ஸ்வாமி, முன்னாள் **செந்தமிழ்ப்**
**பத்திராதிபர்**, மதுரை. உதவியாளர்:- **ஸ்ரீ உ. வே.**
அலங்காரம் தேவராஜய்யங்கார் ஸ்வாமி **ஸ்ரீவில்லிபுத்தூர்**]

*1.* காப்பு—*நூலாசிரியர் தாம் இயற்றத் தொடங்கிய நூல் இனிது முடியும் பொருட்டு அந்நூலின் தொடக்கத்துச் செய்யும் தெய்வ வணக்கம்.* பூமாது—*திருமகள். மாமணி—சிறந்த இரத்தினம் = கவுஸ்துபம். நூல்—பூணூல், பூணும்—அணிந்த. திருமகளையும் கவுத்துப ரத்தினத்தையும் பூணூலையும் மார்பில் தரித்த திருமாலாகிய கொண்டலுக்கு. சோலைமலையின்கண் அரசனாய்நின்ற கார்மேகத்துக்கு என்க. பாமாறன்—கவியால் பெருமைபெற்ற நம்மாழ்வார், பந்தாடல் கூர் குறத்திப் பாட்டு—(சுந்தரவல்லி) பந்தாடுதலில் தொடங்கி மிகும் குறவஞ்சி நூல். மாறன் செந்தாமரையடிகள் சேவித்துச் சோலைமலைக் கோமான் என நின்ற கொண்டற்குப் பந்தாடல் கூர் குறத்திப் பாட்டுச் செப்புவன் என இயைக்க.*

அவையடக்கம்

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

2. ஐந்துவகை இலக்கணமும் அவ்வவற்றின்
இலக்கியமும் அறியே னேனும்
சிந்தைதெளிந் தழகர்குற வஞ்சிநா
டகத்தமிழைச் செப்பல் முன்னோர்
முந்திடுநற் குணங்களினால் மனமகிழ்வர்
அமுதருளும் முழுநி லாவை
வந்தசிறு களங்கமதால் வெறுப்படையார்
எனும்உலக வழக்கம் கொண்டே.

*2. அவையடக்கம்—ஆசிரியர் சபையோர்க்கு வணக்கம் கூறுதல். ஐந்துவகை இலக்கணம்-எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் இவற்றின் இலக்கணங்களை விரிக்கும் நூல்கள். முன்னோர்—முன் எண்ணத்தக்க பெரியோராகிய சபையோர். முந்துதல்—மேம்படுதல். நிலாவுக்கு நற்குணங்கள்—ஒளியுடைமை, தண்மை, அமுதகிரணம் உடைமை முதலியன. குறவஞ்சி நூலுக்கு நற்குணங்கள் உயர்ந்த பாட்டுடைத் தலைவன் இயல்பும், புகழ்களும் ஆம். முழுநிலா—நிறைமதி. முழுநிலாவைக் கண்டு குணங்களினால் மகிழ்வர். அதனிடம் உள்ள சிறிய களங்கங் கண்டு வெறுப்படையார் என்னும் உலக வழக்கம் கொண்டு, முன்னோர், சோலைமலைக் கோமான் குணங்கூறும் இதனை ஏற்பர், என் அறியாமைகொண்டு இதனை வெறார் என்று ஆசிரியர் அவையடக்கம் கூறியவாறு.*

வணக்கம்

மாதா பிதா பிதாமகர்

கலித்துறை

3. மாதாவும் என்தாதை தெய்வங்கள் பெருமாளும்
வாழ்வைத்தரும்
மூதாதை யானசேஷாரியனும் அன்பாகி முன்னின்றுதாம்
வேதாவும் நவில்கின்ற திருமா லிருஞ்சோலை மேவும்பரன்
பாதார விந்தத்தில் இன்பூறு குறவஞ்சி பகர்விப்பரே.

3. இச்செய்யுளால் ஆசிரியர், தம் தாயும், தந்தையும், பிதாமகரும் அருளலால் இக்குறவஞ்சி நூல் இனிது நிறைவுறும் என்று அவரைப் போற்றுகிறார். என் மாதாவும், தெய்வங்கள் பெருமாளான என் தாதையும் என இயைக்க. தெய்வங்கள் பெருமாள்—தேவப்பெருமாள். இது ஆசிரியருடைய தந்தை திருநாமம். மூதாதை—பாட்டனர். சேஷாரியன்—சேஷாசாரியன். தாம்—அசைநிலை. வேதா—பிரமன். நவிலுதல்—விரும்புதல். சோலை—சோலைமலை. பரன் என்றது அழகரை. பாதாரவிந்தம்—அடித்தாமரை.

குரவர்

மணவாளமாமுனிவர்

எழுசீர்க் கழிநெடிலடி யாசிரியச் சந்தவிருத்தம்

4. தாள தாமரைகொள் ஏரிநீர்
நதிபுல் சாரல் சோலைமலை சாருமால்
காள மேகமதை வேடர்
பேதைதுதி காதை ஈதுவளர் காவலாய்
ஆள ராகிஇரு நாலு
மாகளிறெ டாரியர் பரவும் ஆளியாம்
வாள ராமன்மண வாள
மாமுனிவர் வாரி சாதபதம் வாழுமே.

4. தாளதாமரை கொள் ஏரி-தண்டையுடைய தாமரையைத் தன்னகத்தே கொண்ட நீர்நிலை. புல்—பொருந்திய. தாமரை ஏரியும் நீர்நதியும் பொருந்திய சாரலையுடைய சோலைமலையிலே சென்று தங்கிய மாலாகிய காளமேகமதை என்க. வேடர் பேதை-குறமகள். காதை ஈது-காதையாகிய இது. காதை—பாட்டு. வளர்தல்—மிகுதல்=நிறைவுறுதல். ஆளர்—சமர்த்தர். இருநாலு மாகளிறு—சிறந்த எட்டுயானைகள்—என்றது வைணவ சமயத்தைப் போற்றிவளர்க்கும்படி மணவாளமாமுனிவரால் திசைதொறும் யானைகளாக நிறுவப் பெற்ற ஆசாரியர் (அஷ்டதிக்கஜங்கள்) எண்மரை. ஆரியர்—நல்லோர். பரவுதல்—துதித்தல். ஆளி—சிங்கம். இது

*உவம ஆகு பெயராய் மணவாள மாமுனிவரைக் குறித்தது. வாள் அராமன் மணவாள மாமுனிவர்—ஒளியுடைய பாம்பரசனுகிய* **ஆதிசேஷாவதாரமான** *மணவாள மாமுனிவருடைய. வாரிசாதபதம்—தாமரையடிகள். சோலைமலை சாரும் மாலாகிய காளமேகத்தை வேடர் பேதை துதிக்கின்ற காதையாகிய இது நிறைவுறுங் காவலாய். மணவாள மாமுனிவர் பதம் வாழும் என முடிவு கொள்ளும். ஆளரும் ஆகி. இரு நாலு மாகளிறோடு ஆரியரும் பரவும் ஆளியும் ஆகிய மணவாள மாமுனிவர். வாளராமன் ( ஆகிய ) மணவாள மாமுனிவர் என்க.*

*திருவாய்மொழிப்பிள்ளை*

*அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

**5. வாமனமச் சியம்வாயு வராக**
**முடன் பிரமாண்டம் வழுத்து கின்ற**
**வாமனன்மான் மியம் இடப வரைப்**
**புகழென்றறிந்ததிலே மருவி வாழும்**
**வாமனனைத் துதிசெய்கிற வஞ்சி**
**நாடகம் தமிழில் வணங்கிப் பாட**
**வா மனனே எந்தைதிரு வாய்மொழிப்**
**பிள்ளையின் சரண மலருட் கொண்டே.**

*5. திருவாய்மொழிப்பிள்ளை வைணவ சமயாசாரியரில் ஒருவர். வாமனம். மச்சியம். கூர்மம். வராகம். பிரமாண்டம் என்பவை புராணங்கள். மான்மியம்—தலமகிமை. இடப வரை—யென்றது சோலைமலையை. வாமனம் முதலிய புராணங்களால் பேசப்படுவது இடபகிரியின் பெருமை என்றவாறு. அதில்—அவ்விடபகிரியில். வாமனன்—என்றது சுந்தரத்தோளுடையானை. மனமே! குறவஞ்சி நாடகம் தமிழில் பாட எந்தை திருவாய்மொழிப்பிள்ளையின் சரண மலர் உட்கொண்டு வணங்கி வா என இயைக்க. எந்தை திருவாய்மொழிப்பிள்ளை—எம்முடைய சுவாமியாகிய திருவாய்மொழிப்பிள்ளை. சரணம்—திருவடி.*

*பரமகுரு—எதிராசர்*

*பன்னிருசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

6. வாதுசெ யும்சம ணப்புண
  ரிக்கொரு வடவா நலமானேன்
வலிமைகொள் பாடண் டக்குல
  கிரிதகர் மழையிடி யேறானேன்
பேதுறும் உலகா யதஇரு
  ளுக்கொளி பெருகிய கதிரானேன்
பெட்புறு சாக்கிய மதமத
  கரிநிலை பிரிகே சரியானேன்
சாதுவெ னும்வை ணவசா
  தகமகிழ் தருசல தரமானேன்
சங்கர மத்துவ சிந்தாந்தப்
  பணி தாழ் ககபதியானேன்
சூதுசெய் மாயைத் தலைமிசை
  நின்ற துணைத்தாள் எதிராசன்
சோலை மலைக்குற வஞ்சி
  விளம்பத் துணைவந் தருள்வானே.

*6. பரமகுருவாகிய எதிராசர் என்க. பரமகுரு—மேலான குரு. எதிராசர் என்றது இராமானுசரை. சமணப் புணரி—சமணர்களாகிய கடல். வடவாநலம்—வடவைத் தீ. இது பிரளயகாலத்தில் உலகத்தை அழிப்பது. பாடண்டக் குலகிரி—பாஷண்டிகளாகிய பெரிய மலை. பாஷண்டர்—தீய ஒழுக்கமுள்ள மதவாதியர். பேதுறும்-மயங்கிய. உலகாயதம்-சாருவாக மதம். உலோகாயதராகிய இருளுக்கு என்க. கதிர்—சூரியன். பெட்பு—அன்பு. பெட்புறு சாக்கியமத மதகரி நிலைபிரி கேசரி—உயிர்களிடத்து அன்புகொண்ட சாக்கிய (புத்த) மதவாதிகளாகிய மதயானைகளின் நிலையைப்போக்கும் சிங்கம். வைணவர்களாகிய சாதகம் என்க. சாதகம்—மழைத்துளியைப் பருகி உயிர் வாழ்வதொரு பறவை. சலதரம்—மேகம். சங்கர சித்தாந்தமும் மத்துவ*

*சித்தாந்தமுமாகிய பாம்புகள் ஒடுங்கும் கருடனுனவன் என்றவாறு. பணி—பாம்பு. ககபதி-கருடன். துணைத்தாள்-திருவடியிணை. இதனுல் எதிராசர் பிறமதத்தினரை வெற்றி கொண்ட பெருமை பேசப்பட்டது.*

*பிரகலாதாழ்வான், தொண்டரடிப்பொடியார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார், மதுரகவியாழ்வார்*

*எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

**7. இலையெனும்சிற் றிடைச்சோதை களிக்க வாயுள்**
**ஈரேழு புவனமும்தோன் றிடச்செய் மாயோன்**
**சொலைவிரும்பும் அறிஞர்செவி செழிக்கச் செய்யும்**
**சோலைமலைக் குறவஞ்சி தொடுக்க வேதான்**
**மலைமிதக்க வருபிரக லாதாழ் வானும்**
**வணங்கு தொண்டரடிப்பொடியும் பெரியாழ்வாரும்**
**கலைபுகலும் சம்பந்தன் றனைமுன் வென்ற**
**கலியனும்கோ ளூர்முனியும் காப்புத் தானே.**

*7. சோதை—அசோதை; முதற்குறை. இல்லையென்று சொல்லத்தக்க நுண்ணிய இடையினையுடைய அசோதை என்றவாறு. ஈரேழுபுவனம்—பதினுலுலோகம். மாயோன்—கருநிறம் உடையோன் = கண்ணன். சொல்—புகழ் தொடுத்தல்—ஒன்றுடன் ஒன்று இயைபுறப் புனைதல். பிரகலாதன் 'ஹிரண்யாய நம:' என்னுது இரணியனேடு மாறுபட்ட நிலையில் அவன்மேல் சினம் மிக்க இரணியன் பிரகலாதனை மலையொடுகட்டிக் கடலில் இட்டபோது கடலில் அமிழ்ந்தழியாது மலையோடு மிதந்துநின்றமையின் 'மலைமிதக்க வரு பிரகலாதாழ்வானும்' என்ருர். பிரகலாதனை ஆழ்வான் என்றது அவன் பக்தி மிகுதிகொண்டு. கலை—என்றது சாத்திரம் கூறும் பொருள்களை. கலியன்-திருமங்கையாழ்வார். திருஞானசம்பந்தரைத் திருமங்கையாழ்வார் வென்ருர் என்று ஒரு கதை வழக்குக்கொண்டு. சம்பந்தன்றனை முன் வென்ற கலியனும் என்ருர். கோளூர்முனி—திருக்கோளூரில் உதித்த மனனசீலராகிய மதுரகவியாழ்வார்.*

*ஆதிசேடன், கருடன், சேனைமுதலியார், கஜேந்திரன்*

8\. சுதரிசனம் பாஞ்ச சன்யம் படங்கள் தோறும்
சுமந்தகல்பூ ஒருதலையிற் சூடுங் கோவும்
பதம் அளவு பணிகளுடன் அநந்தன் ஆதிப்
பணிகள் எட்டும் புனைந்தபல பறவைத் தேவும்
நிதரிசன மாய்அயனு தியர்க்கு வேலை
நியமிக்கும் சேனைமுதலியும் நீள்ஞான
மதமலையாம் கசேந்திரனும் அழகர் சோலை
மலைக்குறவஞ் சியைப்புகலும் வரந்தந் தாரே.

*8. சுதரிசனம்—திருமால் வலக்கரத்துத் தரித்த சக்கரம். பாஞ்சசன்யம்—திருமால் இடக்கரத்துத் தரித்த சங்கம். சுதரிசனத்தையும் பாஞ்சசந்யத்தையும் படங்கள் தோறும் சுமந்து என்க. சுமத்தல்—தாங்குதல். ஆதிசேஷனுக்கு ஆயிரம் படங்களாதலான் படங்கள் தோறும் என்றார். உயர்ந்த சாதிப் பாம்புகளின் படத்தில் சங்கு சக்கரக் குறிகள் காணப்படும். அகல்பூ—அகன்ற (இடப்பரப்புடைய) பூமி. அகல்பூ ஒருதலையிற் சுமக்கும் கோ என்றது நாக ராஜனாகிய ஆதிசேஷனை. பூமியை ஆதிசேஷன் தாங்குவ தாகக் கூறுவது கவிமரபு. பதம் அளவு பணிகளுடன்—தன் அடிகளில் வந்து (அடைக்கலமாக) அடைந்த பிற பாம்புகளுடன். அனந்தன் ஆதிப் பணிகள் எட்டு—அனந்தன் முதலான எட்டுப் பாம்புகள். அவை; அனந்தன் வாசுகி. தக்கபாலன், சங்கன், குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடகன் என்பவை. பறவைத்தேவு—பறவையாகிய தெய்வம்=கருடன். நிதரிசனம்—நற்றெளிவு. அயனாதி யர்க்கு—பிரமன் முதலியோர்க்கு. வேலை நியமிக்கும்—(அவரவர் செய்யவேண்டிய) பணிகளை அறுதியிட்டுரைக்கும். சேனை முதலி—திருமால் தொண்டர்களில் தலைவர்.*

*நித்தியசூரிகள்*
*கலிவிருத்தம்*

9\. பூமகளுறை பூதரமுள பூரணன்அருள் பூணும்ஓர்
தூமணம்உள சூரிகள்அடி சூடையின்மிசை சூடியே

**பாமகளிர்கள் பாலகர்உணர் பான்மையின் இது பன்னுவேன்**
**மாமதிதவழ் மால்விடைமலை மால்மகிழ்குற வஞ்சியே.**

*9. பூமகள்—திரு. பூதரம்—மலை. பூரணன்—நிறைவுடையோன். பூமகள்....பூரணன்—திருமகள் நிலைபெற்று வாழும் மலைபோன்ற திருமேனியையுடைய நிறைவுடைய திருமால். சூரிகள்—பரமபதத்து வாழும் நித்தியர். சூடை—தலை. பாமகளிர்—அழகிய பெண்கள். சூரிகளடி சூடையின் மிசை சூடி விடைமலைமால் மகிழ் குறவஞ்சியாகிய இதை மகளிர், பாலகர் உணர்பான்மையின் பன்னுவேன் என இயைக்க.*

*பிரமன்*

*எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

**10.** **அண்ட கோடிகளை யும்பு ராரியொ**
**டனந்த வானவரை யுந்தரும்**
**புண்ட ரீகன்ஒளிர் தண்டை சேர் கழல்கள்**
**பொங்க மாய்மிகவ ணங்கியே**
**தொண்டர் கூடிஇசை கொண்டு பாடி நசை**
**துன்றி ஆடமிசை சொல்லுகேன்**
**கொண்டல் சோலைமலை விண்டு காதைசில**
**கொஞ்சி ஓதுகுற வஞ்சியே.**

*10. புராரி—சிவபிரான். அனந்தவானவர்—எண்ணி முடிவு காணற்கரிய (எண்ணற்ற) தேவர். புண்டரீகன்—தாமரை மலரில் உறையும் பிரமன். பொங்கம்—ஒழுங்கு= முறை. நசைதுன்றி—விருப்பம் மிக்கு. மிசை சொல்லுவேன்—உயர்வாகச் சொல்லுவேன். கொண்டல்—மேகம். விண்டு—திருமால். காதை—பாடல். இங்கு பிரமனையும், மேலே சரசுவதியையும் துதிப்பது அவர்கட்கு அந்தர்யாமியான நாராயணனைத் துதிப்பதேயாமாகையால், ஆசிரியரின் வைணவ மரபுக்குக் குறையில்லை.*

*சரசுவதி*

*பதினறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

11. முதும றைகள்எழு கோடிநன் மந்திரம்
மொழிபிர ணவம்எழுது ஏடும் இடங்கையில்
முதன்மைகொள் மகர வீணையும் மஞ்சுள
மொழிபகர் மதுர மோகன வெண்சுகம்
பதும மணிவடம் நாலுக ரங்களுட்
பளப ளெனும்ஒரு கரகமு டன்பல
பணிகள் அணிபெடை யோதிமம் என்று தன்
பதிசது முகவர் கூடி நலந்திகழ்
சததளம் இலகு தாமரை யொண்மலர்
தனைஅ மளியணை ஆகவு கந்துறை
சகல விபுதரும் வேதிய ரும்துதி
சரசு வதிஇரு தாளை வணங்குதும்
விதுரவி துருவன் மேலுற ஓங்கிய
விடைமலை யில்நிதம் மேவழ கன்புகழ்
மிகுகுற மின்இசை நாடகம் இங்கிதை
விகிதமு டன்இனி தாக விளம்பவே.

*11. விடைமலையில் மேவு அழகன் புகழ்மிகு குற மின்இசை நாடகம் இதை விகிதமுடன் இனிதாக விளம்ப. நாலுகரங்களுள். இடங்கையில் ஏடும் மகர வீணையும் (வலங்கையில்) பதும மணிவடம், கரக முடன் கொண்ட வெண்சுகம். பல பணிகள் அணிபெடை யோதி மம் என் றுதன் பதி சதுமுகவர் கூடி நலம் திகழ் சரசுவதி இருதாளை வணங்குதும் என முற்றுவிக்க. சததள மிலகு தாமரையொண் மலர்தனை அமளி அணையாக உவந்துறை சரசுவதி. முதுமறைகளும். ஏழுகோடி நன் மந்திரங்களும் பாராட்டிப் பேசப்படுகிற பிரணவமும் எழுதப்பட்ட ஏடு என்க. முதுமறை—பழைய வேதங்கள். பிரணவம் என்பது ஓம் என்பதனை; இடங்கை—இடக்கை. முதன்மைகொள் மகரவீணை—வீணைகளுள் தலைமையான மகரமீன் வடிவுடைய*

*வீணை. மஞ்சுளம்—அழகு. மதுரமோகன வெண்சுகம்—இனிமையும், வசீகரிக்கும் தன்மையும் வாய்ந்த வெள்ளைக் கிளி. பதும மணிவடம்—தாமரை மணிமாலை. கரகம்—கமண்டலம். பலபணிகள் அணி—பலவாகிய ஆபரணங்களை அணிந்த. பெடை யோதிமம்—பெட்டை அன்னம். பதி—கணவன். தன் என்றது சரசுவதியை. தன் பதியாகிய சதுமுகவர் என்க. சதுமுகவர்—நான்கு முகங்களையுடைய பிரமன். சததளம் இலகு தாமரை ஒண்மலர்தனை—நூறு இதழ்களால் விளங்கும் நல்ல தாமரை மலரை. அமளி அணை ஆக—படுக்கையும், ஆசனமும் ஆக; மலரை அமளியும் அணையுமாக உவந்து என்க. சகல விபுதரும் வேதியரும்—எல்லாத் தேவர்களும் வேதம் வல்லுநரும். விது—சந்திரன். ரவி—சூரியன். சந்திரமண்டலமும் சூரியமண்டலமும் துருவன் மண்டலமும் ஆகிய இவற்றுக்கும் மேலே மிகவுயர்ந்த விடைமலை என்க. விடைமலை என்பது சோலை மலையின் பல பெயர்களுள் ஒன்று. குறமின்—குறவஞ்சி. குறவஞ்சியாகிய இசையொடு கூடிய நாடகம் என்க. இங்கு அசை. விகிதமுடன்—தகுதியோடு. விளம்ப—சொல்ல.*

*சூடிக்கொடுத்த நாச்சியார்*

*அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

**12.** **பெரியாழ்வார் திருமகளைப் பெரும்பூதூர்**
**மாமுனிக்குப் பின்னானை**
**விரியாழி துயில்அரங்கர் தேவியைநூல்**
**வேதனுக்கு மேலாம் தாயை**
**வரிஆர்கட் கலைமகட்கு மாமியைப்பாவையை**
**மொழியை வகுத்தாண் டாளைத்**
**திரியாதோர் மனத்திருந்து தியானிக்கிற்**
**சித்தியெலாம் செய்கு வாளே.**

*12. பெரியாழ்வர்—ஆழ்வார்களில் ஒருவர்; ஆண்டாளுக்குத்தந்தை. பெரும்பூதூர் மாமுனி—இராமானுஜர். இராமானுஜரை ஆண்டாளுக்கு அண்ணன் என்பது வைண*

வர் மரபு. வேதன்—பிரமன். ஆண்டாள் பகவானுடைய தேவியரில் ஒருவரான பூமிதேவியின் அமிசமாய் அவதரித்து, திருமாலின் அர்ச்சாரூபியான நம்பெருமாளை மணந்தமையின், வேதனுக்கு மேலாம் தாய் என்றும், கலைமகட்கு மாமி என்றும் கூறலாயிற்று. ஸ்ரீரங்கநாதனே நம்பெருமாளாக ஸேவை சாதித்தலின் விரியாழி துயிலரங்கர் என்றார். ஆழி என்றது பாற்கடலை. பாவையை மொழியை வகுத்து ஆண்டாளை-திருப்பாவையையும் (நாச்சியார்) திருமொழியையும் அருளிச்செய்து உலகை உய்யக்கொண்டவளை. வகுத்தல்—கூறுபடுத்தி உரைத்தல். சித்தியெல்லாம் செய்குவாள்—விரும்பியதெல்லாம் நிறைவேறச் செய்வாள். யானும் ஆண்டாளை ஒருவழிப்பட்ட மனத்தொடிருந்து தியானிப்பேன்; அதனால் யான் இயற்றத் தொடங்கிய இக்குறவஞ்சி நூல் இனிது முற்றுப்பெறும் என்றவாறு.

*பெரியபிராட்டியார்*

*எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

**13.** பீடம் அங்கை மிடறொடிணைமுலை
பேணு பாதம் இரண்டின் புறமுளம்
நாடரும்நகை நீள்குழல் வாள்விழி
நாலொடைந்தென நாட்டும் இடங்களில்
கூட மாபது மாதி நிதிகளைக்
கொண்டு யான்நிதம் கோரும் வரும்தரும்
பாடகக் கழற் பூமின் குறவஞ்சிப்
பாட்டி யம்பும் படிக்கருள் செய்வளே.

*13.* பெரியபிராட்டியார்—திருமகள். பீடம்—ஆசனம். மிடறு-கழுத்து. பேணுதல்-விரும்புதல். பாதம் இரண்டின் புறம் உளம் என்றது புறவடி உள்ளடிகளை. நகை—பல். குழல்—கூந்தல். வாள்விழி—வாள் போலும் கண்; ஒளி பொருந்திய கண் என்னலும் ஆம். நாலொடைந்து—ஒன்பது. பதுமாதி நிதிகள் என்றது பதுமம், மகாபதுமம், சங்கம், கர்வம், கச்சபம், முகுந்தம், நந்தம், நீலம், மகரம்

என்று கூறப்படும் நவநிதிகளை. இவை குபேரனுக்கு உரியவை. கோருதல்—வேண்டுதல். பாடகம்—காலில் அணியும் ஓர் அணி. கழல்—அடி. பூமின் (தாமரைப்) பூவில் உறையும் திருமகள். பீடம். கை. மிடறு. தனம். புறவடி. உள்ளடி. நகை. குழல். விழி ஆகிய ஒன்பது உறுப்புக்களிலும் பதுமம் முதலிய ஒன்பது நிதிகளையும் கொண்டு யான் நிதம் வேண்டும் வரங்களைத் தரும் திருமகள் இக் குறவஞ்சி நூலை இயற்றும்படி எனக்கு அருள் செய்வள் என்றவாறு.

பூமிதேவி

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

14. மலைமுலையாய்த் திசைமுகமாய்க் குழன் முகிலாய்
மதிகதிரும் வயங்கும் கண்ணுய்க்
கலைகடலாய் உடுமலராய்ப் பதி திருமா
லாய்இமயக் கன்னி தன்னைப்
பலவிதநூன் முறைகளினும் பவுத்திரி யாக்
கியமறையின் பாட்டி யான
இலவிதழாள் புவிமகள்தாள் என திதயத்
திருந்திந் நூல் இயம்பும் தானே.

14. திசை—திக்கு. குழல்—கூந்தல். முகில்—மேகம். மதி—சந்திரன். கதிர்—சூரியன். வயங்குதல்—விளங்குதல். கலை—ஆடை. உடு—நட்சத்திரம். பதி—நாயகன். இமயக் கன்னி—இமயம் என்னும் மலையரசன் மகளாகிய பார்வதி. பவுத்திரி—மகன் மகள். மறையின் பாட்டி—வேதங்களாகிய இனிய பாடல்களை உடையவள். இதனுள் பாட்டி என்னும் முறைப்பெயரும் தொனித்தது. இலவுஇதழாள்—இலவம் பூப்போலும் உதடுகளையுடையவளான. புவிமகள்—பூமிதேவி. இதயம்—மனம். மலைகளே தனங்களாகவும். திசையே முகமாகவும். முகிலே குழலாகவும், விண்மீன்களே குழலிற்சூடிய பூக்களாகவும். மதியும் கதிரும் கண்களாகவும், இலவம்பூவே அதரம் ஆகவும். கடலே ஆடையாகவும். திருமாலே நாயகனுகவும். மலையரசன் மகளாகிய பார்வதியே பவுத்திரியாகவும். வேதங்களே தன் புகழ்கூறும்

*பாடல்களாகவும் கொண்ட பூமிதேவியின் திருவடிகள் என் மனத்தில் நிலேத்து இந்நூலே இயற்றுவிக்கும் என்ற* **வாறு.** *இமயமலையைப் பூமிதேவியின் மகனுகக்கொண்டு அவன் மகளாகிய பார்வதியை பூமிதேவியின் பவுத்திரி என்ருர்.*

*நீளாதேவி*

**15.** **முகம்பதும ராகம்நகை முத்தம் இதழ்**
**பவளம்விழி மொழியும் நீலம்**
**சுகந்தமணி குழல்காந்தி மரகதம் நற்**
**றிருமேனி சுடர்மா ணிக்கம்**
**நகம்வயிடூ ரியங்கரங்கோ மேதகம்**
**பாதங்களில் வாள்நக மற்ருென்ருய்ப்**
**புகன்றநவ விரத்திஞ கரவடிவாம்**
**நீளேஇந்நூல் புகல்விப் பாளே.**

*15. நீளாதேவி—திருமால் தேவியருள் ஒருவராகிய நீளே. பதுமராகம் முகமாக, முத்தம் பல்லாக, பவளம் இதழாக, நீலம் கண்ணுக, மரகதம் குழலாக, மாணிக்கம் திருமேனியாக, வைடூரியம் கைநகமாக, கோமேதகம் கைக ளாக, வயிரம் கால்நகமாகக்கொண்டு நவமணிகளும் விளே யும் கடலின் வடிவாக விளங்குகின்ற நீளாதேவி இந்நூலேப் புகல்விப்பள் என்றவாறு. சுகந்தமணிகுழல்—நறுமண முடைய பூக்கள் முதலியவற்றையணிந்த கூந்தல். காந்தி மரகதம்—ஒளியுள்ள மரகதம். சுடர்—ஒளி, கரம்—கை. வாள்நகம்—ஒளியுள்ள நகம். மற்ருென்று என்றது நவ மணிகளில் வயிரத்தை.*

*காளமேகப் பெருமாள்*

*இருபத்துநான்குசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

**16.** **கொடியகயி டவன்மதுவொ டசுரர் கடல் வடியக்**
**குடித்திடும் காளமேகம்**
**குறையாத பரமபத நெடுவெளி முகட்டினிற்**
**குடிகொண்ட காளமேகம்**
**கோதிலா தொளிர்வயின தேயனு கின்றபொற்**
**குன்றின்வரு காளமேகம்**

கோணமிடை யெங்குமிடை பெரியதிரு மேனியைக்
கொண்டிடுங் காளமேகம்
சடையனழி யூழிவெங் கனலினும் காற்றினும்
சலியாத காளமேகம்
சங்கரைய ஞலண்ட முடைபட முழங்கியே
சத்தித்த காளமேகம்
சரபம்உயிர் ஒழிய அதின் அகலமதின் உகிர்கொடிடி
தந்தவன் காளமேகம்
தானென்றும் ஒழியாது பேரொளி செய் மின்னைத்
தரித்தநம் காளமேகம்
திடமுநெடு மையுமுடைய தாயென்றும் அழிவில்வெம்
சிலைகொண்ட காளமேகம்
செப்பருந் தவரெனும் சாதகங் களைமகிழ்வு
செய்திடுங் காளமேகம்
சிலைவருடம் இன்றியிரு விழிகளால் அருள்மாரி
சிந்திடுங் காளமேகம்
செகமடங் கலினும்உள சகலசந் தாபமும்
தீர்த்திடும் காளமேகம்
மடமடென ஊழிபல மொழியினும் தனது நிறம்
மாருத காளமேகம்
மலரயன் கயிலையரன் முதலாய வோடதியை
வருவித்த காளமேகம்
மைம்முகிற் கெதிராறும் எட்டும்உண் டெதிரின்றி
வளருமொரு காளமேகம்
மருவுதிரு மோகூரின் உண்டதின் றழகர்குற
வஞ்சியைக் காப்பதாமே.

*16. காளமேகம் என்ற தொடர் பெருமழை பொழி யும் மேகத்தையும், பாண்டி நாட்டுத் திருமால் திருப்பதி களுள் மதுரைக்கு அணித்தான திருமோகூரில் எழுந்தருளி யுள்ள இறைவனையும் குறிக்குமாயினும், காளமேகத்தினும் காளமேகப்பெருமாள் விஞ்சிய பெருமையுடையர் என்று ஆசிரியர் இச்செய்யுளால் விளக்கும்முறை படித்துப் படித்து ரசிக்கத்தக்கது. மது, கயிடவன் என்பவரோடு அசுரர்க*

ளாகிய கடல் வற்றும்படி குடித்திடும் காளமேகம் என்க. வடிதல்—வற்றுதல். பரமபதமாகிய நீண்ட ஆகாய முகட்டில் என்க. வெளி—ஆகாயம். கோதிலாது ஒளிர் வயினதேயனுகின்ற பொற்குன்றில் வரு—குற்றமற்று விளங்கும் கருடனுகிய பொன்மலையின் மேல் வரும். வயினதேயன்—வினதையின் புதல்வன் = கருடன். கோணம்—வளைவு. இடை—பூமி. மிடைதல்—நிறைதல். வளைந்த பூமிப்பரப்பெங்கும் நிறைந்த பெரியதிருமேனி என்க. சடையன்—சிவபெருமான். ஊழிவெம் கனலினும் ஊழிக்காற்றினும்—கொடிய பிரளய காலாக்னியாலும். பிரளயகாலக் காற்றினுலும். சலியாத—தளராத. சங்கரையன்—சங்கராசன் = பாஞ்சசன்னியம் சத்தித்தல்—ஒலித்தல். சரபம் உயிரொழிய அதன் மருமமிசை உகிர்கொடு இடிதந்த வன் காளமேகம்—நரசிங்கப்பெருமானுடைய மிடுக்கை அடக்க சிவன் எடுத்து வந்த சரபமான உயிரொழியும்படி அதன் உயிர்நிலையில் நகத்தால் தாக்குதலைச் செய்த வலிய காளமேகம். சரபம்—எட்டுக் கால்களையுடையதொரு பறவை; சிங்கத்தின் நாக்கைக் கொத்தித்தின்று வாழ்வது. மருமம்—உயிர்நிலை. உகிர்—நகம். கொடு—கொண்டு; மூன்றும் வேற்றுமைச் சொல்லுருபு. இடிதந்த—இடித்த = தாக்கிய. தான்—அசை. என்றும் ஒழியாது—எக்காலத்திலும் நீங்காமல். பேரொளி செய் மின் என்றது திருமகளை. தரித்தல்—தாங்குதல். திடம்—வலிமை. நெடுமை—நீளம். சிலை என்றது சார்ங்க வில்லை. செப்பரும்—சொல்லுவதற்கரிய தவத்தினராகிய சாதகங்களை என்க. சாதகம்—மழைத்துளியை உண்டு உயிர் வாழும் ஒரு பறவை. சிலைவருடம்—கல்மழை. அருள்மாரி—கருணைமழை. செகமடங்கலினும்—உலகம் அனைத்திலும். சகல சந்தாபமும்—எல்லா வெப்பங்களையும். மலர் அயன் கயிலை அரன் முதல் ஆய் அவ்வடதியை வருவித்த—தாமரை மலரில் தங்கிய பிரமனுக்கும். கயிலைமலையில் தங்கிய சிவபெருமானுக்கும் தலைவனுய். அந்த அமுதத்தைத் தோற்றுவித்த. முதல்—முதற்கடவுள். அ—பண்டறிசுட்டு. ஓடதியென்றது அமுதத்தை. மைமுகில்—கரியமேகம்; என்றது காளமேகத்தை. ஆறும் எட்டும் என்றது-பதினுலு லோகங்

களையும். மைம் முகிற்கு எதிராகப் பதினலு லோகங்களை யும் பிரளய காலத்தில் உட்கொண்டு ஒப்பின்றி வளரும் ஒரு காளமேகம் என்க.

அழகர்

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

17. நந்தானை இடக் கரத்தில் நந்தானைத்
 தருமனுக்காய் நங்கள் குன்றில்
வந்தானைப் படிப்பரிசு வந்தானைப்
 புயங்களற வாணற் குப்போர்
தந்தானைச் சிவனயனிற்
 றந்தானை யமுதமரர் தழைக்க நல்கும்
சிந்தானைத் திருவுளங்க
 சிந்தானை அழகனையே செப்பு வேனே.

17. நந்தானை—அழியாதவனை. நந்துதல்-அழிதல். இடக் கரத்தில் நந்தானை—இடக்கையில் (பாஞ்சசன்னியமென்னும்) சங்கத்தை உடையவனை. தருமன் என்றது தருமதேவ தையை. பகவான் தருமதேவதைக்கு அருள்புரிவதற்காக திருமாலிருஞ்சோலைமலையில் அழகராகத் தோன்றினர் என்பது தலபுராணம். நங்கள்குன்றம் — திருமாலிருஞ்சோலை மலை. 'நங்கள் குன்றம் கைவிடான்' என்பது திருவாய்மொழி. (10-7-4). படிப்பரிசு உவந்தானை-பூமிதேவியின் தன்மையை விரும்பியவனை. வாணற்குப் புயங்கள் அறப்போர் தந்தானை என்க. வாணன்—பாணாசுரன். புயம்—தோள். வாண னுடைய ஆயிரம் தோள்களும் அற்றுவிழும்படி போர் செய்தவனை என்றவாறு. அயனிற் சிவன் தந்தானை— பிரமனிடத்துச் சிவனைத் தோற்றுவித்தவனை. அமரர் தழைக்க அமுது நல்கும் சிந்தானை—தேவர்கள் விருத்தி யடையும்படி அமுதுகொடுத்த கடலையுடையவனை. அமரர்— தேவர். நல்குதல்—கொடுத்தல். சிந்து-கடல். இங்கே திருப்பாற்கடலைக் குறித்தது. திருவு(ள்)ளம் கசிந்தானை— இளகிய திருவுள்ளமுடையவனை. நந்தான். வந்தான். சிந்தான் என்பவை மீட்டும் மடங்கிவரப் புணர்த்த நயம் காணத்தக்கது.

**18.** அலைத்தானைக் கடலைமுன்பா லலையானை
அன்பருள்ளம் அரங்க மாக
நிலைத்தானைத் தன்வரமோர் நிலையானைப்
பகையையெல்லாம் நீற தாகத்
தொலைத்தானைக் கசடர்கட்குத் தொலையானை
இரணியனைத் துரும்பா யெண்ணி
மலைத்தானைத் தமிழ்ச்சோலை மலையானை
அழகனையே வழுத்து வேனே.

*18. முன் கடலை அலைத்தானை என இயைக்க. முன்—முன்னே (இராமாவதாரத்தில்). கடலை அலைத்தானை—தெற்குக் கடலை வருத்தியவனை. அலைத்தல்—வருத்துதல் என்றது—தெற்குக்கடல் வானரப்படையோடு இலங்கை செல்லத் தடையாயிருந்தமையால், இராமன் அக்கடலை நோக்கிச் சினந்த செயலை. 'அலைத்தானை' என்று கடல் கடைந்தமையைக் கூறுகிறதாகவுமாம். பால் அலையானை—பாற்கடலை உடையவனை. அலை—ஆகுபெயராய், கடலை உணர்த்தி நின்றது. உள்ளம்—மனம். அரங்கம்-மேடை, ஸ்ரீரங்கம். தன்வரம் ஓர் நிலையானை-தன் மேன்மை என்றும் குன்றுதலின்றி ஒரே நிலையில் உள்ளவனை. நீறு—சாம்பல். கசடர்—குற்றம் உள்ளவர். கசடர்கட்குத் தொலையானை—குற்றமுள்ளவர்களால் அழிக்கப்படாதவனை. மலைத்தல்—போர் செய்தல். இதனுள், அலைத்தான் அலையான், நிலைத்தான் நிலையான், தொலைத்தான் தொலையான் என முரண்படத் தொடுத்த நயம் காணத்தகும்.*

**19.** வஞ்சர்மனத் தொன்றானை வாகுமிகத்
திரண்டானை மறமுன் றானைச்
செஞ்சொலது நாலானைச் சிவன்அயற்கும்
அஞ்சானைச் சிலம்பா றானை
விஞ்சுமுகிற் கேழானை மெய்ம்மறைக்கும்
எட்டானை விநவத் தானைப்
பஞ்சினடித் தேவகிகர்ப் பத்தானை
அழகனையே பற்று வேனே.

*19. வஞ்சர் மனத்து ஒன்றானை—பொய்யர் மனத்தே பொருந்ாதவனை. வஞ்சம்—பொய். ஒன்றுதல்—பொருந்துதல். வாகு மிகத்திரண்டானை—மிகத்திரண்ட தோள்களை உடையவனை. வாகு—தோள். மறம் ஊன்றானை—தீவினையை அழிப்பவனை. மறம்—தீவினை. ஊன்றுதல்—நிலைக்க வைத்தல். செம் சொல் ஒரு நாலானை—செவ்விய ஒரு நான்கு சொற்களை உடையவனை. ஒரு நாலு சொற்கள்—இயற்சொல். திரிசொல். திசைச்சொல். வடசொல் என்பவை. இறைவன் மொழியுருவாய் நிற்றலின், செஞ்சொல் ஒரு நாலானை என்றார். "புல்லாணித் தென்னன் தமிழை வடமொழியை" (பெரியதிருமடல் 131) என்றார் திருமங்கை மன்னனும். நாலுமறைகளால் சொல்லப்படுபவனை என்றுமாம். சிவனயற்கும்—சிவற்கும் அயற்கும் என்க. சிவனயற்கும் அஞ்சானை-சிவனுக்கும் பிரமனுக்கும் அஞ்சாதவனை. சிலம்பாறானை—சிலம்பாற்றை (நூபுர கங்கையை) உடையவனை. விஞ்சும் முகிற் கேழானை—மேம்பட்ட மேக வண்ணனை. விஞ்சுதல்—மேம்படுதல். முகில்—மேகம். கேழ்—நிறம். மெய்ம்மறைக்கும் எட்டானை—உண்மையான வேதங்களுக்கும் அகப்படாது நிற்பவனை. மறை—வேதம். எட்டுதல்—அகப்படுதல். விநவத்தானைப் பஞ்சின் அடித் தேவகி கர்ப்பத்தானை—சிறந்த புதிய சேலையினையும். செம்பஞ்சுக் குழம்பணிந்த அடிகளையும் உடைய தேவகியின் கர்ப்பத்திலே தங்கியவனை. வி—சிறப்புப் பொருளுணர்த்தும் ஓர் உபசர்க்கம். நவம்—புதுமை. தானை—சேலை. பஞ்சு—செம்பஞ்சுக்குழம்பு. தேவகி—கண்ணனைப்பெற்ற தாய். விநவத்தானை—சிறப்புற்ற புதுமையை உடையவனை என்றுமாம். இதனுள் ஒன்றுமுதல் பத்துவரையுள்ள எண்கள் தொனிக்கப் புணர்த்த நயம் காணத்தகும்.*

*இப்பிரபந்தம் பிறந்த காரணம்*

*பின்வரும் மூன்று செய்யுளும் குளகம்*

**20.** ஊணுறக்கம் பயம்புணர்ச்சி கோபம்மகிழ்ச்
சியில்விலங்கும் ஒப்பென் றாலும்

மாணுறுமெய்ஞ் ஞானமெனும் நல்லறிவால்
மானவரே மகாத்து மாவாம்
வேணுமென்று மெய்ஞ்ஞானம் விரும்பாத
மனிதர்களும் விலங்க தாவார்
காணுமென்று மனுமுதலாம் பலநூலும்
எடுத்தியம்பக் கற்ற தாலே.

21. பலவுயிரி லரிதுநர செனனம்அதில்
அரிதுமறை படிப்பார் சன்மம்
பலமறையோ ரினுமரிது பாகவத
மார்க்கம்அது பற்றி வாழும்
பலவயிண வரினும்அரி தரிபதமே
பரமென்னும் பத்தி யோகம்
பலர்புரியும் அதினுமரிது அரிபரவத்
துவென்றறியும் பரிசு தானே.

22. அறிவருநற் சுருதியுக்தி அனுபவங்க
ளாலிருபத் தைந்திற் கூறும்
குறியுளஇச் சீவன்முதற் றத்துவங்கள்
தமையடிமைக் குழுவாய்க் கொண்டு
செறிவுறும்அப் பரமான்மா விண்டுவெனப்
பெரியோர்நூல் செப்பிற் றென்று
சிறியவர்க்கும் தெரிவுறஇச் சோலைமலைக்
குறவஞ்சி செப்பு வேனல்.

*20—22. ஊண்—உணவு. உறக்கம்—தூக்கம். பயம்—அச்சம். உண்ணுதலும் உறங்குதலும், அஞ்சுதலும் புணர்தலும், சினத்தலும் மகிழ்தலுமாகிய செயல்கள் மனிதர்க்கும் விலங்குக்கும் உண்டு என்றாலும், உயர்ந்த மெய்யறிவுடைமையால் மனிதன் சிறப்புடையவனாவான். மெய்யறிவு இல்லாத மனிதர் விலங்குகளாவர்—என்று மனு ஸ்ம்ருதி முதலிய நூல்கள் மிகுத்துக்கூற அறிந்தமையால் என்றவாறு. இதுமுதல் மூன்று பாடல்கள் ஒரு தொடர். மனு முதலிய நூல்கள் எடுத்தியம்பக் கற்றமையால்—*

*உயிர்கள் பலவற்றினும் நரசன்மம் அரிது; அதினும் அரிது வேதம் ஓதுவாராய்ப் பிறத்தல்; அதினும் அரிது திருமால் அடியராதல்; அதினும் அரிது திருமாலடியே உயர்ந்ததென்று தேறியொழுகும் பக்தியடைதல், அதினும் அரிது திருமாலே பரம்பொருள் என்று தெரிதல்; அறிதற்கரிய சுருதியுக்தி அனுபவங்களால்—தத்துவங்களில் இருபத்தைந்தாவதாகக் கூறப்படும் சீவன் முதலியவற்றைத் தொண்டு கொண்டு விளங்கும் அப்பரம்பொருள் திருமாலே என்று முன்னோர் நூல்கள் செப்பின என்று சிறியவரும் தெரிந்து கொள்ளும்படி இந்தச் சோலைமலைக் குறவஞ்சியைச் செப்புவேன் என்று முடிக்க.*

*நூற்பயன்*

**23. கண்ணுதவும் கருத்துதவும் கலைபுகலும்**
**வாக்கீயும் கதிர்முத் தீனும்**
**மண்ணுதவும் மனையருளும் மக்களுந்நீர்க்**
**காயுளுடன் வழங்கும் காதற்**
**பெண்ணுதவும் குஞ்சரஞ்சூழ் பெருஞ்செல்வம்**
**நல்கும்முத்தி பெற்று வாழும்**
**விண்ணுதவும் சோலைமலைக் குறவஞ்சி**
**நாடகந்தான் விளம்பு வோர்க்கே.**

*23. கலைபுகலும்—நூல்களை இயற்றும். கதிர்—ஒளி, முத்து ஈனும்—முத்துக்களைத்தரும். குஞ்சரம்—யானை. நல்கும்—கொடுக்கும். முத்தி—வீடுபேறு. விண் என்றது சூழ்விசும்பு பெருவிசும்பு என்று பேசப்படும் வீட்டுலகத்தினை. விளம்புதல்—சொல்லுதல்.*

*இக்குறவஞ்சி நாடகத்தை இயற்றுவித்தவர்*

**24. திருமலை நம்பி தெய்வ சிகாமணி நம்பி என்னும்**
**இருவரும் எம்பி ராற்கோர் குறவஞ்சி இயற்று கென்றென்**
**றருமையாய் வேண்டச் செய்தது அழகருக் கனந்தங்கோடி**
**பெருமைநூற் பெருங்க டற்குள் இவைதுளி பேசுங் காலே.**

*24. திருமலை நம்பி தெய்வசிகாமணி நம்பி என்போர் திருமாலிருஞ்சோலை எம்பெருமான் கோயில் நம்பிகள். எம்பிராற்கு ஓர் குறவஞ்சி இயற்றுக என்று என்க. இது குறவஞ்சி இயற்றுமாறு நம்பிகள் இருவரும் ஆசிரியரை வற்புறுத்திக் கூறியமை விளங்க நின்றது. அழகர் பெருமை அளப்பரிது. அப்பெருமை பேசும் நூல்களும் அளவிறந்தன. அப்பெருமையுள் ஒரு சில இக்குறவஞ்சியால் பேசப்படும் என்றவாறு.*

*நூல்*

*தோடயம்*

*கொச்சகக்கலிப்பா*

**25. சீர்பூத்த சோலைமலைத் திருநெடுமால் குறவஞ்சித்**
**தார்பூத்த நாடகத்தைச் சதிருடனே ஆடுதற்குப்**
**பார்பூத்த சிந்தகவல் பதங்களின்முன் இதம்பெறவே**
**பேர்பூத்த தோடயத்தைப் பிரியமுடன் பேசுவமே.**

*25. தோடயம்—நாடகத்தின் தொடக்கத்தில் பாடும் பாட்டு. பூத்தல்—மிகுதல். குறவஞ்சித்தார் பூத்த நாடகத்தை—குறவஞ்சியாகிய ஒழுங்கு மிக்க நாடகத்தை. சதிர்—பெருமை; நாட்டியமுமாம். சிந்து. பதம் என்பவை இசைப்பாடல்கள். இதம் பெற—நன்கு அமைய.*

*தரு*

*இராகம்—நாட்டை.* *தாளம்—ஜம்பை.*

*பல்லவம்*

**26. குருவாய் எங்களைஆளும் திருவாய்மொழிப்பிள்ளை தாள்**
**குணமாய் நம்புதும் உய்யவே.**

*அநுபல்லவம்*

**திருமாலிருஞ்சோலை மாமலைவாழ் சீபதிமாலைத்**
**தெளிவாகும் துதி செய்யவே— குருவாய்**

*சரணம்*

திருமோகூர்த் தென்பால் வைகைத்
தீரம் கொந்தகை யென்றே செப்பும் குந்திபுரியிலே
தெருவோர் கோடியில் அண்ணர் தேவிவயிற்றில்
நின்றும் திருவிசாகத்தில் வந்திடும்— குருவாய்

அருமா மறையும் சாத்திரம் ஒருநாலும் பிரபந்தம்நா
லாயிரமும் வ்யாக்யானமும்
விரிவாகியபக வத்விஷயமும்சீ பாஷ்யமும்
சுருதப்ரகாசிகை யும் சொலும்— குருவாய்

போதா யனர்தம் சூத்திரம் போற்றும் காசிப கோத்திரம்
பொருவில் திரயா ரிஷயம்கூர்
வேதா வெனுமா தித்திரா விடியிற் பூருவ சிகையில்
விளங்கும் பூருவா சாரியராம்— குருவாய்

உலகாசிரியன் கூரகுலோத்தம தாசர்முதல்
ஓர்ஐவர் உபதேசமும்
விலகாமல் மனம் வைத்துத் தென்கலேமா மந்திரத்தில்
மேவி முன்னடியில் வாழும்— குருவாய்

மணவாள மாமுனி சடகோப ஜீயர் யோகி
வரர்கள் மாமறையோரும்
துணையடி தாழ்ந்து முத்திரை தோளிற் சுமந்து கேட்கச்
சுருதி மந்திரார்த்தமும் சொல்— குருவாய்

குருகா புரியாம் திருநகரி வாசமும்
கொண்டகோயிலிற் பிரம்மரதமும்
ஒருகாலும் குறையாமல் வதரியாச்சிரமம்வரை
ஒருகுடைக் குள்ளே ஆளும்— குருவாய்

நாடகத்தாதி ராகம் நாட்டை ஐம்பை தாளத்தில்
நாடும் திபதை பாடியே
சூடக முன்கை துலங்கும் அஞ்சலிசெய்து
துகிரடிபெயர்த் தாடியே— குருவாய்

26. தரு என்பது இசைப்பாட்டு வகையுள் ஒன்று. பல்லவம் அனுபல்லவம் என்பவை பல்லவி அனுபல்லவி என்பவற்றைக் குறிக்கும். திருவாய்மொழிப்பிள்ளை வைணவ சமயாசாரியருள் ஒருவர். பாண்டிய நாட்டு வையைத் தீரத்தில் திருமோகூர்க்குத் தென்பால் கொந்தகை (குந்தீ நகரம்) என்னும் ஊரில் பூர்வஶிகை(முன்குடுமி)யந்தணரில் காசிபகோத்திரத்தவரான அந்தணர் மைந்தராகத் திருவிசாக நன்னாளில் தோன்றியவர். உலகாசிரியர். கூரகுலோத்தம தாசர் முதலிய ஐந்து பெரியோர்களால் அரிய நூற்பொருள்களை உபதேசிக்கப்பெற்றவர். மணவாள மாமுனிவர், சடகோப ஜீயர் முதலியோர்க்குத் திருமந்திரார்த்தம் உபதேசித்தவர். ஆழ்வார்திருநகரி வாசமும், திருமோகூர்க் கோயிலில் பிரம்மரத மரியாதையும் பெற்றவர்; இந் நூலாசிரியருடைய ஆசாரியகுலகூடஸ்த₂ர். குணமாய்—நல்ல தன்மையுடன் யாம் உய்யவும், சீபதி மாலைத் துதிசெய்யவும் திருவாய்மொழிப்பிள்ளைதாள் நம்புதும் என்று முற்றுவிக்க. சீபதி—ஸ்ரீ(லக்ஷ்மீ)பதி. வைகத்தீரம்—வைகைக் கரை. கொந்தகை — குந்தீநகரம். அண்ணர் — திருவாய்மொழிப் பிள்ளையின் தந்தை. திருவிசாகம்—மேம்பாடுடைய விசாக நட்சத்திரம். விசாகத்துக்கு மேம்பாடு சடகோபர் முதலிய பெரியோர் அந்நாளில் அவதரித்தமையாலுயது. அருமாமறை—அரிய பெரிய வேதங்களாகிய இருக்கு, எஜுர், சாமம், அதர்வம் என்பவை. சாத்திரம் ஒரு நாலு என்றது தர்க்கம், வியாகரணம், மீமாம்சை, வேதாந்தம் என்பவற்றை. பிரபந்தம் நாலாயிரம்—ஆழ்வார்கள் அருளிச்செய்த நாலாயிரப்பிரபந்தம். வியாக்கியானம்—நாலாயிரப் பிரபந்தங்களின் விரிவுரை. பகவத்விஷயம்—திருவாய்மொழி விரிவுரை. சீ(ஸ்ரீ)பாஷ்யம்—இராமானுசர் அருளிய பிரம்ம சூத்திர விரிவுரை. சுருதப்ரகாசிகை—சுதர்சனபட்டர் அருளிய ஸ்ரீ பாஷ்ய விரிவுரை. போதாயன சூத்திரம்—போ₃த₄யன முனிவர் இயற்றிய க்₃ருஹ்யத₄ர்ம ஸூத்ரங்கள் (ஒழுகலாறு கூறும் நூல்கள்.) திரயாரிஷயம் என்றது—

கோத்திர கூடஸ்தரின் முனிவர் மூவரை. வேதா எனும் ஆதித்திராவிடியில்-பிரமன் என்று சிறப்பித்துப் பேசத்தக்க பழந்தமிழ் நாட்டு அந்தணர் குடியில். பூருவசிகையில்—பூர்வசிகை (முன் குடுமி) யார் என்ற பிரிவில். பூருவாசாரியர்-முன்னோரான ஆசாரியர். உலகாசிரியன். கூரகுலோத்தம தாசர் முதல் ஓர் ஐவர்-உலகாசிரியன். கூரகுலோத்தமதாசர். அழகியமணவாளப்பெருமாள்நாயனர்,நாலூராச்சான்பிள்ளை, விளாஞ்சோலைப்பிள்ளை என்னும் ஐவர். தென்கலை மாமந்திரத்தில்-தென்கலை வைணவர் ஓதும் ஸ்ரீசைலேச மந்த்ரத்தில். முன்னடியில்—முதன்முதலில். மேவி வாழும் குரு என்றது—இம்மந்திரத்தின் முதலில் உள்ள ஸ்ரீசைலேசபதம் திருவாய் மொழிப்பிள்ளையைக் குறிக்குமாதலின். யோகிவரர்—யோகிகளிற் சிறப்புற்றோர். மணவாளமாமுனிவரும், சடகோப ஜீயரும் மற்ற ஜீயர்களும் அந்தணர்களும் என்க. துணையடி—இரண்டுபாதங்களில். முத்திரை என்றது திருவாழிதிருச்சங்கு என்பவற்றின் அடையாளம். சுருதியும். மந்திரார்த்தமும் என்க. சுருதி—வேதம். மந்திரார்த்தம்—திருமந்திரார்த்தத்தை விரித்துரைக்கும் நூல். குருகாபுரி—ஆழ்வார் திருநகரி. 'கொண்ட கோயில்' என்றது திருமோகூர்க் கோயிலை. "கொண்ட கோயிலை வலஞ்செய்திங்காடுதும் கூத்தே" என்பது திருவாய்மொழி (10-1-5). பிரமரதம்—பெரியோரை மரியாதையாக எழுந்தருளுவிக்கும் வாகனம். வதரியாச்சிரமம்—திருமால் திருப்பதி நூற்றெட்டுக்குள் ஒன்று; வடநாட்டில் உள்ளது. நாடகத்து ஆதி—நாடகத் தொடக்கம். திபதை—இசைப்பாட்டுவகையுள் ஒன்று. சூடகம்—வளை. துலங்குதல்—விளங்குதல். அஞ்சலி செய்து-கைகூப்பிவணங்கி. துகிர்—பவளம்.

*கட்டியக்காரன் வருதல்*

*அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்*

**27.** திருமரு வியமால் தெய்வ சிகாமணி திருநாள் நாலில்
பருதியாம் கருட சேவைப் பவனிவந் திடுமுன் பாகச்
சுருதியின் பொருளைக் காட்டித் துதிக்குமெச் சரிக்கை கூறக்
கருதியே அழகர் சேனைக் காவலன் தோன்றி னானே.

*27. கட்டியக்காரன் — நாடகத் தலைவனுடைய பெருமையைக் கூறி எச்சரிப்போன். தெய்வசிகாமணி என்பது அழகர் திருநாமங்களுள் ஒன்று. திருநாள் நாலில்—நாலாந் திருநாளில் என்க. பருதி—ஒளி. பவனி—திருவீதிப்புறப்பாடு. சுருதியின்பொருள் என்றது வேதங்களால் விரித்துப் பேசப்படும் திருமாலாகிய அழகரை.*

*தரு*

*இராகம்—கல்யாணி.* *தாளம்—ரூபகம்.*

*பல்லவி*

28. சேனைநாதனும் வந்தானே கட்டியம்கூறச்
சேனை நாதனும் வந்தானே.

*அநுபல்லவி.*

சேனைநாதனும் வந்தான்
யானைமா முகன் வெள்ளை யானைவாகனன்
தெய்வயானை மோகனன் தொழும்— சேனை

*சரணங்கள்*

கலிக்கத்துராயும் முடியும் செம் பொனரைஞாண்
கவின் விளங்குங்கடியும்
குலுக்கும் கடகங்கள் வாகுவலயம் கங்கணங்கள்
ஒலிக்கும் சிலம்புபூட்டி உடைவாள் உறைக்குள் ஓட்டிச்
—சேனை

மகரகுண்டலங்கள் பூட்டித் திருமண் காப்பு
வதனமண்டலத்தில் தீட்டி
பகரும் கவசம் முந்நூல் பவித்திர மாலைசூட்டித்
திகிரியில் சங்கு தண்டு திருக்கை நான்கிலும் கொண்டு
—சேனை

சூத்திரவதிதன் நாயகன் ரூபக தாளம்
துலங்குங் கல்யாணி தாயகன்
பாத்திரனுகிய கிருட்டின பாரதிக் கனுகூலன்
சாத்திரம் துலாப் பூராடம் தனிலே உதித்த சீலன் —சேனை

தேனேந்தும் சோலைமலை வாழ் சுந்தரராசன்
திருநாள் வணங்க வந்து சூழும்
மானவர் அரசர்கள் தானவர் முனிவர்கள்
வானவர் மகுடந்தோய் வலக்கைப் பொற்பிரம்புமாய்ச்
—சேனை

28. யானைமுகமுடைய விநாயகனும், வெள்ளை யானையை வாகனமாகவுடைய இந்திரனும், தெய்வயானை காதலனாகிய சுப்பிரமணியனும் தொழும் சேனைநாதன் என்க. கலிக்கத்துராய் — முன்னெற்றியில் அணியும் ஒரு வகை அணி. செம்பொன் அரைஞாண் கவின்விளங்கும் கடியும் – செம்பொன்னாற் செய்த அரைஞாணல் அழகு விளங்கும் இடையும். கடி—இடை. குலுக்குதல்—அசைத்தல். கடகம் — கைவளை. வாகுவலயம் — தோள்வளை. கங்கணம் — ஒருவகைக் கைவளை. சிலம்பு – ஆலயத்தொண்டு செய்யும் ஆடவர் கையில் அணியும் வளை. உறை — ஆயுதக்கூடு. காப்பு—(திருமண்ணாகிய) பாதுகாப்பு. வதனமண்டலம்— நெற்றி வட்டம். தீட்டி — அணிந்து. பகரும் – சிறப்பித்துப் பேசப்படும். முந்நூல் — பூணூல், பவித்திரமாலை — பட்டு அல்லது நூலில் முடிச்சுகளுடன் செய்யப்படும் ஒருவகை மாலை. திகிரி—சக்கரம். தண்டு—கதாயுதம். சூத்திரவதி— சேனைநாயகன் பத்தினி. ரூபகதாளம் துலங்கும் கல்யாணி தாயகன் — ரூபகதாளத்தோடு விளங்கும் கலியாணி ராகத்தை குற்றமின்றிப் பாடுடவனும். பாத்திரன் — தக்கோன். கிருட்டினபாரதி-இந்நூலை இயற்றிய நூலாசிரியர். சாத்திரம் துலாப்பூராடம்தனிலே உதித்த சீலன்—நூல்கள் பாராட்டிக்கூறும் ஐப்பசிப் பூராட நாளில் தோன்றிய மேன்மையுடையான். மானவர்-மனிதர், தானவர்-வித்₃யாத₄ரர். வானவர்–தே₃வர், சூத்திரவதிதன் நாயகன் கல்யாணி தாயகன் பாரதிக்கநுகூலன் பூராடம்தனிலே உதித்த சீலன் சேனைநாதன், பூட்டி, ஓட்டி, தீட்டி, கொண்டு வலக்கைப் பிரம்புமாய் வந்தான் என முடிக்க.

*கொச்சகக்கலிப்பா*

**29.** அன்னமுடன் சேவல் விளை யாடுசிலம் பாற்றழகன்
பொன் அவனி கூடப் புரமீ தெழுந்தருளத்
தன்னரசாம் தென்னன் முனம் தந்த இரு திருச்
சின்னம் தொனிக்குந் திறஞ் சிறிது சொல்வோமே.

*29. அன்னம் என்றது பெட்டையன்னத்தை; சேவல் — ஆண் அன்னம். சிலம்பாறு — நூபுரகங்கை. பொன் — திருமகள். அவனி — நிலமகள் - பூமிதேவி. புரம் — நகரம். தன்னரசாம் தென்னன் என்றது மற்றை அரசர்க்கடங்கிய சிற்றரசனுகாது பேரரசனுக விளங்கிய பாண்டியனை; தென்னன் — பாண்டியன். திருச்சின்னம் — தேவர் விருது கூறும் குழல். தென்னன் முன் (அழகர்க்குத்) தந்த திருச்சின்னம் என்க. தொனிக்கும் திறம் — ஒலிக்கும் வகை.*

*தரு*

*இராகம்—சகாளு.* *தாளம்—ரூபகம்*

*பல்லவி*

**30.** மால் வந்தான் எங்கள் மாயவன் வந்தான்
மறைதுதி தூயவன் வந்தான் அரிதிரு
—மால்வந்தான்

*அனுபல்லவி*

சூல்கொண்டு விண்டு சூழமுழங்குந் தலைமைச்
சோலைமலைக் கோரரசாய் வேலைமதித்தாரமுதருள்
—மால்வந்தான்

*சரணம்*

ஆதிமூலமென் றேதிய ஆனைக் குதவும் சோதிவந்தனன்
ஆடகன் சொலும் தூணிடை நின்றுஞ்
சிரித்த பீடணன் வந்தனன்
கூரதல் கூரண்டம் காவல்செய் நாதன்வந்தனன்
கரதலங்கள் விழிகள் உந்தி சரசிஜங்கள்
எனவிளங்கு —மால்வந்தான்

**ஓதும் சங்கரனுதியர் மூதாதையெனும் சிரீதரன்வந்தான்**
**ஓமென்றன்பர்சொல் சேமமொழிக் கோர்**
**பொருளாம் வாமனன் வந்தான்**
**மோதும் களிற்றெண் கோடுபறித் தோன் வந்தான்**
**முண்டகன்றரும்பல் கோடி அண்டமுண்ட**
**கண்டன் வந்தான் —மால்வந்தான்**

**தூலசரபத் தோலையுரித்தோன் வந்தான்**
**தூயதன்மன் தொழும்**
**சோமச்சந்த விமானத் தலத்தோன் வந்தான்**
**சூழும் ஞானியர்**
**காலத்திற்றெழும் காரணன் வந்தான் என்று**
**கனகச்சின்னங்கள்ஊத வனசச்சின்னங்கொள்பாத**
**—மால்வந்தான்**

**ஆறுபுரத்தைச் சீறியழித்தோன் ரூபகம் சகானுராகத்தில்**
**கூவவிழித்தோன் வந்தான் நாராயணு வென்று**
**கூறுஞ்சொல் நுழையாமல் இரண்டாயிரமணி**
**குண்டலங்களிற் சிறந்த கண்டாகர்ணனைப் புரந்த**
**—மால்வந்தான்**

*30. மால். மாயவன். தூயவன். அரி. திருமால். சிரீ தரன், வாமனன் முதலிய பெயர்கள் இங்கே சோலைமலை யழகரைக் குறிப்பவை. மால் வந்தான். மாயவன் வந்தான், தூயவன் வந்தான். திருமால் வந்தான் என்பவை திருச் சின்ன ஒலித்தொனி. சூல் — கருப்பம். விண்டு சூல் கொண்டு சூழமுழங்கும் சோலைமலை என்க. விண்டு – மேகம். ஆர் அமுது வேலை மதித்து அருள் — பெறுதற்கரிய அமுதத்தைத் திருப்பாற்கடலைக் கடைந்து தந்த. ஆதிமூலம்! என்று ஓதிய யானை — கஜேந்திரன். சோதி — ஒளி. சோதி என்றது அழகரை. ஆடகன் — இரணியன். பீடணன்— அச்சத்தை விளைப்பவன் — நரசிங்கப் பெருமான். காதல் கூர் நாதன். அண்டம் காவல்செய் நாதன் என்க. காதல்*

கூர் நாதன் — அன்புமிக்க தலைவன். அண்டம் — பிரபஞ்சம் — உலகம். கரதலங்களும் விழிகளும் உந்தியும் என உம்மை விரிக்க; கரதலங்கள் — கைகள். உந்தி — கொப்பூழ். சரசிசம் — தாமரைமலர். மூதாதை — பாட்டன். "நான்முகனை நாராயணன் படைத்தான் நான்முகனும் தான் முகமாய்ச் சங்கரனைத் தான் படைத்தான்" (இயற்பா நான்முகன் திருவந்தாதி 1.) என்பது கொண்டு, சங்கரனுதியர் மூதாதை என்றார். சீதரன் — திருமால் திருநாமங்களுள் ஒன்று. ஓம் என்று அன்பர் சொல் சேம மொழி என்றது பிரணவத்தை. சேமமொழி — நன்மை தரும் சொல். ஓம்........ சேமமொழிக்கு ஓர் பொருளாம் வாமனன்- பிரணவப் பொருளாய் விளங்கும் வாமனன். மோதும் களிற்று ஒண்கோடு பறித்தோன் — தன்னைத்தாக்கிய குவலயாபீடம் என்னும் யானையின் வெண்மையான கொம்பைப்பறித்த கண்ணன். முண்டகன் — பிரமன். அண்டம் — உலகம். கண்டம் — கழுத்து. தூலம் — பெருமை. சரபம் — எண்காற்புள். தூல சரபத்தோலை உரித்தோன் — பெரிய உடலையுடைய சரபத்தின் தோலை உரித்து அதன் செருக்கை அடக்கிய நரசிங்கப் பெருமான். இரணியனைப் பிளந்தழித்த நரசிங்கப்பிரானை அடக்கச் சிவன் சரப உருவோடுவர, நரசிங்கப் பெருமான் அதன் தோலையுரித்துச் செருக்கழித்து ஒழித்தார் என்பது புராணங்களிற் கூறப்படும் கதை. தூய்மை — புனிதம். தன்மன் — தருமதேவதை. திருமாலிருஞ்சோலை யெம்பெருமானைத் தருமதேவன் வழிபாடு செய்து பேறுபெற்றமை தலபுராணத்தால் அறியத்தகும். சோமச்சந்த விமானத்தலம்—(கருவறையின்மேல்) சோமச்சந்த விமானத்தையுடைய தலம் — அழகர் கோயில். கனகச்சின்னம் — பொன்னால் செய்யப்பட்ட திருச்சின்னம். வனசச் சின்னம் கொள் பாத மால் — பதும ரேகைக்குறியுள்ள திருவடிகளையுடைய பெரியோன்—அழகர். ஆறு புரத்தைச் சீறி அழித்தோன் — அமைதியான திரிபுரத்தைச்

சினந்து அழித்த சிவன். ரூபகம் சகாஞராகத்தில் கூவ விழித்தோன் — ரூபகதாளத்தோடு இயைந்த சகாஞராகத் திற்பாடி அழைக்க. யோக நித்திரை விட்டு எழுந்த திருமால். ஆறுதல் — அமைதியுறல். புரம் — திரிபுரம். கூவுதல் — விளித்தல். பிரமன் சிரத்தைக்கிள்ளிய சிவன். பிரமகபாலம் தன் கையகத்ததாகத் திரிந்து பகவானைப் பாடிக் கபால நீக்கப் பெற்ற கதை இங்கு உணர்த்தப்பட்டது. அடுத்து சிவபக்தனை கண்டாகர்ணன் நாராயண நாமம் நுழையாதபடி தன் இரண்டு காதுகளிலும் இரண்டாயிரம் மணிகுண்டலங்களை அணிந்து திரிந்து, சிவபிரான்பால் முத்தி வேண்ட. சிவன் 'முக்தியளித்தற்குரியவர் திருமாலே; அவர் பால் வேண்டுக' என்றுவிட, அவன் தன் வெறுப்பு நீங்கித் திருமாலை அடிபணிந்து உய்ந்த செய்தி கூறப்படுகிறது. புரத்தல் — காத்தல்.

*அழகர் எழுந்தருளுதல்*

*அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்*

**31.** **கோடியெண்ணுன் குடனென்ருய்க் கூறமரர் சிரத்திருகை**
**குவித்துக் கொண்டங்**
**கோடிவரக் கொடிகள் பல ஆலவட்டம் சாமரைபல்**
**குடைகள் அண்ட**
**கோடிதட விடநெடுவி தானநிழற் சோலை மலைக்**
**கோமான் பூவிற்**
**கோடிவய மாரனந்தம் கோடிரவி கூசும் ஒளி**
**கொடுவந் தாரே.**

31. கோடி எண்ணுன் குடன் ஒன்ருய்க் கூறு அமரர் — முப்பத்து முக்கோடி என்று கூறப்படுகிற தேவர். எண்ணுன்குடன் ஒன்ருய் கூறு கோடி அமரர் என்க. எண்ணுன்குடன் ஒன்று — முப்பத்து மூன்று. அமரர் சிரத்து இருகை குவித்துக் கொண்டு அங்கு ஓடிவர — தேவர்கள் தலை மீது இருகைகளையும் கூப்பித் தொழுது கொண்டு

*அழகர் பவனி எழுந்தருளும் அவ்விடத்தேவர, ஆலவட்டம் - விசிறி. அண்டகோடி தடவிட — ஆகாய விளிம்பைத்தடவ. கொடிகளும், ஆலவட்டங்களும், சாமரையும், குடைகளும் என உம்மை விரிக்க. விதானம் — மேற்கட்டி. நெடுவிதான நிழல் — நீண்ட விதான நிழலில். சோலைமலைக் கோமான் — அழகர். கோடி வயம் ஆர் அனந்தங்கோடி ரவி கூசும் ஒளி கொடு வந்தார் — சோலைமலைக்கு அரசான அழகர் விளக்கத்தால் பலப்பல கோடி கதிரவர்களும் ஒளி மழுங்கும் ஒளியுடன் எழுந்தருளினார். பூவில் — பூத்தலால் — விளக்கத்தால். அநந்தங்கோடி ரவி — எண்ணற்றகோடி கதிரவர்.*

*நேரிசை வெண்பா*

**32.** இப்படியே வீதியுலாத் தெம் பெருமான் சம்ப்ரமமாய்
எப்படியும் காப்பான் எழுந்தருள—முப்படிவாழ்
தெய்வ மெல்லாம் தத்தம் திறைகளுடன் தேடிவரச்
சைவர் பெருந் தானையும் வந்த.

*32. சம்பிரமம் — சிறப்பு. எப்படியும் — எல்லா உலகங்களையும். முப்படி — மண், விண், பாதலம் என்பவை. திறை — கப்பம். சைவர் பெருந்தானை — சைவர் பெருங் கூட்டம்.*

*தரு*

*இராகம்—கவுளிபந்து.* *தாளம்—அடதாளச்சாப்பு.*

*பல்லவி*

**33.** சோதிக் கருடன்மேல் வீதிவந்தார் எங்கள்
சுந்தரராஜமால்

*அனுபல்லவி*

சோதிக் கலுழன்மேல் வீதிவந்தார் ஈசன்
துதித்துத்தன் முகக்கண்கள் சிதைத்துச்செண்
றுதிர்த்து கும்பிடத்தேசிவர் [பகப்பூவென்
பதத்திற் கொண்டிடும் கேசவர் —சோதிக்

*சரணங்கள்*

வாணுதல் நாமம் பளீர் பளீர் பளீரென
மலர்விழி மாண்பு சிவேர் சிவேர் சிவேரென
சேண்முகில் மேனி பசேர் பசேர் பசேரெனத்
திருக்கைச் சக்கரம் சங்கம்
வருக்கக் கங்கணம் பொங்கம்
பிறக்கக் குண்டலம் தங்கம்
சிறக்கப்புனை நிறக்கலை யொடு —சோதிக்

மணிமுடி சூரியர் கோடிகோடிபோல் மின்ன
மார்பிற் கவுத்துபமா முந்நூல் பொன்னூல் துன்னப்
பணிவிதி யீசன் அரீ அரீ அரீ யென்னப்
பதத்திட்டுயர் முகட்டைப்பொரு
சகட்டைப்புனல் அகட்டைப்புக
உதைத்துக்கொடு விடத்தைக்கடல்
இடத்தைக் கொளும் மிடற்றுப்புயல் —சோதிக்

சிவன்கை யுடுக்கை டுண்டும் டுண்டும் டுண்டும் மெனத்
தேவதுந்துபிகள் தொங்தொம் தொங்தொம்
தொங்தொம்மெனத்
தவளச்சங்கங்கள் பம்பம் பம்பம் பம்பம்மெனத்
தவிற்சத்தம் குழற்சத்தம் வெடிச்சத்தம் கடற்சத்தம்
தனக்குப்பத் திரட்டிக்குத் தொனிக்கப்பொற்
கிரிக்குயர் —சோதிக்

வேதியர்மேனி சிலீர் சிலீர் சிலீரென்ன
மேனகையாடல் கலீர் கலீர் கலீரென்ன
மோதிடுபேரி திடீர் திடீர் திடீரென்ன
முதற்செந்தமிழ் மறைப்பின்புறம் உரைக்குஞ்சது
மறைப்பின்சிலர்
முறைச் சங்கித நிறைக்குஞ்சுதி முழக்கங்கொடு
நுதற்கண்பெறு —சோதிக்

அந்தமிழிற் கவுளிபந்திசை பாடவும்
அடதாளச் சாய்ப்பிலே குடதாளங் கூடவும்

வந்தனைசெய்து வானோர் மலர்மாரி போடவும்
வடக்குத்திசை குடக்குத்திசை குணக்குத்திசை
மணக்கத்திரு
வடிக்கம்பிடி படிக்கந்துணை யடிக்கஞ்சமுன்
னடக்கச் சுயம்—சோதிக்

33. ஈசன் — சிவபெருமான். ஈசன் துதித்துத் தன் முகக்கண்களைச் சிதைத்து ஒளிவிளங்கும் திருவடிகளில் செண்பகப் பூவாக அருச்சித்து வணங்க. ஏற்றுக் கொண்ட திருமால் என்க. ஈசன் கண்ணிடந்து திருமாலை அருச்சித்து வணங்கிய செய்தி புராணம் வல்லார் வாய்க்கேட்டுணரத் தகும். விழி — கண். சிவேரென — சிவந்திருக்க. சேண் - ஆகாயம், முகில் — மேகம். வருக்கம் — தொகுதி. கங் கணம் — கைவளை. பொங்கம் — பொலிவு. புனைதல் — அணிதல். கலை—ஆடை—பீதாம்பரம். மார்பில் கவுத்துபம் மா மின்னூல் பொன்னூல் துன்ன—மார்பில் கவுத்துப ரத்தினமும் திருமகளும் பொன்னிழையாலான பூணூலும் பொருந்த என்க. மா — திருமகள். துன்ன — பொருந்த. பணி — வணங்குகின்ற. விதி — பிரமன், ஈசன் — சிவன். விதியும் ஈசனும் என உம்மை விரிக்க. பதத்திட்டு — காலால். உயர் முகட்டைப் பொரு சகட்டை — உயர்ந்த வான முகட்டைப் பொருந்திய சகடத்தை. சகட்டை என்றது வண்டியுருவில் ஆவேசித்துக் கண்ணனைக் கொல்ல வந்த சகடாசுரனை. புனல் அகட்டில் புக உதைத்து — கடலினுள்ளே புகும்படி உதைத்து. புனல் என்றது கடலை, அகடு — உள். கொடு விடத்தைக்கடல் இடத்தை கொ(ள்) ளும் மிடற்றுப் புயல் — (பூதனை யூட்டிய) கொடிய விடத்தையும் கடல் சூழ்ந்த உலகத்தையும் (உட்) கொண்ட கண்டத்தையுடைய புயல் வண்ணன். மிடறு — கண்டம். கழுத்து. உடுக்கை — உடுக்கு — இடை சுருங்கு பறை. டுண் டுண் டும். தொந் தொந் தொம். பம் பம் பம். கலீர். கலீர். திடீர். திடீர் என்பவை ஒலிக்குறிப்பு. துந்துபி—

பேரிகை. தவளம்—வெண்மை. தவில்—பறை வகையில் ஒன்று. குழல்—வாத்திய வகையுள் ஒன்று. வெடி—வேட்டு. தவிற் சத்தமும் குழற் சத்தமும் வெடிச் சத்தமும் கடற் சத்தத்திலும் இருபதுமடங்கு மிக்கொலிக்க என்க. பொற்கிரிக்கு உயர் சோதிக் கருடன்—பொற்கிரி (மேருமலை)யினும் உயர்ந்த ஒளியை உடைய கருடன். மேனி—உடல். சிலீர் என—புளகம் ஏற. முதற்செந்தமிழ் மறைப் பின்புறம் உரைக்கும் சதுமறைப்பின் சிலர் முறைச் சங்கிதம் நிறைக்கும் சுதி முழக்கம்கொடு—முன்னே செந்தமிழ் வேதமாகிய திவ்யப்பிரபந்தமும், பின்புறம் ஓதப் படும் நான்கு வேதமும். அவற்றின் பின்னே சிலர் பாடும் முறையோடு கூடிய இசைப்பாடலும் நிறைவிக்கும் ஒலி முழக்கத்தைக் கொண்டு. சந்தம் நோக்கி மறைப் பின் புறம் என ஒற்றுமிக்கது. சங்கிதம்—சங்கீதம். சுதி—ஒலி. கொடு—கொண்டு. நுதற்கண்பெறு சோதிகருடன்—நெற்றியில் பெற்ற ஒளிவிளக்கமுடைய கருடன். அம் தமிழில்—அழகிய தமிழில். கவுளிபந்து—இராகங்களில் ஒன்று. வந்தனை செய்து—வணங்கி. மலர்மாரி—பூ மழை. குடக்கு—மேற்கு. குணக்கு—கிழக்கு. திருவடிக்கம் பிடிபடிக் கம்-திருவடியிலே அபிஷேகம் பண்ணிய தீர்த்தத்தைத் தன்னுட்கொண்ட படிக்கமும். கம்—ஜலம். துணையடிக் கஞ்சம்-இரண்டு திருவடித் தாமரைகளைத் தாங்கிய ஸ்ரீ சடகோபமும். முன் நடக்க—தீர்த்தப் படிக்கமும் ஸ்ரீ சடாரியும் தாங்கியவர் அழகர் பவனியில் முன்னே செல்ல. சுயம் சோதிக் கருடன் — இயற்கை ஒளியினையுடைய கருடன். சுந்தரராஜமால் கேசவர். புயல். நாமம் பளீர் பளீர் என. விழி சிவேர் சிவேர் என, மேனி பசேர் பசேர் என, சக்கரமும் சங்கமும் கங்கணமும் பொங்கம் பிறக்க. குண்டலத்தோடும் தங்கம் சிறக்கப் புனை கலையோடும், மணிமுடி மின்ன, மார்பில் கவுத்துபமும் திருமகளும் முந்நூலும் துன்ன. விதி ஈசன் அரீ அரீ என. உடுக்கை டுண் டுண் டும்மென. துந்துபி தொந் தொந் தொம் என. சங்கங்கள் பம் பம்

பம் என. சத்தம் தொனிக்க. வேதியர்மேனி சிலீரென. ஆடல் கலீரென. பேரி திடீரென முன்னே தமிழ் மறை யும் பின்னே வடமொழி வேதங்களும் அவற்றின் பின் சிலர் பாடும் இசைப்பாடலும் நிறைவிக்கும் சுதிமுழக்கங் கொண்டு பாடவும் கூடவும் போடவும் படிக்கமும் திரு வடித் தாமரைகளைத் தாங்கிய ஸ்ரீ சடாரியும் முன்னே நடக்க—பொற்கிரிக்குயர் நுதற்கண் பெறு சுயஞ் சோதிக் கருடன்மேல் வீதிவந்தார் என முற்றுவிக்க.

அழகர் பவனியில் தேவர் கூடி வருதல்

தரு

இராகம்—சங்கராபரணம். தாளம்—ஏகதாளம்.

பல்லவி

34. பவனியிற் கூடிவந்தாரே தேவர் யாவரும்
பவிசுகளோடிசைந்தாரே.

அனுபல்லவி

அவனிமேல் அவரவர் அரிவையர்களுடனே
கவனமாகியே பல வாகனங்களின் மிசையேறி—பவனியிற்

சரணம்

கருடவாகனத்தின் கீழே வெள்ளன்னமேற்
கமலநான்முகனவனோடே
புருடனுன மன்மதன் பொருந்திச் சுகத்தையூர்ந்து வந்து
........................................................................*

கட்டியக்காரன் சொல் வசனம்

எச்சரிக்கை பராக்கு எச்சரிகை சுவாமி
பராக்கு வெகுபராக்கு எச்சரிகை சுவாமி
தேவராஜர்! தேவதேவோத்தமர்! தேவதாசார்வபூமர்!
அகிலாண்டகோடி பிரம்மாண்டநாயகர்!
பிரம்மருத்திரேந்திர சந்திராதி யமர வந்தித
துவந்த்வ பாதாரவிந்தர் முகுந்தர் கோவிந்தர்!

---

* இந்தத் தருவில் இதன்பிற்பகுதி (மூலப்பிரதியில்) இல்லை.

*34. பவிசுகள்—அழகுகள், புருடனை—ஆண்மையுடையனை. சுகம்—கிளி. ஊர்தல்—செலுத்தல். வெள்ளையன்னத்தின் மேலே (வரு) நான்முகனோடு மன்மதன் சுகத்தை ஊர்ந்து (வர) என்க.*

**வசனம்**

*எச்சரிக்கை பராக்கு என்பவை அழகர்பெருமையும் அவர் பவனியெழுந்தருளுவதும் தெரிவித்து பவனிவரும் வழியிலுள்ளவர்களை அடங்கி ஒடுங்கி வணங்கியிருக்கும்படி கட்டியக்காரன் எச்சரித்துரைக்கும் குறிப்பு மொழிகளாம். எச்சரிக்கை எச்சரீகை என்றும் வழங்கப்படும். பராக்கு—கவனமின்மை. எச்சரிக்கை... சுவாமி! பராக்கு...சுவாமி என்பது, சுவாமி எழுந்தருளுகிறார் எச்சரிக்கை பராக்கு எச்சரிக்கை, வெகு பராக்கு எச்சரீகை என்று கட்டியக்காரன் எச்சரித்தபடி. தேவதேவோத்தமர்—தேவர்க்கும் தேவராயுள்ளோரில் சிறந்தோன். தேவதாசார்வபூமர்—தேவருள் சக்ரவர்த்தி, பிரம்ம ருத்திரேந்திர சந்திராதி அமரவந்தித துவந்த்வ பாதாரவிந்தர்—பிரமனும் உருத்திரனும் இந்திரனும் சந்திரனும் முதலான தேவர் வணங்கும் இரண்டு திருவடித்தாமரைகளையுடையவர். வந்தித—வணங்கப்படுகிற. துவந்த்வ—இரண்டு.*

*எச்சரீகை*

**35.** அகல்கின்ற செகமுழுதும் ஓரடியினாலே அளந்த பதம்!
—எச்சரீகை!

அணுவளவு துகள்படுமுன் அகலிகைபவந்தீர்த்த
அடியிணைகள்!— எச்சரீகை!

ஆடல்மேவுஞ்சகடன் ஓடிமாயும்படிசெய் ஆசில்தாள்!
—எச்சரீகை!

ஆடராவின் சுடிகை நீடுவேதங்கள்முடி ஆடுதாள்!
—எச்சரீகை!

இந்திராதியரமரர் சந்திரசூரியர் தினம் இறைஞ்சுதாள்!
—எச்சரீகை!

இதயகமலந்தொறும் பதியுமகிமைகளுடைய
இணையடிகள்!—எச்சரிகை!
ஈறிலா ஆழிவளை கூடவோர் கமலமலர் ஏறுதாள்!
—எச்சரிகை!
ஈடுநாலொன்பதென நாடுமீரைந்துசதம் ஏறுதாள்!
—எச்சரிகை!

*35. செகம்—உலகம். செகமுழுதும் அகல்கின்ற ஓரடியி னாலே அளந்த தாள் என இயைக்க. துகள்—தூள். பவம்—பாவம். ஆடல் மேவும் சகடன்—கொலைத் தொழிலையுடைய சகடாசுரன். அடல் ஆடல் என நீண்டது. ஆசு இல்—குற்றமில்லாத. ஆடு அராவின் சுடிகை—ஆடுகின்ற காளியன் என்னும் பாம்பின் படத்திலும். நீடு வேதங்கள் முடி—நிலைத்த வேதங்களின் முடியிலும். நீடுதல்—நிலைத்தல். இறைஞ்சுதல்—வணங்குதல். இதய கமலம் தொறும் பதியும் மகிமைகள் உடைய இணையில் தாள்—அன்பால் நினைவார்தம் மனத்தாமரைதோறும் தங்கும் பெருமைகளை யுடைய ஒப்பற்ற திருவடிகள். ஈறு இலா ஆழி வளை கூட ஓர் கமல மலர் ஏறுதாள்—அழியாத சக்கரரேகையும், சங்க ரேகையும் சேர, ஒப்பற்ற பத்மரேகையும் பொருந்திய திருவடிகள். ஈறு—முடிவு. இங்கு ஆழி என்றது சக்கர ரேகையை. வளை என்றது சங்கரேகையை. கமலமலர் என்றது பதுமரேகையை. உத்தமபுருடர்களின் அடிகளில் சக்கரரேகை, சங்கரேகை பதுமரேகை முதலியவை காணப் படும். ஏறுதல்—பொருந்துதல். நாலொன்பதென நாடும் ஈரைந்து சதம் ஈடு ஏறுதாள்—முப்பத்தாறாயிரம் என்று வரையறைப்பட்ட (க்ரந்த சங்க்யையுள்ள) ஈடு என்னும் விரிவுரையால் மிகுத்துப்பேசும் பெருமை பொருந்திய திருவடிகள். திருவாய்மொழி ஆயிரமும், 'பரனடிமேல் குருகூர்ச் சடகோபன் சொன்ன' (திருவாய்மொழி 1-1-10) வையாதலின், அத்திருவாய்மொழியின் விரிவுரையாகிய ஈடும் அவ்வடிப்பெருமையையே மிகுத்துப் பேசுவதாயிற்று.*

*நாலொன்பது-முப்பத்தாறு. ஈரைந்து சதம்—பத்து நூறு; ஆயிரம்-முப்பத்தாறாயிரம். ஈடு-நம்பிள்ளை அருளிய விரிவுரை.*

*அழகர் பவனிகாண மாதர் வருதல்*

*கொச்சகக் கலிப்பா*

**36.** வாகைபுனை சோலைமலை மால்நீல மேகமென
வோகை பெறுங்கருடன் ஊர்ந்தே பவனிவரப்
பாகைவென்ற செஞ்சொல் பகர்மாதர் ஆடும்இளந்
தோகையினம் என்னவந்து சூழ்ந்தவகை சொல்வோமே.

*36. வாகைபுனை—வெற்றிமாலையணிந்த. வாகைபுனை மால், சோலைமலை மால் என இயைக்க. மால் என்றது அழகரை. ஓகை—மகிழ்ச்சி. தோகையினம்—மயிற்கூட்டம். கருடனுக்கு மகிழ்ச்சி பெருமானைத் தாங்கும் பேறு பெற்றமையால் என்க. மால், நீலமேகம் என (பொன் மலை போன்ற) கருடன் மீது பவனிவர. மேகத்தைக் கண்டு மகிழ்ந்து ஆடும் மயில்கள்போல மகளிர் அப் பெருமானைக் கண்டு மகிழ்ந்து சூழ்ந்தனர் என்றவாறு.*

*தரு*

*இராகம்—பியாகு.* *தாளம்—இந்துஸ்தானி ஆதி.*

*பல்லவி*

**37.** வனிதையர் வந்தனர் மாயனைக்காண—வனிதையர்

*அநுபல்லவி*

வனிதையர் வந்தனர் மாயனைக் காணக்
கனிவுறு சிந்தையர் கமலையை நேரும் —வனிதையர்

*சரணங்கள்*

மீதலத்தோர்களும் பாதலத்தோர்களும்
பூதலத்தோர்களும் காதலுற்றோடி —வனிதையர்

மாலை செஞ்சந்தனம் மாதுளங்கனி கண்டு
பாலனையோடிலை பசும்பிளவுங்கொண்டு —வனிதையர்

வீணையும் தம்புரும் விளம்பு பைங்கிள்ளையும்
ஆணெனும் கழங்குடன் அம்மனைபந்துமாய் —வனிதையர்
குயில்கிளி பூவையும் குலவுபொற்பாவையும்
மயில்மறி மானினம் வானமின்போலும் —வனிதையர்
ஒருகரம் கஞ்சுகம் ஓட்டிய பேர்களும்
இருபுயம் ஓட்டியே இறுக்கு கையருமாய் —வனிதையர்
சிலநகை யேந்திய செங்கையோடும் செய்ய
மலர்விழிக் கெழுதிய மைகொண்ட விரலுமாய்
—வனிதையர்
குருமணி மேனிலைக் கோபுரங்களும் கொடித்
திருமதில் சூழும் சீபதிவாழும் —வனிதையர்
தாளமும் மீதிதிந்துஸ் தானியில் ஆதியே
நாளும்புகழ்பியாகு ராகத்தில் ஓதியே —வனிதையர்

*37. வனிதையர் — பெண்கள். மாயன் என்றது அழகரை. கனிதல்—கசிதல். சிந்தை—மனம். கமலை—திருமகள். நேர்தல்—ஒத்தல். மீதலம்-மேலுலகம். பாதலம்-கீழுலகம். பூதலம்—பூமி. மீதலத்தோரும் பாதலத்தோரும் பூதலத்தோரும் ஆகிய வனிதையர் ஓடிவந்தனர் என முற்று விக்க. செஞ்சந்தனம்—செவ்விய (நல்ல) சந்தனம். கண்டு-கற்கண்டு. அளை—தயிர்; வெண்ணெயும் ஆம். இலை—வெற்றிலை. பசும்பிளவு—பச்சைப் பாக்கு. தம்புரு—ஓர் இசைக்கருவி. விளம்பு—சிறப்பித்துப் பேசப்படும். பைங் கிள்ளை—பசிய கிளி. ஆண் எனும் கழங்கும்—(மகளிர் விளையாட்டுக்குரிய பொருள்களில்) முதன்மையுடைய தென்று சொல்லும் கழலும். கழங்கு—கழற்சிக்காய். அம்மனையும் எனவும், குயிலும் கிளியும் எனவும். மயிலும், மறிமானினமும், வானமின்னும் எனவும் உம்மை விரிக்க. பூவை—நாகணவாய்ப்புள். குலவு—விளங்குகின்ற. பொற் பாவை—பொன்னாற் செய்யப்பட்ட கொல்லிப்பாவை. மறி மான் இனம்—இளமான் கூட்டம். வானமின்—மேகத்துத்*

*தோன்றும் மின்னல். கரம்—கை. கஞ்சுகம்—சட்டை; ரவிக்கை. புயம்—தோள். ஓட்டுதல்—நுழைத்தல். குரு மணி — ஒளியுள்ள இரத்தினம். மேனிலை — மேல்மாடம். திருமதிலும் என உம்மை விரிக்க. சீபதி—அழகர்தலப் பெயர்களுள் ஒன்று.*

*வெண்பா*

38. நூறுசம யந்தனிலும் நோற்பார்க்கு நம்மதம்போல்
வேறுமதம் இல்லையென்று மெய்யாகக்—கூறுமிதை
எட்டத்திற் சோலைமலை இன்பமுற்று வாழ்வாய் என்
கிட்டத்தில் வந்திருந்து கேள்.

*38. நூறு என்பது பல என்னும் பொருளில் பயின்றது. சமயம் மதம் என்பன ஒரு பொருட் சொற்கள். நோற்பார் — விரத ஒழுக்கமுடையார். நம்மதம் என்றது வைணவ மதத்தை. எட்டத்தில்-சேய்மையில். கிட்டத்தில்-அண்மையில். எட்டத்தில் வாழ்வாய்! (யான்) கூறும் இதைக் கிட்டத்தில் வந்திருந்து கேள் என முடிக்க. இது கவி. வைணவ மதத்தின் பெருமையைத் தன்பால் அன்புடையான் ஒருவனை நோக்கிக் கூறுவதாய் அமைந்தது. 'நோற்பார்க்கு நூறுசமயந்தனிலும் நம்மதம்போல் வேறு மதம் இல்லை' என்பது கவிக்கூற்று.*

*திரிமூர்த்தி அகவல்*

39. தேவரும் போற்றிய சீபதி நகரில்
யாவரும் சாற்றிய வான வீதியில்
சகல வானவருடன் தாணுவும் பிரமனும்
புகலரும் பதினெண் புவியினர் சூழ்வரப்
பவனிபோந் தருளும் பரம சுவாமியை
அவனிமங் கையரும் ஆசைகொண் டமைகேள்
அடைவுடன் சூழ்பல அண்டகோ டியின்உறை
கடவுளர் எவரையும் கண்ணெதிர் கண்டதில்
எக்கடவுளினும்நல் இசைமிகப் பெற்றிடும்
முக்கிய மூர்த்திகள் மூவரா யவருள்—

*பிரமன்*

பதுமமா லிகையும் பதுமபீ டிகையும்
சதிர்கொளும் மாதும் தட்சிண மேதையும்
காயத் திரியும் கவசகுண் டலமும்
தாயத் தண்டுடன் சாவித் திரியும்
நான்கு புயங்களும் நான்கு முகங்களும்
நான்கு மறைகளும் நாலிரு நயனமும்
ஒருகையில் வடமும் ஒருகை குண்டிகையும்
சுருவமும் சுருக்கும் துசங்குசம் தருப்பையும்
அநாமிகை யங்குலி யமர்பவித் திரமும்
சநாதன மாகும் சமிதையித் துமமும்
மார்புமுந் நூலும் மன்னுயிர்ப் படைப்பும்
பூருவ சிகையும் புண்டர நுதலும்
உழைச்சரு மமும்வாழ் வுறுமநுக் ரகமும்
தழைக்கு(ம்) மத்திமதச தாலவிக் கிரகமும்
அன்னவா கனமும் ஆர்ந்த கேதனமும்
பொன்னிற மேனியும் பொய்யிலா வுலகும்
சித்திரை மதியபி சித்துநாட் பிறப்பும்
வித்தகன் அளித்த வேதசாத் திரங்களும்
தண்ணமு திருக்கும் சத்திய லோகமும்
விண்ணவர் துதிக்கும் விராசத சபையும்
தலைச்சக் கரமும் தாரையாச் சிரமமும்
அலைக்கட லமுதாய் அவிர்புரோ டாசமும்
அபயமும் வரதமும் ஆகிய கரங்களும்
உபயமாம் வாமத் தொருமரை மலரும்
அந்தியின் முடிவும் அயன் எனும் பெயரும்
உந்தியிற் பிறப்புமாய் ஒருவனைக் கண்டார்

*சிவன்*

மானும் மழுவும் சூலமும் நஞ்சும்
ஆனை யுரியும் புலியின் அதளும்
கொக்கின் இறகும் கொன்றையும் தும்பையும்

அக்கு வடமும் நக்கமும் சிக்கமும்
விடையும் பூதமும் பேயும் வேதாளமும்
சடையும் எருக்கும் சாம்பலும் பாம்பும்
ஓடுடன் கந்தலும் ஒட்டுக் கோவணமும்
காடும்ஓர் கரந்தையும் கைலையும் உடுக்கும்
கையினிற் கனலும் கபாலமும் மத்தமும்
மெய்யினிற் பாதியாய் மேவுமைப் பேதையும்
பூளையும் பிறையும் பெருகறு காத்தியும்
தாளியும் கூவிளந் தளிருடன் கங்கையும்
பன்றிவெண் கோடும் பரவாமை யோடும்
மின்றிகழ் நூலும் விரியோக பட்டமும்
திரியக் புண்டர தேசுசெய் நுதலும்
உரியதன் தலைமிசை ஊஞுனி லைகளும்
வக்கிர தந்தமும் வட்டமுக் கண்களும்
உக்கிர ரூபமும் ஊர்த்துவ சூடமும்
சங்கிலோர் குழையும் தாடங்கச் செவியும்
செங்கனல் மேனியும் தீக்கொலைத் தொழிலும்
கடுமோகம் மிஞ்சும் மகாமை துனமும்
நெடுந்துயில் சோம்பும் நெருங்கிய பித்தமும்
பரம சிவன்முதல் பத்தெட்டுப் பெயரும்
அருமை நட்சத்திரம் ஆருத்தி ராவும்
வேதன் ஆயுளின் வீவுள ஆயுளும்
சாதனு ஏகாதச ருத்தி ரத்வமும்
அட்டமூர்த் தித்வமும் ஆலின்கீழ் வாசமும்
உட்டெளி வார்சொல் உருத்திர சூக்தமும்
தாவிய அதம தசதால உருவும்
தீவிரி கிரணச் சிரச்சக் கரமும்
எருத்துக் கொடியும் என்பு மாலைகளும்
உருத்திரப் பெயருமாய் ஒருவனைக் கண்டார்!

*திருமால்*

கமலலோ சனங்களும் கமலம்நேர் கரங்களும்
கமலநேர் பதங்களும் கமலமாம் உந்தியும்

கனகநீண் முடியும் கனகமாம் உடையும்
தினகர னமெனத் திகழ்சமர் தகமும்
மகரகுண் டலங்களும் மார்பு முந்நூலும்
நகுகதிர்க் கவுத்துவ நாயக ரத்னமும்
திருமறு மார்பமும் திரள்புய கீர்த்தியும்
கருமுகில் மேனியும் கமழ்துழாய் மாலையும்
கடகமங் குலியமும் கங்கணுங் கதமும்
வடிவுள ஆரமும் வயிறணி பந்தமும்
நூபுரங்களும் அடி நுதிகளின் மிஞ்சியும்
தாபதர் வியப்பத் தகும்அரை ஞாணும்
வைசயந்தி யும்பொன் வத்திர மாலையும்
மைசெறி கேசமும் வளர்சதுர்ப் புயங்களும்
அறமுய லாழியும் அதிர்குரற் சங்கமும்
திறமிகு சார்ங்கமும் திகழும் நாந்தகமும்
கனகமேருவின் உயர் கவுமோ தகியும்
சனகனுதியர்நினை சந்த்ரா னனமும்
குமிழ்மலர் இணைசொலும் கூரிய நாசியும்
தமதிரு செவிமிசை தாவுகட் கடைகளும்
பொற்பொடி ரசதமண் புனைந்தொளிர் நுதலும்
நிற்பவர் மனங்கவர் நீள்புரு வங்களும்
தொக்க சோதித் தொண்டை வாயும்
மிக்கசீர் இளநிலா விரிசிறு முறுவலும்
வித்தக விராட்டாம் விசுவரூபமும் புகழ்
உத்தம தசதா லத்திரு உருவமும்
கடல்மடை திறந்தகட் கருணையும் ககபதி
பிடர்மிசை இருக்கையும் பிரசன்ன வதனமும்
சண்டபா னுவினொளிர் தனதுபே ரொளியுள்
அண்டர்கள் மின்மினி யாமெனும் அடக்கமும்
கருதரும் அநந்த கல்யாண குணங்களும்
தரும் மதனிலுமியல் சதகோடி எழிலும்
திகழ்தலைப் பின்னே சிரச்சக் கரமும்
புகழ்பெருந் தெய்வப் பூருவ சிகையும்

அச்சுதன் அனந்தன் ஆகாய புருடன்
பச்சைமால் என்னும் பரவத் துத்வமும்
கொண்டரு மறைகளைக் கூறும் தருமத்தை
அண்டகோ டிகளை அதில் உறை உயிர்களைக்
காத்திடும் அகில காரணன் ஆகி
மீத்திகழ் பரம வீட்டுடன் விரிதிரைப்
பாற்கடல் அரங்கம் பரிதிமண் டலம்வாழ்
காற்(ர்க்)கடல் வண்ணனைக் கண்ணனும் ஒருவனைச்
சத்துவ குணப்பிர தானனும் அழகனை
உத்தம புருடனென் றுரைத்தனர்; வேதனை
மத்திம னுமென வகுத்தனர்; சம்புவைத்
தத்துவ நான்முகன் தருமகன், ஐம்முகன்,
அத்திரன். தாமதன். அதமனென் றறைந்தே
மயித்திரா வருணி மறையந்த முதலாம்
சயுத்திக மாம்பஞ்ச ராத்திர முறைமையால்
''பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல்'' என்ற படிக்கும்
இப்படி நிச்சயித் திட்டமங்கையரெலாம்
மைப்படி குழல்திரு மாதுவாழ் புயத்தினும்
ஒவ்வோர் அவயவத் தும்தம துளத்தைச்
செவ்விதிற் சமர்ப்பணம் செய்து செப்புவரே.

*39. திரிமூர்த்தி—மூன்றுமூர்த்தி—முக்கடவுளர். அகவல்—பா வகையுள் ஒன்று; இவ்வகவல், பிரமன் சிவன் திருமால் என்னும் முத்தேவர் இயலும் செயலும் குணமும் நலமும் முதலியவற்றை விரித்துப் பேசுவது. சீபதி—என்பது திருமாலிருஞ்சோலைமலைத் தலப்பெயர்களுள் ஒன்று. சகல வானவருடன்—எல்லாத் தேவர்களோடும். தாணு—சிவன். புகலரும்—(எல்லைகண்டு) சொல்லுதற்கரிய. பதினெண் புவியினர் என்றது பாண்டிநாட்டுத் திருமால் திருப்பதி பதினெட்டிலும் வாழும் மக்களை. பவனி—உலா. பரம சுவாமி என்பது அழகர் திருநாமங்களுள் ஒன்று.*

அவனி மங்கையர்—பூமியிலுள்ள மகளிர். அடைவு—முறை. அண்டகோடியின்—பல அண்டங்களிலும்.

### பிரமன்

பதுமமாலிகை—தாமரை மலர் மாலை. பீடிகை—ஆசனம். சதிர் கொளும் மாது—பெருமை பொருந்திய மாது-சரசுவதி; தட்சிணமேதை—சரீரத்தில் வலப்பக்கத்தே அமைந்த யோகஸ்தானங்களாகிய சோடசகலையுள் ஒன்று. த₃க்ஷிணம்-வலப்பாகம். மேதை₄-ஷோட₃ஶ கலையுள் ஒன்று. காயத்திரி—பிரமன் மனைவியர் மூவருள் ஒருத்தி. கவசமும் குண்டலமும் என உம்மை விரிக்க. கவசம்—உடலைப்பாதுகாக்கும் கருவி. குண்டலம்—காதணி. தாயத்தண்டு—உரிமையான யோகதண்டம். சாவித்திரி—பிரமன் மனைவியருள் ஒருத்தி. காயத்திரி சாவித்திரி என்பவை மந்திரங்களும் ஆம். புயம்—தோள். நான்கு மறை—இருக்கு. யசுர். சாமம். அதர்வம் என்பன. நாவிரு நயனம்—(இரு நாலு நயனம்) எட்டுக்கண்கள். வடம் என்றது பதுமமணிமாலையை. குண்டிகை—கமண்டலம். சுருவம் சுருக்கு என்பவை ஓம குண்டத்துள் நெய் முகந்து ஊற்றும் ப்ரத₄ான த₃ர்வி. இதர த₃ர்வி என்னும் கருவிகள். துசம்—கொடி. குசம் என்பது தருப்பைப் புல்லின் ஒருவகை. அநாமிகையங்குலி—மோதிரவிரல். பவித்திரம்—வைதிகச் சடங்கு செய்வோர் வலக்கை மோதிர விரலில் தருப்பைப் புல்லாற் செய்து பூணும் ஒருவகை அணி. சநாதனமாகும் சமிதை—பழமையான சமிதை. சமிதையித்துமமும்—ஓமகுண்டத்தில் பெய்யும் அரசு புரசு முதலியவற்றின் சுள்ளிகள். சமிதையும் இத்துமமும் என உம்மை விரிக்க. இத்₄மம்—கணக்கிட்டுப் பெய்யும் சமித்து. முந்நூல்—பூணூல். படைப்பு—சிருட்டி. பூருவசிகை — முன்குடுமி. புண்டரநுதலும் — புண்ட்₃ரம் அணிந்த நெற்றியும். புண்ட்₃ரம்—திருமண், சந்தனம், நீறு முதலியவற்றுள் ஒன்றினால் நெற்றி முதலிய உறுப்புக்களில் இடும்குறி. உழைச்சருமம்—மான்தோல். அநுக்ரகம்—

அருள். மத்திமம்—இடைப்பட்டது. தசதாலத்திருவுரு—சிற்பசாத்திரப்படி மும்மூர்த்திகளுக்கு விக்₃ரஹம் அமைக்கும்போது த₃ஶதாலம் அளவுள்ளதாயிருக்கவேண்டும். அதில் திருமாலுக்கு உத்தமத₃ஶதாலமும், பிரமனுக்கு மத்₄யமத₃ஶதாலமும், சிவனுக்கு அத₄மத₃ஶதாலமுமாய் இருக்க வேண்டும் என்ற விதி₄யைக் காண்க. மற்ற தேவதைகளுக்குக் குறைவுள்ள அளவு விதி₄க்கப்படுகிறது. அன்னம் என்பதைப் பின்னும் கூட்டி அன்னம் ஆர்ந்த கேதனமும் என்க. ஆர்ந்த—பொருந்திய. கேதனம்—கொடி. பொய்யிலாவுலகு—சத்தியலோகம். சித்திரைமதி—சித்திரைமாதம். அபிசித்து நாள்—உத்திராடத்தின் நான்காம் பாத₃மும் திருவோணத்தின் முதல் பாத₃மும் சேர்ந்த கூட்டு நட்சத்திரம். சூரிய உதயத்திலிருந்து பதினைலு நாழிகைக்குமேல் பதினைறு நாழிகைக்குட்பட்ட அபி₄ஜித்து முஹூர்த்தம் என்றுமாம். வித்தகன் — அதிசயத் தன்மையுடையவனுகிய திருமால். விராசத சபையும்—விஶேஷமாக இராஜஸ குணமுடையார் நெருங்கிய சபையும். தலைச்சக்கரம்—ஶிரஸ்சக்ரம். தாரையாச்சிரமம் யாது என்பதை வல்லார் வாய்க் கேட்டுணர்க. அலைக்கடல் அமுதாய் அவிர் புரோடாசமும்—அலையினையுடைய (திருப்பாற்)கடலிலே தோன்றிய அமுதம்போல் விளங்குகின்ற ஓமத்தீயில் பெய்யப்படும் அவியுணவும். அவிர்தல்—விளங்குதல். புரோடாசம்—ஓமத்தீயில் தேவருக்குக் கொடுக்கப்படும் அவியுணவு. அபயம்—அஞ்சலென்று அமைந்த கை. வரதம்—வரந்தருதற்கு அடையாளமாக அமைந்த கை. உபயம் ஆம் வாமத்து ஒரு மறை மலரும்—இரண்டு கைகளையுடைய இடப்பாகத்தே (ஒரு கையில்) தாமரை மலரும். உப₄யம்—இரண்டு. வாமம்—இடப்பாகம். மறை—தாமரை. (முதற்குறை). அந்தி—(ப்ரளய)ஊழி முடிவு காலம். முடிவு—அழிவு. உந்தி—திருமாலின் நாபி₄.

### சிவபிரான்

ஆனையுரி—ஆனைத்தோல். புலியின் அதள்—புலித்தோல். சிவபெருமானுக்கு ஆனைத்தோல் போர்வை, புலித்தோல்

உடை. அக்குவடம்—ருத்திராட்சமாலை. நக்கம்—அம்மணம். சிக்கம்—உறி. ஒட்டுக்கோவணம்—சிறு துணிகளை இணைத்துத் தைத்த கோவணம்; 'துன்னம் பெய் கோவணம்' (திருவாசகம் 12-2) என்பது நோக்கத்தகும். காடு—சுடுகாடு. கரந்தை—ஒருவகைக் கொடிப்பூ. கபாலம்—மண்டையோடு. மத்தம்—ஊமத்தம்பூ. உமைப்பேதை—உமையாகிய பெண். பெருகு அறுகு—மிக்க அறுகு தாளி—கொடி வகையுள் ஒன்று. கூவிளம்—வில்வம். பரவு—விரிந்த. மின் திகழ் நூல்—ஒளி விளங்கும் பூணூல். யோகபட்டம் — யோகிகள் தம் முதுகையும் முழங்காலையும் இணைத்துக் கட்டிக்கொள்ளும் கச்சை. திரியக் புண்டர தேசு செய் நுதலும்—குறுக்காக இட்ட புண்ட்₃ரத்தால் அழகுடையதாக விளங்கும் நெற்றியும். திரியக்கு—குறுக்கானது. புண்டரம்—நெற்றியில் இடும் குறி. தேசு—அழகு. நுதல்—நெற்றி. ஊனுன்—ஒருவகைக் கொடி. வக்கிர தந்தம்—வளைந்த பல். உக்கிர ரூபமும்—கொடிய உருவமும். ஊர்த்துவ சூடமும்—மேனோக்கிய சடைமுடியும். சங்கில் ஓர் குழையும்—சங்கினுற் செய்யப்பட்ட ஒரு காதணியும். தாடங்கச் செவியும்—தோடணிந்த காதும். கடுமோகம் மிஞ்சும் மகாமைதுனமும்—கொடிய காம மயக்கம் மிகுந்த பெரும் புணர்ச்சியும். ஆருத்திரா—திருவாதிரை. வேதன் ஆயுளின் வீவுள ஆயுளும்—பிரம கற்பத்தினுள் முடிதலையுடைய வாணுளும். சாதனு ஏகாதச ருத்திரத்வமும்—இவன் ஸாத₄கன் (உபாஸகன்) என்று காட்டும் ஏகாதச ருத்திரத் தன்மையும். ஏகாதச ருத்திரர்—மகாதேவன், சிவன், உருத்திரன், சங்கரன், நீலலோகிதன், ஈசானன், விசயன், வீமதேவன், பவோற்பவன், கபாலி, சௌமியன் என்பார். அட்டமூர்த்தித்வம்—நிலம், நீர், தீ, வாயு, ஆகாயம், சூரியன், சந்திரன், யஜமானன் என்னும் எட்டு வகை வடிவுடையவனுய் இருக்கும் தன்மை. உள் தெளிவார் சொல் உருத்திர சூக்தமும்-(உருத்திரனின் உள்ளேயிருப்பவனும் நாரணனே என்னும்) மனத்தெளிவுடையார்

ஓதும் உருத்திரனைப் புகழ்ந்து பேசும் வேதநூற் பிரிவும். தாவிய—பரவிய. அதம—கடைப்பட்டதான. எருத்துக் கொடி—விடைக்(ரிஷப₄க்)கொடி. என்பு—எலும்பு.

## திருமால்

கமல லோசனங்களும்—தாமரைக்கண்களும். கரம்—கை. கனகம்—பொன். தினகரன்—சூரியன். திகழ்—விளங்குகின்ற. சமந்தகம்—கண்ணன் கழுத்தில் அணிந்த மணி(ரத்னம்).மகரகுண்டலம்-சுறுமீன் வடிவமைந்த காதணி. நகுதல்—விளங்குதல். கதிர்—கிரணம். கவுத்துவம்—திருமால் மார்பில் அணிந்த ரத்தினம். திருமறு—ஸ்ரீவத்ஸம். கடகம், கங்கணம் என்பவை முன்கையில் அணியும் அணி வகைகள். அங்குலியம்—மோதிரம். அங்கதம்—தோள்வளை. வடிவு—அழகு. வயிறணிபந்தம்-அரைப்பட்டிகை. நூபுரம்-பாத கிண்கிணி. அடிநுதிகளில் மிஞ்சியும்—கால்களில் கட்டை விரலை அடுத்த விரலில் அணியும் மோதிரமும். தாபதர்—முனிவர். தாபதரும் வியப்ப என உம்மை விரிக்க. வைசயந்தி—திருமால்அணியும் வனமாலை. பொன்வத்திரமும் (வஸ்த்ரமும்) பொன்மாலையும் எனக்கூட்டுக. கேசம்—குழல், சதுர்ப்புயங்களும்—நான்கு தோள்களும். அறம் முயல் ஆழி—அறம் (தழைய) முயலும் சக்கராயுதம்; 'அறமுயலாழிப்படையவன்' (2-10-2) என்பது திருவாய்மொழி. 'அதிர் குரற்சங்கத்தழகர்' (2-10-2) என்பது திருவாய்மொழி. சார்ங்கம், நாந்தகம், கவுமோதகி என்பன திருமாலின் பஞ்சாயுதங்களில் சேர்ந்த வில்லும் வாளும் க₃தை₃யும். சந்த்ராननம்—சந்திரனைப்போல் தண்மையும் ஒளியுமுடைய முகம். குமிழ்—ஒருவகைப் பூ. இணை—ஒப்பு. நாசி—மூக்கு. செவி—காது. பொற்பொடி என்றது ஸ்ரீசூர்ணத்தை. ரசதமண்-வெள்ளிய திருமண். தொண்டை-கோவைக்கனி; 'தொக்க சோதித் தொண்டை வாயும்' (5-5-5) என்பது திருவாய்மொழி. முறுவல்—புன்னகை. வித்தக விராட்டாம் விசுவரூபமும்—அதிசயிக்கத்தக்க சரா

சரங்களாகிய பேருருவமும். உத்தமம்—சிறந்தது. ககபதி பிடர்—பறவையரசாகிய கருடன் பின்கழுத்து. பிரசன்ன வதனம்—காட்சிக்கினிய முகம். சண்டபானுவின் ஒளிர்—கடுங்கதிரவன்போல் விளங்குகின்ற. அண்டர்கள்—தேவர்கள். கருதரும்—நினைத்தற்கரிய. அநந்த கல்யாண குணங்களும்—எல்லையற்ற நற்குணங்களும். தரும்—(தான்) பெற்ற. மதனிலும் இயல்—மன்மதனைக் காட்டிலும் மேம்பட்டு விளங்குகின்ற. சதகோடி எழிலும்—அளவு கடந்த அழகும். பூருவசிகை—முன் குடுமி. ஆகாயபுருடன்—பரமாகாசமாகிய நீள் விசும்பில் உறையும் புருடன். பரவத்துத்வம்—பரம்பொருளாம் தன்மை. அகில காரணன்—உலக காரணன். மீத்திகழ் பரம வீட்டுடன்—மேலே விளங்குகின்ற உயர்ந்த வீட்டுலகமாகிய வைகுந்தத்தோடு. பரிதி மண்டலம்—சூரிய மண்டலம். சத்வகுணப்ரதானன்—சத்துவகுணமுடைய தலைவன். வேதன்—பிரமன். சம்பு—சிவன். அத்திரன்—நிலையற்றவன். தாமதன்—தாமசகுணம் உடையவன். அதமன்—கடைப்பட்டவன். மைத்திராவருணி—வேதத்தின் ஒரு பகுதி. மறையந்தம்—உபநிடதம். சயுத்திகம்—ஆராய்ச்சியோடு கூடிய. பாஞ்சராத்திரம்—வைணவாகமம். ஏனை—மற்ற. கருமம்—செயல். கட்டளைக் கல்—உரைகல். 'பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம் கருமமே கட்டளைக் கல்' என்பது திருக்குறள் (505). அழகர் உலாப் போந்த போது காண வந்து திரண்ட தேவருள் முதற் கடவுள் மூவரையும் அவரவர் இயலும் குணமும் எழிலும் செயலுமாகியவற்றை மைத்திராவருணி முதலிய வேதப் பகுதிகளாலும் பாஞ்சராத்திரம் முதலிய ஆகமங்களாலும் ஆராய்ந்து 'பெருமைக்கும் ...கருமமே கட்டளைக் கல்' என்ற வள்ளுவர் வாய்மொழிக்கிசைய அழகரை உத்தம புருடனென்றும். பிரமனை மத்திம புருடனென்றும். சிவனை அதம புருடனென்றும் துணிந்த மங்கையர் அழகருடைய தோள் முதலிய அவயவங்களில் தம் மனத்தைச்

செலுத்தி நின்று செப்புவர் என முற்றுவிக்க. சமர்ப்பணம் செய்தல்— காணிக்கையாகக் கொடுத்தல்.

தரு

சரணங்கள்

இராகம்—புன்னுகதோடி. தாளம்—ரூபகம்.

40. பைந்துழாய் மலர்த்தொடை புனைசுந்த ரேசுரன்
உந்தியோடு சென்றது எந்தன்புந்தி தானென்பார்
அடையிலே துயின்றவர் துடியிடையின் மேவுபொன்
உடையினல் அவிழ்ந்தது நமதுஉடையெலா மென்பார்
ஊழியூழி மால்வலக்கையில் வாழியாகி வாழ்திரு
ஆழியே கவர்ந்தது விரலாழியை என்பார்
வளை செழுங்கடல் உவாமதியின் மாசறும்
வளையதே கவர்ந்தது நங்கை வளையெலாம் என்பார்
பவளவாய்ச் சிறுமுறுவலும் பரவை மார்பமும்
தவளநாமமும் பசலையைத் தந்ததே என்பார்
கண்கள் செய்திடு நவரசங் களிலும் நால்வகைப்
பெண்களும் மயங்கி நாமிவர்பின் செல்வோம் என்பார்
தாளம்ரூபகம் இதின் தன்மை நாடியே
நாளும் ராகமும் புன்னுக தோடியே.

*40. அழகர் வீதி உலாவரக்கண்ட மகளிர் கூற்று. சுந்தரேசுரன் என்றது அழகரை. உந்தி—திருநாபி. புந்தி—மனம். அடை—இலை. அடையிலே துயின்றவர்—(பிரளய வெள்ளத்து) ஆலிலையிலே பள்ளிகொண்டவர்—என்றது இங்கே அழகரை. துடியிடை — துடிபோலும் இடை. பொன்னுடை—பீதாம்பரம். வாழியாகி—மகிழ்ச்சியுடையதாகி. திருவாழி—சக்கரம். விரலாழி—மோதிரம். வளை செழுங்கடல் உவா மதியின் மாசு அறும்—உலகைச் சூழ்ந்த வளமுடைய கடலில் தோன்றும் களங்கம் நீங்கிய கலை நிறைந்த சந்திரனைப் போல் விளங்குகின்ற. வளையது—வளை. அது-பகுதிப் பொருள் விகுதி. வளை—சங்கு. நம் கைவளையெலாம் எனப் பிரிக்க. சிறுமுறுவல்—புன்னகை. பரவை—*

*பரந்த. தவளம்—வெண்மை. நாமம்—திருமண். பசலை—பசப்புநிறவேறுபாடு. நவரசங்கள்—சிருங்காரம், ஆசியம் (ஹாஸ்யம்), கருணை(சோகம்), ரௌத்திரம், வீரம், பயம், அருவருப்பு. அற்புதம். சாந்தம் என்பவை. காதலுற்ற மகளிர்க்கு உடை நெகிழ்தலும், மோதிரம் வளை முதலியவை நழுவுதலும் நிறம் வேறுபடுதலும் இயல்பு.*

*சுந்தரவல்லி வருதல்*

*அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

41. கந்தனைமுன் தந்தவளும் கலைமகளும் சசியும்நிதம்
காலந் தோறும்
சிந்தனைசெய் செங்கமலத் திருவடியாள் சீபதியிற்
சிறந்து வாழும்
நந்தனைஆ நந்தனைமு குந்தனைக்கோ விந்தனைச்சீர்
நண்ணி ஞானை
வந்தனைசெய் திடமகிழ்ந்து சுந்தரவல் லியும்விரைந்து
வருகின் றளே.

*41. கந்தனை முன் தந்தவள்—உமாதேவி. கலைமகள்—சரசுவதி. சசி—இந்திராணி. செங்கமலத் திருவடி ஆள் சீபதி—செந்தாமரை மலரில் தங்கிய திருமகளின் அடிகளால் ஆளப்படுகின்ற சோலைமலை. நந்தனை-சங்கத்தையுடையவனை.*

*தரு*

*இராகம்—ஜங்கலா.* *தாளம்—ரூபகம்.*

*பல்லவி*

42. சுந்தரவல்லியும் செந்திருமாலைத்
தொழுதிட வந்தனளே.

*அனுபல்லவி*

கந்தர மீது கவின்பெறு மாணிக்கக்
கண்டியுடன் முத்துக் கண்டியும் கொண்டொளிர்
—சுந்தர

*சரணங்கள்*

பத்தரை மாற்றுப் பசுந்தங்கப் பாவை பணிந்திடு மெய்ச்
சேடும்
பசலையும் பூணும் களபமும் கோலமும் பம்புமுலைக்
கோடும்
இத்தரை யெண்மலர் செண்பக நாசிஇலங்கிட ஏர்கூடும்
இந்தீவரந்தாழ் இணைவிழிக் கெண்டையும்
எண்டிசையும் விலை கொண்டிட மண்டிடும் —சுந்தர
வட்டமதியும் களபமும் போல்நுதல் மான்மத ரேகைமின்ன
வாளிமுருகுகல் லோலைகற் குண்டலம் வள்ளை
யிரண்டிலும் துன்ன
மட்டலர்சூடும் சடையலங்கார வரிசைநகைகள் சொன்ன
வங்கிவளைகளும் கங்கணமும் கவி வாணர்புக
ழொட்டி யாணமும் பூணும்—சுந்தர
நாசிநுனியிற்புல் லாக்குடன் பேசரிநத்தும் ஒளிவீச
நன்மணிக் கஞ்சுகம் கச்சொளிர்மேகலை நாடிரவிகூசப்
பாசிழையாரிவள் போலிலையென்று பகவன்முதற்பேசப்
பாடகம் தண்டைபொற் பாதசரம்விரற்
பற்றுப்பவ ளத்திற்பணி மெட்டிட்டுகிர் முத்திற்
பொலி—சுந்தர
நாதமிக்காயின வேதத்திற் சங்கலா ராகத்தருவோத
நாடகமானது ருபகத்தேபிற நாடகத்தைமோதப்
போதவுமெச்சிப் பதினெண் கணங்களும் புத்தமுதார்கீத
பூரண பொற்றெடி யாமெனச் செப்பிடப்
புதுமைப்படு நனைமொய்த்திடு துணர்சுற்றிடு
பிணையொத்திடு—சுந்தர

*42. கந்தரம்—கழுத்து. கவின்—அழகு. கண்டி— மாலை. கவின் — விளங்குகின்ற. மெய்ச்சேடு — உடற் பெருமை. களபம் — கலவைச் சந்தனம். கோலம்—வரிக் கோலம். பம்புதல் — மிகுதல். முலைக்கோடு — தனமாகிய கோடு. கோடு—கொம்பு, மலையும் ஆம். யானைக்கொம்பும்*

மலையும் தனத்திற்கு உவமை கூறப்படும் பொருள்கள். இத்தரை எண்மலர்ச் செண்பக நாசி இலங்கிட — இந்த உலகத்தார் பாராட்டும் செண்பக மலர்போன்ற மூக்கும் விளங்க. நாசியும் என உம்மை விரிக்க. ஏர் கூடும் இந்தீவரம் தாழ் இணை விழிக் கெண்டையும் எண் திசையும் விலை கொண்டிட — அழகு மிக்க கருங்குவளை மலரும் ஒப்பாகாமையால் தாழும்படியான இரண்டு கண்களாகிய கெண்டைமீன்களும் எட்டுத் திக்கையும் விலையாகக் கொள்ள. நுதலும் மான்மத ரேகையும் மதியும் களபமும் போல் மின்ன — நெற்றியும் அதில் அணிந்த கத்தூரித் திலகமும் சந்திரனும் கலவைச் சாந்தும் போன்றும் விளங்க. வாளி, முருகு, கல்லோலை, கற்குண்டலம் என்பவை மகளிர் காதில் அணியும் அணிவகை. வள்ளை இரண்டிலும் துன்ன — வள்ளைக் கொடி போன்ற இரண்டு காதுகளிலும் பொருந்த. மட்டலர் சூடும் சடையலங்கார வரிசை நகைகள் — தேன் பொருந்திய பூக்களைச் சூடும் குழலுக்கு அழகு விளைக்கும் சிறந்த நகைகளும். சொன்ன வங்கி — பொன்னாற் செய்யப்பட்ட வங்கியும். வங்கி — தோள் வளை. நாசி நுனியிற் பூணும் புல்லாக்குடன் பேசரியும் நத்தும் என இயைக்க. நாசி-மூக்கு. சடையலங்கார நகைகளும், வங்கியும், வளைகளும், கங்கணமும், ஒட்டியாணமும், புல்லாக்கும், பேசரியும், நத்தும், ஒளிவீச என்க. கஞ்சுகம் — சட்டை. கச்சு — ரவிக்கை. மேகலை — இடையில் அணியும் அணிவகை. மணியைக் கச்சொடும் மேகலையோடும் இயைக்க. கஞ்சுகமும் கச்சும் மேகலையும் நாடி ரவி கூச என்க. நாடி - பார்த்து. ரவி - சூரியன். கூச-வெட்கப்பட. பாசிழையார்-பசுமையான அணிகலன்களையணிந்த மகளிர். இவள் போல் பாசிழையார் இலை என்று கூட்டுக. பகவன் — பிரமன். பாடகம், தண்டை, பாதசரம் என்பவை — மகளிர் காலில் அணியும் அணிகள். விரற் பற்றுப் பவளத்தில் பணிமெட்டு இட்டு — விரலாகிய இணைந்த பவளத்தில் அணியாகிய மெட்டியினை அணிந்து. மகளிர் கால் விரல்களுக்குப் பவளம் உவமை. மெட்டு —

மெட்டி; இது மகளிர் காற் பெருவிரலில் அல்லது அதற்கு அடுத்த விரலில் அணியும் ஒருவகை அணி. உகிர் முத்தில் பொலி—நகங்களாகிய முத்தினுல் விளங்குகின்ற. நாதம் மிக்காயின வேதத்தில் சங்கலா ராகத் தரு ஓத-சுவரம் மிகப் பொருந்திய இசை நூலில் (பேசப்படும்) சங்கலா ராக இசைப் பாட்டைப் பாட. நாடகம்-தாளமொத்துக்கிசைய ஆடும் ஆடல். ரூபகத்தே நாடகமானது பிறநாடு அகத்தை மோத-ரூபகதாளத்தோடு கூடிய நாடகமானது பிறவிடயங் களிற் செல்லும் மனத்தைத் தாக்க. பதினெண் கணங்களும் போதவும் மெச்சிப் புத்தமுது ஆர் கீதபூரண பொற்றெருடி யாம் எனச் செப்பிட-பதினெட்டுக் குழுவினரான தேவரும் மிகவும் பாராட்டி புதிய அமுதத்தோடு தோன்றிய இலசத் திறம் வாய்ந்த திருமகள் என்று சொல்லும்படி. புதுமைப் படு நனை மொய்த்திடு துணர்சுற்றிடு பிணையொத்திடு-அப் பொழுதரும்பிய அரும்புகள் நிறைந்த மாலையை அணிந்த பெண்மானை ஒத்த. நனை—அரும்பு. துணர்—மாலை. கந்தர மீது பவளக் கண்டியும் முத்துக் கண்டியும் கொண்டு. மெய்ச்சேடும் முலைக்கோடும் நாசியும் இலங்கிட, விழிக் கெண்டை எண்டிசையும் விலைகொண்டிட, நுதலும் மான் மத ரேகையும் மின்ன. வள்ளை இரண்டிலும் வாளியும் முருகும் கல்லோலையும் கற்குண்டலமும் துன்ன. சடை யலங்கார நகைகளும். வங்கியும். வளைகளும். கங்கணமும். ஒட்டியாணமும். புல்லாக்கும் பேசரியும் நத்தும் ஒளிவீச, ரவிகூச. பேச. பொலி. சுந்தரவல்லி. பிணையொத்திடு சுந்தர வல்லி. ஓத. மோத செட்பிடச் செந்திருமாலைத் தொழுதிட வந்தனள் என மூற்றுவிக்க.

சுந்தரவல்லி உருவ வருணனை

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

43. மாணிக்கந் துகிர்நாக மணிகள்சாம் பூநதத்தை
வடிதூள் செய்து
சேணுற்ற சோலைமலைச் செந்தேனிற் குழைத்திதனைத்
திரட்டி முன்பே

கோணத்தே ருதிறங்கும் குப்பிரசச் சிந்தூரக்
குருவும் கூட்டிப்
பாணித்தவ் வயன்செயும்பெண் பதுமையுமிப்
பரிசு ருதே. [பதுமையங்கப்

*43. துகிர்—பவளம். நாகமணி—நாகரத்தினம். சாம்பூநதம்—பொன். வடிதூள்—கப்பி நீக்கிய பொடி. சேண்—பெருமை. குப்பி-கண்ணுடிக் குடுவை. குரு-ஒளி. பாணித்து-பாவித்து. அயன்—பிரமன். இப்பதுமை என்றது சுந்தரவல்லியை. பதுமை-பாவை. அங்கம்-உடல். பரிசு-தன்மை.*

*திபதை*

*இராகம்—ஆகிரி.* *தாளம்—அடதாளச் சாய்ப்பு.*

44. உவந்துதேன்மருவும் சிவந்தகோகநக முகத்தினள்—
கொம்பின்
ஊசலாடுகிளி நாசி போலும்விரல் நகத்தினள்
பவந்தமாயோர்கன்னல் தவந்தனல்வருவிற்
புருவத்தாள்—முன்பின்
பருவம்ஆறும்வந்து பணிமடந்தையிளம் பருவத்தாள்
கனதை ஞானியர்கள் மனதைவீசுவலைக்
கண்ணினள்—கம்பு
கண்டமூடுசுதி கொண்டுகூருமெழு பண்ணினள்
வினதைசூனுபணி வனிதையோதுகுமிழ் நாசியாள்—ஆயுள்
வேதமுடனேயோக பாதம்பகரும்திரு வாசியாள்
அடிகொள் கற்பதுமை முடிதுளக்கிடும்சொல்
அமுதத்தாள்—கடல்
அமுதுமெச்சும்அதி மதுரமுற்றஇதழ்க் குமுதத்தாள்
சுடிகைச்சூழியத்திற் கடிகொள் சாதிபுட்பம்
சூடினள்—அடித்
துணைகளாலென்மிடிப் புணரிதாண்டிவிழச் சாடினள்
மாந்தளிர் மேனியில் வாய்ந்தசவ் வாதணிந்த
வாடையாள்—அரியை
வாரும் இரும் நடவும் சேருமெனும் கடைக்கண்
சாடையாள்

ஆந்தரத் தேய்திருவா மோரெழுத்தெனும் காதினள்—அரி
தாகும் கலைகளறு பத்துநான்கும் நன் கோதினள்
ககரமானதிவ்ய மகரயாழ்பயிற்று செங்கையாள்—மூடும்
கலையைக் கிழித்துச் செம்பொன்மலையைப்
பழித்தஇரு கொங்கையாள்
குகைசொல் மல்லிகையில் முகைவணங்கு கவின்
உந்தியாள்—ஆலின்
கோலத்தளிரின் விண்டுபோலப் பிறங்குரோம
பந்தியாள்
தாமப் படவரவ மாமத் தலையின்பின்னற்
சடையினள்—வாழைத்
தம்பம் இரண்டெனவே அம்பரமுடுலாவு துடையினள்
ஏமப்படம் சுமந்து காமப்பயலைவென்ற இடையினள்—
முன்னம்
இன்னம் பிரமன் இவர் அன்னம் பழகொய்யார
நடையினள்
வேலையார்திருவின் மேலெனுமுனிவர் விள்ளவே—மலர்
வேதனுதியர் இதேதெனு மகிழ்வு கொள்ளவே
சோலைமாமலையின் மாலைமால்புரியத் தோன்றினள்-வல்லி
சுந்தராங்கம தறிந்துயாதுவமை சொல்வமே.

*44. கோகநகம்—தாமரை. கன்னல் தவந்தனுல் பவந்தமாய் வரு விற்புருவத்தாள்—கரும்பு செய்தவத்தால் பிறந்து வந்த வளைந்த புருவத்தையுடையாள். பவந்தம்—பிறப்பு. கன்னல்—கரும்பு. வில்—வளைவு. புருவத்துக்குக் கரும்பு உவமை. முன்பின் பருவம் ஆறும்—மகளிர்க்கு உரிய பருவம் ஏழனுள் முன்னுள்ள பேதை. பெதும்பை. மங்கை என்னும் மூன்றும் பின்னுள்ள அரிவை தெரிவை பேரிளம் பெண் என்னும் மூன்றும் ஆகிய ஆறு பருவங்களும் வந்து வணங்கும் மடந்தையாகிய இளம் பருவத்தாள். கனதை—கௌரவம். வீசுதல்—சுழற்றுதல். கம்புகண்டம் ஊடு—சங்குபோன்ற கழுத்தில். சுதிகொண்டு—சுருதிகொண்டு. கூர்தல்—மிகுதல். எழுபண்—ஏழுசுரங்கள். வினதைசூனு—*

கருடன். வினதை சூனு பணி வனிதை—மூக்கழகுக்குத் தோற்றுக் கருடனும் தாழும் மங்கை. குமிழ் ஒது நாசி யாள் என இயைக்க. குமிழ்—ஒருவகை மலர்; மூக்குக்கு உவமை கூறப்படுவது. நாசி—மூக்கு. ஆயுள்வேதம்—வைத்திய நூல். யோகபாதம்—யோகத்தை விரித்துரைக்கும் பாஞ்சராத்திராகமப்பகுதி. திருவாசியாள்—அழகிய வாக்குடையவள். அடிகொள்—பாதங்களைக்கொண்ட. கற்பதுமை—கல்லிற்செதுக்கிய பாவை. முடிதுளக்கிடும்—தலையசைத்துப் பாராட்டும். அதிமதுரம்—மிக்க இனிமை. இதழ்க்குமுதத்தாள்—அதரமாகிய குமுதமலரையுடையவள். சுடிகைச் சூழியத்தில்—தலையில் (முடித்த) உச்சிக் கொண்டையில். கடி—மணம். சாதிபுட்பம்—சாதிமல்லிகை. துணை அடிகளால்—இரண்டு திருவடிகளால். மிடிப்புணரி—வறுமைக் கடல். சாடினுள்—மோதினுள். வாடை—வாசனை. சாடை—குறிப்பு. ஆந்தரத்து ஏய் திரு ஆம் ஓர் எழுத்து எனும் காதினுள்—இரகசியமாகப் பெறப்படுகிற சிறப்பொடு கூடிய ஓற்றையெழுத்தான பிரணவம் என்று சொல்லத்தக்க காதினையுடையாள். ககரம் ஆன—க$_3$ ஆன. கரம்—சாரியை. ககரம் ஆன—க$_3$ாந்த$_4$ாரமாகிய கைக்கிளை இசையின் எழுத்தொடு கூடிய. பயிற்றுதல்—பழகுதல். மூடுதல்—மறைத்தல். கலை—உடை. குகை—சிமிழ். மூகை—அரும்பு. கவின்—அழகு. உந்தி—கொப்பூழ். உந்திக்குக் குகையும் மல்லிகை யரும்பும் உவமை கூறப்படும். விண்டு—திருமால். சுந்தரவல்லியின் வயிற்றுக்கு ஆலின் தளிரும் அவ்வயிற்றில் அமைந்த மயிரொழுக்குக்கு ஆலிலையிற் பள்ளிகொண்ட திருமாலும் உவமை. பிறங்குதல்—விளங்குதல். ரோமபந்தி—மயிரொழுங்கு. தாமம்—ஒழுங்கு. படஅரவம்—படமெடுத்த பாம்பு. தலைப்பின்னலுக்குப் படமெடுத்த பாம்பு உவமை. தம்பம்—தூண். அம்பரம்—ஆடை. துடைக்குத் தம்பம் உவமை. ஏமப்படம்—

*பொன்னுடை. இவர்—ஏறுகின்ற. பிரமன் இவர் அன்னமும் என உம்மை விரிக்க. வேலையார்திரு—திருப்பாற் கடலிலே பொருந்திய திருமகள். திருவின் மேல் என—திருவினும் மேம்பட்டவள் என்று. விள்ள—சொல்ல. மால்புரிய—மயக்க.*

*எழுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்.*

**45.** வந்த சுந்தர வல்லி மாதும்
வணங்கினாள் நெடு மாயனை
கந்தம் உண்ட இரண்டு வண்டெனும்
கண்க ளால்விளை காதலைச்
சந்த தந்தநு வோடு லாவிய
சாயை போல்வரு சகியுடன்
சிந்தை கொண்டவர் சீர்க ளைத்துதி
செய்வர் போலுரை செய்வளே.

*45. கந்தம்—நறுமணம். கண்களுக்கு வண்டு உவமை. சந்ததம்—எப்போதும். தநு—உடல். சாயை—நிழல். சகி—தோழி. துதி செய்பவர்போல் என்க.*

*சுந்தரவல்லி அழகர் பெருமை சொல்லல்*

*திபதை*

*இராகம்—உசேனி.* *தாளம்—சாய்ப்பு.*

**46.** இந்த மோகன புருடன் மார்பில்வாழ்—கோகநகையும்
என்னமாதவம் முன்னே செய்தாள்
சந்தணிந்ததோள் தழுவி னாரெலாம்—வேதனாதியர்
தலைவணங்கிடும் தலைமை யாவரே.
கழல்தழுவிய கங்கை யானபெண்—கரளகந்தரன்
கலைகள் கூரும் தலையில் ஏறினாள்.
நிழல்செ யுங்குடை யாதிசேடனார்—மரபுளோரரன்
இழைகளோடு குழைக ளாயினார்.
சூலமரனுக் கருளும் ஆழியும் சங்கும்—என்மனம்
துன்றும் இருளைத் தின்று காயுமே

ஞாலம் அளந்த பாத தாமரை மகிமையால்—சிலை
நாரியானதும் சீரிதாகுமே
மணிகளிந்திர ஞன கவுத்துப மாணிக்கம்—திகழ்
மார்பும் நூலும் என்சார்பதாகுமே.
திணிபெரும்புய வரையின் மீதொளிர்—மகரகுண்டலச்
செவிகளால் இப்புவிகள் வாழுமே.
செய்ய தாமரைக் கண்கள் கண்டபேர்—சகலதீவினை
தீர்ந்து நன்மைகள் சேர்ந்து வாழ்வரே.
வையமும் தரும் வனச நாபியும்—நாடிடிற்பர
வத்து இவன் என்று உத்தி தோன்றுமே.
வாரித் துயில் அழகர் முன்பு அருள்—மதனுக்கும் மதன்
வடிவ மாகியிப் படியை ஆளவே
மேருவிற் பொலி கருடன் ஏறியே—காட்சி தந்திட
மேவினர் எனது ஆவி நாதனே.

*46. கோகநகை—திருமகள். வேதன் ஆதியர்—பிரமன் முதலியோர். கழல் தழுவிய கங்கையான பெண் கரள கந்தரன் தலையில் ஏறினள்—என்றது திரிவிக்கிரமன் உல களந்த நிலையில் மேலெழுந்த திருவடியைப் பிரமன் கங்கை நீரால் ஆட்டிப் பூசிக்க, அத்திருவடியினின்று பெருகிய தீர்த்தத்தைச் சிவபிரான் சடைமுடியில் ஏற்றதை நினைந்து கூறியது. கரளகந்தரன்—விடத்தைக் கழுத்திலே தரித்தவன்—சிவபெருமான். இந்த மோகன புருடனுக்கு நிழல் செயும் குடையாய் விளங்கும் ஆதிசேடன் மரபின ரான நாகர் சிவபிரானுக்குக் குழையும் இழையும் ஆயினர் என்றவாறு. "சென்றால் குடையாம்" என்பது முதல்திரு வந்தாதி 53. தன்னைப் பூசித்த சிவனுக்கு ஸுதர்சனமாம் வான் சூலாயுதத்தை அருளினன் என்னும் புராணச்செய்தியைப் பின்பற்றி 'சூலம் அரனுக்கருளும் ஆழி' என்றார். சிலை—கல். நாரி—பெண். சிலை நாரியானது என்றது அகலிகை சரிதையை உட்கொண்டு. மணிகளிந்திரன்—மணிகளுக்கு அரசான கவுத்துப மாணிக்கம் என்க. சார்பு—துணை. வனசநாபி—தாமரையுந்தி. பரவத்து—பரம்பொருள். உத்தி—யுக்தி. வாரி—கடல். மதன்—மன்மதன்.*

*சேவை தந்த சுவாமியை அம்மலேச்*
*சித்தராகவே சிந்தித்துச் செப்புதல்.*

*தரு*

*இராகம்—மோகனம்.* *தாளம்—அடதாளச்சாய்ப்பு.*

*பல்லவி*

47. இவர்தானே சித்தர் இவர்தானே.

*அநுபல்லவி*

தவருமல் வந்தபொன்னேத் தடமார்பில் வைத்து
வந்தார்—இவர்தானே

*சரணம்*

விட்ணுசித்தருக்கும்முன் விசயற்கும் வேதனுக்கும்
உட்ண மின்றி ராசயோகம் உபதேசித்தார்—இவர்தானே
துளசிதீர்த்தம் வார்த்துத் துன்பநோய்களைத் தீர்த்து
அளவில் வெம்பவங்களை யகற்றியமுதம் ஈந்தார்—
இவர்தானே
மண்ணைப் பொன்னுக்கிடு மவர் ஆதிபரவஸ்துவென்
றெண்ணத் திருமண் காப்பும் எழுதிக்காட்டும்
ப்ரசித்தர்—இவர்தானே
அற்றவெள்ளி நடுவே ஆயிரம் பணத்தொன்று
பற்றும் குருச் சிந்தூரம் பாலத்தில் வைத்தகண்ணர்—
இவர்தானே
வாதமாம் அலங்கார மாரதத்தை நடத்தும்
சூதனென்று பாரதம் சொல்லப் பெருந்தேர் ஊர்ந்தார்—
இவர்தானே
அண்டங்கள் என்னும் பல்பந்தங்கை அடக்கிலீலே
கொண்டு திருவுபய கொங்கைச் செப்பில் ஒளிப்பார்—
இவர்தானே
உப்பும் மணித்திரளும் உதிக்கும் புணரியுள்ளும்
மைப்புயல் எனச்சோலே மலேக்கும் அரசாய்
வாழ்வார்—இவர்தானே.

47. பொன் என்றது திருமகளை. தடமார்பு—விசாலமான மார்பு. விட்(டு)ணுசித்தர்—பெரியாழ்வார். விசயன்—அருச்சுனன். வேதன்—பிரமன். உட்ணம்—உஷ்ணம்—கோபம். ராசயோகம்—யோகவகையுள் ஒன்று. ஆதிபரவஸ்து—காரணமான பரம்பொருள். அற்றவெள்ளி என்றது வெள்ளைத் திருமண்காப்பினை. ஆயிரம் பணத்து ஒன்று பற்றும் குருச்சிந்துரம்—ஆயிரம் பணம்கொண்டு ஒரு பண எடைபெறும் நிறமுடைய சிந்தூரத்தை. பணம் என்பது இங்கே பொற்காசு. நிறுத்தல் அளவில் பயன்படும் ஒரு சிறு நாணயம் என்னும் பொருளிற் பயின்றது. குரு—நிறம். சிந்தூரம்—செந்நிறமுடைய பொடி (ஸ்ரீசூர்ணம்). பாலம்—நெற்றி. வாதம் ஆம்-காற்றுப்போன்ற. மாரதம்—பெரிய தேர். சூதன்—தேரோட்டி. அங்கை— உள்ளங்கை. லீலைகொண்டு—விளையாடி. திரு உபய கொங்கைச் செப்பில்—திருமகளின் இரண்டு தனங்களாகிய செப்பினுள். மணித்திரள்—இரத்தினக் கூட்டம். புணரி—கடல்.

சுந்தரவல்லி பந்தடித்தல்

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

48. என்றிவளும் சூழ்ந்துவந்த ஏந்திழையா ருந்துதிப்ப
  ஏகி விண்ணோர்
தன்றிருக்கோ யிலிற்சபையில் சுந்தரனும் அனந்தசிங்கா
  தனத்தி ருந்தான்
குன்றிலுயர் தனதுமணி மாளிகையிற் கொடியிடையார்
  குழாம்சூ ழப்போய்த்
துன்றிய பட்டிழை பந்தைச் சுந்தரவல் லியுமாடத்
  தொடங்கி னாளே.

48. என்று—என்று அழகர் பெருமை பேசி. இவள் என்றது சுந்தரவல்லியை. விண் ஓர்—தேவர் உலகமும் வியக்கும் தகுதியுடைய. சுந்தரன் என்றது அழகரை. அநந்த சிங்காதனத்து — திருவனந்தாழ்வானாகிய சிங்கம் சுமந்த தவிசில். பட்டு இழை பந்து-பட்டினாற் செய்த பந்து.

*தரு*

*இராகம்—நாதநாமகிரியை.* *தாளம்—ரூபகம்.*

*பல்லவி*

49. பந்தடித்தனளே பஞ்சவர்ணப் பந்தடித்தனளே.

*அனுபல்லவி*

பந்தடித்தனள் சுந்தரவல்லி பானிலா நுழைபளிங்கு
மேடையில்—பந்த

*சரணங்கள்*

இருந்தும் நின்றும் நடந்தும் நீளஏகியும் வந்து
வலயமாய்ப்
பொருந்திடம் வலம் சுற்றியும் பல புதுமையா கிட எற்றியும்
மருந்தின் ஊறிசைப்பதங்கள் கூறி மலர்ச்
செங்காந்தள் கரங்கள் மாறிச்
சரிந்திடாத தனங்கள் மீறித் தச்சணு தத்திமிதத்
ததிங்கண தத்தோமெனப்—பந்த
குஞ்சங்களுடன் பின்னலாடக் குழையை
இடறிவிழிகள் ஆடக்
கஞ்சவதனம் குறுவேர்வாடக் கழுத்தின்
மகரகண்டியாடப்—பந்த
கதிர்விடும் இரு குழையாடக் கலைமதிநுதல் அணியாடத்
துதிபெறுகொடியிடையாடத் தொகுமரகதவளையாடப்—
பந்த
நாசியணியும் நகைமுத்தாட நறவரு சிறு முறுவ லாடப்
பேசும்அலகில் நிழல்கள் ஆடப்பேடைவண்டொரு
கோடியாடப்—பந்த
பெண்கள் பலர் கொண்டாடப் பிணைமுகைஇதழ்
வண்டாடக்
கண்டவர்மதி திண்டாடக் கால்கள்
பரதக்கலையினுடப்—பந்த
நாதநாமகிரியை ராகம் நவிலிப்பதத்தெந் நாளும் மோகம்
மோது ம்ருதங்க தாளம் ரூபகம் முழங்குமதில்
எல்லோரும் ஞாபகம்—பந்த

முழவுயரமு மதின்மேலே முதுதுடை யுயரமும் நூலே
தழுவிடை யுயரமுமாகத் தடமுலையுயரமுமாகப்—பந்த

*49. பஞ்சவர்ணப் பந்து — வெண்மை. கருமை. செம்மை. பொன்மை, பசுமை. என்னும் ஐந்துநிறமுடைய பந்து. பால் நிலா—வெள்ளிய நிலவு. பளிங்கு மேடையில்— பளிங்குக் கற்களால் மேடாக அமைக்கப்பட்ட இடத்தில். வலயம்—வட்டம். மருந்தின் ஊறு இசை பதங்கள்— அமுதம்போல் சுவைமிகும் இசைப்பாடல்கள். கரம்— கை. காந்தள் மலர் கைக்கு உவமை. தச்சணு தத்திமிதத் ததிங்கண தத்தோம் என்பது ஒலிக்குறிப்பு. குழை— காது. கஞ்சவதனம்—தாமரை மலர் போலும் முகம். குழை—குண்டலம். நுதல்—நெற்றி. நுதல் அணி— நெற்றிச் சுட்டி. தொகுத்தல்—மிகுதல். நகைமுத்து— ஒளியுள்ள முத்து. நற வரு சிறு முறுவல் ஆட—தேன் போலும் இனிய சுவையினையுடைய நீர் ஊறும் சிறிய பற்கள் (புன்னகை) அசைய. அலகு இல்—கணக்கற்ற. ஒருகோடி பேடை வண்டு ஆட என இயைக்க. பேடை வண்டு—பெண் வண்டு. பிணைமுகை—மாலைகளில் உள்ள அரும்பு. பதம்—இசைப்பாட்டு. முது துடை—பெருந்துடை. நூலே தழுவு இடை—நூலை ஒத்த இடை.*

*மாலைவரவு*

*தாழிசை*

50. தந்தனங்கள் இரண்டினுக்கிணை தானுரைக்கில் அதுக்கதே
தகுதியாம்தனம் ஒன்றினுக்கவை தன்னிலொன்று
சமானமாம்
கந்துகம்சரி யாகுமாவெனும் காரமோடுசெங் காந்தளங்
கையினுலது நையவேபல காலடித்து முடித்தபின்
அந்தமாய்விளை யாடுமாதர் அகங்கள்தேடி யகன்றனர்
அமுதுசெய்துடன் ம்ருகமதங்கமழ் அடையருந்தி
அயர்ந்தனர்

சுந்தரம்தரு வல்லியார்சிறு துயிலொழிந்துநல் வீணையைச்
சுதிபிடிக்கவும் மாலைவந்ததை விதிவசப்படி
சொல்வளே.

*50. தம் தனங்கள்....சமானமாம் கந்துகம் சரியாகுமா? எனும் காரமோடு செங்காந்தள் அம்கையினால் அது னையவே பலகால் அடித்து—தத்தம் தனங்களுக்கு தங்கள் தங்கள் தனங்களே உவமை; தங்கள் தனங்களுள் ஒன்றுக்கு மற்றொன்றே ஒப்பாகும்; இவையன்றி அவற்றுக்குப் பந்து உவமம் ஆகாது என்று சினத்துடன் செங்காந்தள் மலர் போலும் கைகளால் அப்பந்து நையும்படி பலகாலும் அடித்து. அந்தம்—அழகு. அகங்கள்—(தங்கள் தங்கள்) வீடுகள். ம்ருகமதம்—கஸ்தூரி. அடை—வெற்றிலை. அயர் தல் இங்கே உறக்க நிலையுணரநின்றது. சுந்தரம் தரு வல்லி—சுந்தரவல்லி. சுதி பிடித்தல்—சுருதியிடம் அறிந்து விரல் பிடித்தல், விதி வசப்படி மாலை வந்ததை என மாற்றுக. விதி—ஊழ்.*

*தரு*

*பல்லவி*

51. மாலையின் கொடுமையை இப்பவன்றோ அறிந்தேன்
மங்கையர் சிகாமணியே!

*அனுபல்லவி*

சோலைமலையில்ஒரு நீலமலைபோனின்ற
சுந்தரேசுவரனிடம் சிந்தைசென்றதினாலே—
மாலையின்

*சரணங்கள்*

மேல்கடல் வாயிரவி விண்டு வடிவ மாகி
விளங்கிடக் கண்விட்டாடும் பசுந்தங்கம்
போலும் திகழ்ந்து செம்பொன் பூசும் கம்மியர் நாணப்
புனைகதிர்க் கரங்களைப் புவனமுழுதும் நீட்டிச்

சோலைகளும் வரையும் பிலமும் புளினங்களும்
சூழும் அருவிகளும் வாழும் குருவிகளும்
சாலும் திருநகரும் கோபுரங்களும் சோமச்
சந்தவிமானம் போலும் விந்தைபெறப்புரிந்த—
மாலையின்
வசந்தன் வரவுசொல்லி மாங்குயில் காளம் ஊத
மருத வனக்கிளிகள் மதனவேதங்கள் ஓத
இசைந்த வகுளவனத் திருந்து சாரிகை பாட
ஏடவிழ் பனையன்றிற் குரல்இரு செவியோடப்
பசும்பொன் நிறமடவார் பரிந்து மலர்கள் சூடப்
பாவையர் இருக்கையைக் காளையர் அகம் தேடத்
தசைந்தொளிர் மகரகே தனன்வந்த னனென்றளி
தாதணி மல்லிகைவெண் சங்கொலி செயவந்த—
மாலையின்
"மாலையோ அல்லை மணந்தார் உயிர் உண்ணும்
வேலை" என்றபடியே விழுங்கி எண் திசைகளைக்
காலைப் பொதிகையினின் றிழுத்ததன்றி வடவைக்
கனலைச் சுடுவிரகக் கனலைக் கிளப்பிக் கஞ்ச
நூலைப் பொருவிடையர் லீலைக்கிசைந்த காம
நோய்செய் திளங் குருத்தைப் பாய்செய்ததுவுமன்றிக்
கோலைப் பிடித்துவிடைக் குலங்களை மேய்க்குமணிக்
கோவலர் இசைக் கும்வேய்ங் குழலிசை
யையும்தந்த—மாலையின்

*51. இப்ப — இப்பொழுது. மேல் கடல் வாய்— மேற்குக் கடலில். இரவி—சூரியன். விண்டு—திருமால். கம்மியர்—தட்டார். கதிர்க்கரம்—கிரணங்களாகிய கை. புவனம்—உலகம். வரை—மலை. பிலம்—குகை. புளினம்— மணற்குன்று. அழகர் எழுந்தருளியுள்ள கருவறையின் மேற்பகுதிக்குச் சோமச்சந்தவிமானம் என்று பெயர். விந்தை—ஆச்சரியம். வசந்தன் —மன்மதன். காளம்—எக் காளம் என்னும் ஊதுகுழல். மருதவனம்—மருதமரங்கள்*

நிறைந்த காடு. வகுளம்—மகிழ். சாரிகை—கிளி. ஏடு அவிழ்—இதழ் விரிந்த. அன்றில்—ஒரு பறவை. பரிந்து—விரும்பி. தசைந்தொளிர்—சதைப் பற்றுடையதாய் விளங்குகின்ற. மகரகேதனன்—மீனக்கொடியுடைய மன்மதன். அளி—வண்டு. தாது—மகரந்தம். "மாலையோ அல்லை மணந்தார் உயிருண்ணும் வேலை" (1221) என்பது திருக்குறள். மணந்தார்—(அந்நாட்) காதலரை மணந்த மகளிருடைய. வேலை—பொழுது. பொதிகை—பொதியமலை. கால் என்றது தென்றலை. வடவைக் கனல்—ஊழித் தீ. விரகக் கனல்—காமத்தீ. கஞ்சநூலைப் பொருவு இடையர்—தாமரைத் தண்டிலிருந்து கொள்ளும் நூல்போன்ற மெல்லிய இடையினையுடைய மகளிர். இளங்குருத்து—வாழையின் இளங்குருத்து. காமநோய் உற்ற மகளிரை வெம்மை தீருமாறு வாழைக் குருத்தில் கிடத்துவராதலின் 'இளங்குருத்தைப் பாய் செய்ததுவுமன்றி' என்றார். விடைக் குலம்—காளைக்கூட்டம். கோவலர்—இடையர். மாலைக் காலத்தில் இருள்பரவுதலும், தென்றல் தவழ்தலும், கோவலர் குழலிசை எழுதலும் இவற்றால் காதலரைப் பிரிந்த மகளிர் விரகதாபம் மிக்குத் தளர்தலும் இயல்பு. எண்திசைகளை விழுங்கி, பொதிகையில் நின்று காலை இழுத்து, விரகக்கனலைக் கிளப்பி, நோய் செய்து பாய் செய்து, குழலிசையையும் தந்த மாலை என்க.

சுந்தரவல்லி கங்குலை வெறுத்தல்

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்

52. சுந்தரவல் லியும் மயலை மாலை வந்து
தூண்டமனம் துணிந்துகலித் துறைதூய் கொச்ச
கந்தரவல் லியம்புரிந்த அழகர்க் காகக்
கட்டுரைத்தம் மாலையைமுன் கழித்த காலைத்
தந்திரவல் லிணைமுலையார் வெருவி நாதர்
தடந்தோளைத் தனம்புணரத் தழுவச் செய்யும்
அந்தரவல் லிருளடைந்த ததனை நிந்தை
அறைகின்றாள் அகப்பொருமல் நிறைகின்றாளே.

52. மாலை வந்து மயலைத்தூண்ட என இயைக்க. சுந்தரவல்லியும் மனந்துணிந்து. கலித்துறை. கொச்சகம். தரவு அல்லியம் புரிந்த அழகர்க்காகக் கட்டுரைத்து என்க. கலித்துறை—கலிப்பா இனத்துள் ஒன்று. தூய் கொச்சகம்—தூய கொச்சகம். கொச்சகம்—கலிப்பா வகையுள் ஒன்று. தரவு—கலிப்பாவின் முதல் உறுப்பு. அல்லியம் புரிந்த அழகர்க்கு—கண்ணனாய் அவதரித்தபோது அல்லியம் என்ற கூத்தை ஆடிய அழகர்க்கு. கட்டுரைத்தது—தெளிவாகச் சொல்லி. தந்திர வல் இணை முலையார்—வேலைப்பாடமைந்த சூதாடு கருவிபோலும் தனங்களையுடைய மகளிர். அந்தரம்—விபரீதம். அகப்பொருமல்—மனத்துன்பம்.

திபதை

அடாணு ராகம். ஆதி தாளம்.

53. காமன் விசயக் கடக்களிறாகிய கங்குலே—பகற்
காலமெல்லாம் உனைக் காத்ததும் என்குழன் மங்குலே
காமனைக் காமனை ஏமனை வென்ற கருப்பிலே—தினை
காணுமெனத் தெரித்தாய்கொல் பெருமைப் பொருப்பிலே
பானுஎனும்திறற் பாகனைக் காய்ந்திடு வந்தியே—புகழ்ப்
பான்மைய தாய்முகம் ஏந்தியுலாவிய தந்தியே
வானும் திசையொடிவ் வையமடங்க விழுங்கியே—திரு
மாலடியாளையும் வாட்டலென் புந்தி மழுங்கியே
தேசுபெறும் பந்தம் கண்டொரு நாளும் திரும்பிடாமல்—நையச்
செய்யுகின்றாய் எனைச் செய்யகண் துஞ்ச விரும்பிடாமல்
காசுகொள் ஆசைக் கணிகையர் கள்ளக் கருத்தேபோல்—இரு
ளைகொடும் அள்ளித்திரட்ட இருட்டுக்கறுத்ததே—மேல்
பாழிவிடப் பகுவாய்க்கரும் பாந்தள்வாய்ப் பட்டசீராய்—
பாதியுடல் செய்து மீதும்வருத்தப் படுத்த வாராய் [எனைப்
ஊழி அனைத்தும் இம் முன்னிருளாய் வந்துடற்றலாமோ?—என்
ஒருத்தி நிமித்தம் உலகும் உயிரும் ஒருங்குறோமோ?

[மூந்தின பதங்களுக்கு இராகங்களும் தாளங்களும் சரணாந்தத்தில் கூறினோம். இங்ஙனம் கூறாது விட்டனம். இது ஒவ்வொரு சரணம் விரிவாவதால் சுருக்கியது; ரீதிபங்கமாக மாட்டாது]

53. காமன்—மன்மதன். விசயம்—வெற்றி. கடக்களிறு — மதயானை. கங்குல் — இரவு. இராக்காலத்தை மன்மதனுடைய யானையாகக் கூறுவது கவிமரபு. குழல் மங்குல்—குழலாகிய மேகம். இரவின் இருள், பகற்போதில் தன் கூந்தலில் மறைந்திருந்தது என்னும் கருத்தால், 'பகற்காலமெல்லாம் உனைக்காத்ததும் என் குழல் மங்குலே' என்றாள். காமனை (பின்னது)—கற்பகச் சோலையினையுடைய அரசனாகிய இந்திரனை. ஏமனை — இயமனை. மன்மதனும் இந்திரனும் இயமனும் கருநிறமுடையவர்கள். இரவின் இருள் அவரினும் மிக்க கருமையுடையது என்பது படக் 'காமனைக் காமனை ஏமனை வென்ற கருட்பிலே தினைகாணும்' என்றாள். தினை—மிகச் சிறிய அளவு. தெரித்தல்—விளக்குதல். கொல்—அசைநிலை. பெருமைப் பொருப்பு—பெருமை வாய்ந்த மலை என்றது அத்தமனகிரியை. பானு — சூரியன். வந்தி—சண்டை. பானுவெனும்....புகழ்ப்பான்மையதாய்—சூரியன் என்று சொல்லப்படும் ஆற்றல் அமைந்த பாகனைக் கொல்லும் சண்டையையே புகழ்தற்குரிய தன்மையாய். முகம் ஏந்தி—தலையெடுத்து. தந்தி—யானை. புந்தி—புத்தி. தேசு பெறும் பந்தம் கண்டு ஒரு நாளும் திரும்பிடாமல்—எனக்கும் அழகருக்கும் உள்ள பெருமை வாய்ந்த உறவை நோக்கி ஒருபோதும் மாறாமல். துஞ்ச—உறங்க. கணிகையர் — வேசிகள். கருத்தேபோல் — மனமே போல். "அள்ளிக் கொளலாய் அடையத்திரண்டொன்றாய்க் கொள்ளிக்கும் விள்ளாத கூரிருள்...............பொது மகளிர் தங்கள் இதயமே போன்றதிரா" (நளவெண்பா) என்பதும் இங்கு நோக்கத்தகும். பாழிவிடப் பகுவாய்க் கரும்பாந்தள் வாய்ப்பட்ட சிராய்—வலிய விடத்தினையுடைய பிளந்த வாயினை

யுடைய கரியபாம்பினிடத்து அகப்பட்ட தன்மை போலாய். பாழி-வலிமை. பகுவாய்—பிளந்த வாய். பாந்தள்-பாம்பு. பாதியுடல் செய்து-பாதியுடம்புடையளாக்கி—மெலிவித்து. மீதும் — மேலும். வாராய் — வருகிறாய். உடற்றுதல் — வருத்துதல்.

*நிலாத்தோற்றம்*

*அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

**54.** கீட்டிசை கடலேழ் தீவும் கிளர்ந்திடத் தகித்துக் கிட்டும்
சூட்டிசைச் சிப்பி முத்தின் சுண்ணத்தைச் சுருதிநாதன்
காட்டுபூ முதற்பிரம் மாண்ட கடாக மாளிகைக்கும்
கையால்
தீட்டுசிற்பனைப் போல் வந்த திங்களைச் செப்பு வாளே.

*54. கீட்டிசை—கீழ்த்திசை—கிழக்குத்திசையில். கடலும் என உம்மை விரிக்க. ஏழ்கடலும் ஏழ்தீவும் கிளர்ந்திட என இயைக்க. கிளர்தல்—விளங்குதல். தகித்து-எரித்து. சூட்டு இசைச் சிப்பிமுத்தின் சுண்ணத்தை — சுடப்பட்ட சிறந்த முத்துச் சிப்பிச் சுண்ணமை. சுருதிநாதன் —வேத முதல்வன்—இறைவன். காட்டு—படைத்த. பூமுதல்—பூமி முதல். பிரம்மாண்டகடாக மாளிகைக்கும்—பெரிய அண்ட கோளத்தின் மேல் முகட்டினையுடைய மாளிகைக்கும். தீட்டு—பூசுகின்ற. சிற்பன்—கம்மியன். திங்கள், தகித்து சிப்பிமுத்தின் சுண்ணத்தை. அண்டகடாக மாளிகைக்கும் கையால் தீட்டு சிற்பனைப்போல். கீட்டிசை வந்ததைச் (சுந்தரவல்லி) செப்புவாள் என முடிக்க.*

*சுந்தரவல்லி திங்களை வெறுத்தல்*

*தரு*

*இராகம்—சௌராஷ்டரம்.* *ஆதி தாளம்.*

*பல்லவி*

**55.** அம்புலீ! என் கும்பமுலையில் வெம்பும் அழலைச் சொரிவதென்

*அனுபல்லவி*

உம்பரின் மோட்டுத் தும்பிவெண் கோட்டுக்
கிம்புரிபோலும் உதயமாய்

**உன்னியீரைந்தும் துன்னியே—மணி**
**ஒளிமானமும் ளெிய ஏறிவந்து—அம்புலீ!**

*சரணம்*

**பரம சுவாமி மனத்தினும்திருப் பாற்கடலினும் பிறந்தநீ—சுக**
**கரம தான அமுதகிரணக் கரங்களாம் சுடுசரங்கள் துரந்து—அம்புலீ!**
**புரங்கள் மூன்றும் எரித்தவன்பெரும் புவனமூன்றும் எரித்தல் கண்டுனேக்**
**கரங்கள்ஆரத் தொழுததாற்றலைக் கட்டப்புரிந்தும் துட்டத்தனம்செய்—அம்புலீ!**
**ஆழியுடன்வெண் ணுரையும் அலேயும் அனந்தனும் துயில் முகுந்தனும்—என**
**வாழிவானும் உடுக்களும் கதிர் வளேந்த வடிவும் மறுவும் மருவும்—அம்புலீ!**
**தேவர் யாவரும் பருகப் பருகத் திருந்திடும்அரு மருந்து சுரந்து**
**மூவுலகேத்தும் சுந்தரராஜ மூர்த்திவிமான மூலம் போல் வந்த—அம்புலீ!**

*55. கும்பம்—கலயம்; யானை மத்தகமும் ஆம். இரண்டும் தனங்களுக்கு உவமம் ஆவன. காம நோய் கொண்டார்க்கு நிலவு வெப்பம் விளைத்தலின் 'வெம்பும் அழலைச் சொரிவதென்' என்றாள். உம்பர்—தேவருலகம். மோடு—பெருமை. தும்பி—யானை. உம்பரின் மோட்டுத் தும்பியின்—தேவர் உலகத்திலுள்ள பெருமை வாய்ந்த (அயிராவதம் என்னும்) யானையின். கோடு—கொம்பு. கிம்புரி—யானைத்தந்தத்திற் செறிக்கப்படும் பூண். சந்திரனுக்குக் கிம்புரியை உவமை கூறுவது மரபு. ஈரைந்தும் துன்னி—பத்துத் திசைகளிலும் செறிந்து. மானம்—விமானம். சந்திரனுக்கு ஊர்தியாக விமானத்தைக் கூறுவது கவி மரபு. பரமசுவாமி என்பது அழகர் திருநாமத் தொன்று. சந்திரன்*

திருமாலின் இதயத்திலும் திருப்பாற்கடலினும் பிறந்தான் என்பது நூல் வழக்கு. சுககரமான—இன்பத்தைச் செய்வதான. அமுதகிரணக்கரம் — அமுதகிரணங்களாகிய கை. சரம்—அம்பு. துரந்து—எய்து. புரங்கள் மூன்றும் எரித்தவன்—சிவபிரான். புவனம் மூன்றும்—உலகம் மூன்றையும். கரங்கள்-கைகள். சிவபிரான் நீ உலகம் மூன்றையும் எரிக்கும் கொடுமைகண்டும், நீ கைகளால் பலகால் தொழுதமை நினைந்தும் உன் கொடுமை நீங்கும்படி கங்கை தங்கிய தம் தலை மீது விரும்பி உன்னைத் தரித்துக்கொள்ளவும், நீ கொடுமை நீங்காது துட்டத்தனம் செய்கின்றனை என்றவாறு. முகுந்தன் என்றது திருமாலை. என-உவம உருபு. வாழி-அசை நிலை. உடுக்கள்—விண்மீன்கள். மறு—திருமால் மார்பிற் சிரீவத்சம். முகுந்தனும் என வடிவும் மறுவும் மருவும் அம்புலீ என்க. மதிக்கு மறு களங்கம். ஏனைய வெளிப்படை. பருகப் பருக—உண்ண உண்ண. மருந்து—அமுதம். சுரந்து-மிகக்கொடுத்தமையால். மூவுலகு ஏத்தும்—மூன்றுலகத்தாரும் துதிக்கும். சுந்தரராஜ மூர்த்தி விமான மூலம்—அழகர் விமானத்தின் அடி.

*கட்டளைக் கலித்துறை*

**56.** பன்னாட் குறைமதி யானதினுல் குரு பத்தினியை
முன்னாள் தொடர்ந்து கறையாய் மகத்துவம் முனையழிந்தாய்
இந்நாட் கலைஎண் ணிரண்டுள நீயும்எண் ணெண்கலையேன்
தன்நாட்டத் தெய்தத் தகுமோ வென்றுள் தென்றல்
தாவியதே.

56. பல் நாள் குறைமதி—பலநாளும் தன் நிலையில் நின்று தேய்ந்து குறையும் மதி; குறைமதி என்பது அறிவு குறைந்தவன் என்ற பொருளும் தோன்ற நின்றது. குரு பத்தினி—வியாழன் மனைவியான தாரை. கறையாய்—குற்றமுடையாய். மகத்துவம்—பெருமை. முனை—முன். எண்ணிரண்டு கலை—பதினாறு கலை. எண்ணெண் கலையேன்—அறுபத்து நாலு கலைகளையும் அறிந்த என்னுடைய.

நாட்டத்செய்கு தகுமோ?—கண்ணுக்கு எதிரே வரத் தகுமோ?. தகாது என்றவாறு. தாவுதல்—பரந்து வருதல்.

தென்றலை வெறுத்தல்

தரு

இராகம்—தேவகாந்தாரி. தாளம்—ஆதி.

பல்லவி

57. தென்றல் தாவுதே வென்றியாளிபோல்

அநுபல்லவி

மன்றல் சீதளம் மந்தவேகமும்
குன்றிடாமலே குன்றிலேவரும் —தென்றல்

சரணம்

அருவிதோய்ந்து தண் மருவுநுண்டுளி
அதிகம்வீசியே பொதிய மால்வரைத் —தென்றல்
வனசநாண்மலர் வனமெனும் செழுஞ்
சுனையின் ஊறுதேன் துளிகள் தூவியே —தென்றல்
வகுளநீபம்நீள் மலைய சந்தம் வேள்
பகுதியானபூம் பரிமளங்கள் சேர் —தென்றல்
நாளுமால்கொள்புன் னாகமாமலர்த்
தூளியானபொன் சுண்ணம் ஊதியே —தென்றல்
பன்னரும் புகழ்ப் பதுமினிக்குழாத்
தன்னமென்னடை யதினுலாவிடும் —தென்றல்

57. வென்றி—வெற்றி. ஆளி—சிங்கம். மன்றல்—மணம். சீதளம்—குளிர்ச்சி. மந்தவேகம்—மெல்லச் செல்லும் செலவு(நடை). குன்று என்றது பொதிய மலையை. வனசம்—தாமரை. வகுளம்—மகிழ். நீபம்—வெண்கடம்பு. மலய சந்தம்—பொதிய மலையிலுள்ள சந்தனம். வகுளம் நீபம் சந்தம் என்பவை மரவகைகள். வேள் பகுதியான—மன்மதனுக்கு உரியவான. மால்கொள்—விரும்பத்தக்க. புன்னாகம்—ஒருவகை மரம். பொன் சுண்ணம்—பொற்பொடி. பதுமினி—நால்வகை மகளிருள் சிறந்த இலக்கணம் அமைந்தவள். அன்ன மெல் நடையின் என்க.

*மன்மதனை வெறுத்தல்*

*அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்*

58. குருந்தேறி விளையாடும் கோவிந்தன் விடுமுயிர்ப்பின்
குணமாய்க் காவின்
இருந்தேவந் திளந்தென்றல் இருதனத்தும் பாய்ந்துயிர்
இதயம் கொள்ள [வாழ்
வருந்தேலென் றன்னையைப்பன் மலர்தூவி வணங்கவந்த
மைந்தன் போலப்
பெருந்தேர் அங்கசன்மலர்அம் பெயப் பயந்த
சுந்தரமின் பேசுவாளே.

*58. குருந்து ஒருவகை மரம். உயிர்ப்பு—மூச்சு. அங்கசன்—மன்மதன்.*

*தரு*

*இராகம்—கமாஸ்.* *தாளம்—ரூபகம்.*

*பல்லவி*

59. மதனு! என் மார்பில் ஏன் சரோஜவாளி ஏவுகிருய்?—சுத

*அநுபல்லவி*

பொதிய வரையில் பிறந்த தேரில்
பூட்டியே கிளி யோட்டியே—மதனு

*சரணம்*

கொற்றக்குடை மதியாய் மகரக்கொடிகள் விளங்கிடவே
சுற்றிக் கடலெனும் தூரியம் ஆர்த்திடத் தோகையர்
தானைகள் சூழவந்தே—மதனு
பூவை வில்லாக்கி மாந்தளிரைப் பூட்டி நாணுக்கித்
தேவர் யாவரும் பதறக் கதறச் செலுத்திய மதுமலர்க்
குலக்கணை—மதனு
ஏறுங்கிளிப் பரியே பசுந்தளிர் என்ன இருப்பதினுல்
நீறுதரித்தவன் சீறிஎரித்தது நிச்சயமன்றென்று
முச்செகமும் சொல—மதனு

வில்லுடன் வாளியெல்லாம் தொடக்கன்றும் மென்மலரா
யிருந்தும்
வல்லமை யாயிவ் வுலகை யாளும் மகிமையில்பர
வுத்துவுமான—மதனு
பாலனம் சர்க்கரை தேன்திரட்டிய பாலும் குமட்டிடவே
மேலும் வெதும்பிப் பசலைதவழ்ந்து கண்மாரி
விழுந்திடவும்—மதனு

*59. சரோஜவாளி — தாமரை மலராகிய அம்பு. சுத—மகனே. சுந்தரவல்லி தன்னை அழகருக்கு நாயகியாக எண்ணிக்கொண்டமையால் மன்மதனை மகனே என்கிறாள். திருமாலின் மகன் மன்மதன். தென்றலை மன்மதனுக்குத் தேர் என்பதும் கிளிகளை மன்மதனுக்குக் குதிரை என்பதும் கவிமரபு. பொதிய வரையில் பிறந்த தேர் என்றது தென்றலை. மதி கொற்றக் குடையாய் என மாறுக. தூரியம்—முரசு. தோகையர் தானைகள்—மகளிராகிய படைகள். முச்சகமும்—மூன்று லோகமும். மகிமை—பெருமை. பரவத்து—பரம்பொருள்.*

*சுந்தரவல்லியிடம் தோழி வினவுதல்*

*அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

60. இந்தவிதம் திரிபுவன சுந்தரவல்லியும் பகரும்
இன்சொல் யாவும்
அந்தமிகும் உடன்பிரியா ஆருயிர்ப் பாங்கியும்
விரகமாமென் றோர்ந்து
மந்தநகை செந்தமிழ்சொல் இந்துநுதல் பந்துமுலை
மடந்தாய் என்னே
வந்தமயல் இந்தமயல் தந்ததெவன் எந்தன்முனம்
வழுத்தென் றாளே.

*60. அந்தம் — அழகு. மந்தநகை — புன்சிரிப்பு. இந்து — சந்திரன். மயல் — மயக்கம். தந்தது எவன் — எவனால் தரப்பட்டது. வழுத்து—சொல்லு.*

சுந்தரவல்லி தோழியிடம் கூறுதல்

தரு

கன்னட பியாகு இராகம். ஆதி தாளம்.

பல்லவி

61. சேதிசொல்வேன் கேள்சகியே சேதிசொல்வேன்கேள்

அனுபல்லவி

சோதி மதிதவழும் சோலைமலை வளரும்
சுந்தர ராஜ முகுந்தன் அருள்புரிந்த—சேதி

சரணங்கள்

உபநிடதங்கள் அவயவங்கள் மறை
யுருவம் புரிந்த பெருந்தவங்கள் என்றும்
செபஞ்செயும் காயத் திரிப்பதங்கள்—விழித்
திரயமாம் பெரிய திருவடிமேல் வந்தவர்—சேதி
மொழிபல உயிர்களின்தேகி செகன்
மோகன ரூபமதாகித்—திரு
விழிங்கர் நகர்வலமேகி—எனை
வேள்பக ழிகளுண விருந்துசெய்துசென்ற—சேதி
எழிலுக் கிளைத்தமரர் யாரும்—முறி
எழுதிக் கொடுக்குமவர் சீரும்—கமழ்
செழுமைத் துளவமலர்த் தாரும்—கொளும்
தேவசிகாமணியை மேவமனம் துணிந்த—சேதி

*61. சகி—தோழி. உபநிடதம்—வேதத்தின் பகுதி. அவயவம்—உடலுறுப்பு. பெருந்தவங்கள் புரிந்த மறை உருவம். காயத்திரி—ஒரு வேத மந்திரம். விழித்ரயம்—கண் மூன்று = முக்கண். பெரிய திருவடி—கருடன். உபநிடதங்களே உறுப்புக்களாகவும் வேதமே உடலாகவும் காயத்திரிப்பதங்களே மூன்று கண்களாகவும் அமையப் பெற்ற கருடன் மீது பவனி வந்த அழகருடைய சேதி சொல் வேன் என்றவாறு. மொழி பல உயிர்களின் தேகி—சொல்லப் படும் பலவகை உயிர்களும் உடலாக, அவற்றுள் உறையும் உயிராக விளங்குபவராகிய சோலைமலை இறைவர். செகன் மோகன ரூபமதாகி—உலகம் மயங்கும் பேரழகுடையராய்.*

*விழிநிகர்நகர் — கண்போலும் நகர் = சீபதி. வலமேகி — உலாப்போந்து. பகழி — அம்பு. எனை வேள் பகழிகள் உணவிருந்து செய்து — என்னை மன்மதன் பாணங்கள் உண்ணும்படி விருந்து செய்து; தம் வடிவழகால் என்னை மயக்கி என்றவாறு. அமரர் யாரும் எழிலுக்குத் தோற்று முறி எழுதிக்கொடுக்கும் அவர் சீரும் என இயைக்க. எழிலுக்கு இளைத்து—அழகுக்குத் தோற்று. முறி — அடிமை யோலை. அவர் சீரும், அவ்வழகர் பெருமையும். தேவ சிகாமணி என்பது அழகர் திருநாமத்துள் ஒன்று.*

*பாங்கி பழித்தல்*

*அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்*

**62. பாதத்தைத் தேடியுமால் காணாமல்**
**அவமானப் பட்டான் என்று**
**வேதத்தைப் போலுலகில் பெண்டுகளும்**
**பேதையரும் விளம்பு கின்ற**
**நீதத்தை உணராமல் அழகனுக்காய்**
**ஆசைகொண்டு நின்ற உந்தன்**
**போதத்தைப் புகன்றதெனக் காச்சரியம்**
**எனப்பாங்கி புகன்றிட்டாளே.**

*62. பாதத்தைத் தேடியும் காணாமல் மால் அவமானப் பட்டான் என இயைக்க. நீதம்—அறிவுரை. போதம்— அறிவு.*

*சுந்தரவல்லி திருமால் பெருமை செப்புதல்*

*அகவல்*

*63. இந்தவா றிணங்கி இசைத்தசொற் கேதார்த்தம்*
*சுந்தர வல்லி சொல்லத் தொடங்கினாள்.*
*வேதநா லுடனே விளங்குப நிட(த)ங்கள்*
*பாத மாய் உரைமுப் பத்திரண் டுகளும்*
*திகழ்வுறும் பாஞ்சராத் திரமகோ பநிடமும்*

மகிமையாய் விளங்கு மனுநீதி நூலும்
இயல் மிருதிகளுடன் இதிகாசம் இரண்டும்
புயல்வண்ணர் சத்துவ புராணங்கள் முதலாம்
வைதிக நூல்கள் வழங்குதற்கு எதிராய்ப்
பொய்மொழி யானவோர் புன்மொழி புகன்றனை;
ஆதி வராக அவதார மாகி
மேதினி முதல்ஒரு வெண்கோட் டெடுத்தனன்.
என்றுமுன் னூல்பல இயம்பிடும் உண்மையைப்
பொன்றிடப் பேசுவோர் புராணத்தின் பண்புகேள்!
அறுபத்து மூவர் அடைந்தமை சொலும்கதை
பொறிமெய்ச்சும் பெரிய புராணமா னதுபோல்
நிலைபெறும் உலக நீதி புராணமொன்
றுலகினில் பள்ளியில் ஓதுமத் தன்மைபோல்
கட்டப்பொம் மன்கதை கலியுக புராணமாய்த்
துட்டர்கள் விரித்துச் சொன்னது போலவும்
புராணப் பேரிட்டுப் புகன்றன மெனிவிதைத்
தராதலம் கொளுமெனத் தமிழர் சாற்றின
அருணா சலபுரா ணச்சொலை நம்பியா
சுருணா று கூந்தலாய்! சொற்றனை? அதுவோர்
தலபுராண முமாய்த் தாமதக் கற்பனைச்
சிவபுரா ணத்தினும் சேராத தல்லவோ?
விண்டுவின் தலபுரா ணங்கள்யான் வெளிசெயில்
சண்டமா ருதமுன் சருகாய் விடுவையே!
நுவல்சிவ தலமிகு நூற்றெழு பத்துநா
லவனியில் இருப்பதை யாயிரத் தெட்டென்றும்
சைவர்தாம் கலியுக தருமத்தைப் பொருந்திப்
பொய்மொழி யநேகமும் புலம்பிய தல்லவோ?
அரிதல மாம்திரு வரங்கமே முதலாய்
மருவுநூற் றெட்டையும் மறைமுதற் பலநூல்
புராணம் ஈரொன்பதும் புகல்தமிழ் மறையும்
சுராசுரர் துதித்திடச் சொன்னது போலவே
பிந்தியிவ் வுலகத்திற் பிறந்த சிவாலயப்

பந்திக்கு மேன்மையைப் பகரும்அக் கவிஞர்கள்
வேதத்தை உலகை விபுதரைக் காக்கவும்
தீதுற்ற அவுணரைத் தீயரைப் போக்கவும்
முந்திய யுகங்களில் மொழியும்மால் இச்சையால்
ஐந்துடன் ஐந்தாம் அவதாரம் முதலாய்
இருப்பதில் ஒன்றை இசைந்திடக் கூட்டி
விருப்பமாய்த் தொழுதலான் மிகுதவம் ஈதென்றும்
சொல்லினர் மோகனத் துன்மதி நாவலர்;
வல்லிதின்; என்று மதித்திட ஒன்றுகேள்!
பாடலேறும்திருப் பதிகள் நூற்றெட்டுக்கும்
ஈடு சிவாலயம் இரட்டித்த தன்மைபோல்.
நவில் திருவாய்மொழி நாலா யிரத்துக்கும்
இவர்கள் தேவாரம தெண்ணா யிரமென்றும்
வாதவூர் மாணிக்க வாசக நம்பியார்
பேதமாய் வாசகம் பின்னுக்குப் பின்னதாய்த்
துறைமுறை அதிகமாய்ச் சொல்வது போலவே
முறைமுறை நிந்தையே மொழிந்தனர் மாயனை.
ஆனந்த தாண்டவம் ஆடிய சங்கரன்
தானந்த இடக்கால் சபைதனில் தூக்கிய
தன்மையை நினைத்தொரு தந்திர வுத்திபோல்
புன்மையின் மாலைப் புகன்ற......................
*.........................................................................
கவனமாய் வேண்டமுக் கண்ணனும் ஓர்கால்
காட்டியும் ஒளித்திடக் கண்ணன் ஓர்பாதமும்
நீட்டிநீ காட்டென்று நெஞ்சில் நினைத்தே
பரமுனைக் கென்று பாவாட மாகி
வரங் கிடந்தான் திரு மாயவன் என்றும்
சொன்னது கோவையில் சூதோ யதார்த்தமோ?
நின்னது புத்திக்கும் நிச்சயம் தோன்றவாம்
திருமால் கமலத் திருவடி இரண்டையும்
சிவனார் நதிவாழ் செஞ்சடை முடியையும்

*59ஆம் அடி மூலப் பிரதியில் விடுபட்டது.

தரிசனம் செய்யச் சிவாகமம் பாத்மம்
தருமசாத் திரங்களும் சாற்றுது பாராய்!
கண்ணுவ இருடிக்குக் காட்சிமுன் கொடுத்து
நண்ணிய கோவிந்த ராசர்க்கு மந்திரம்
சோதிடம் சிற்பநூல் சுருதிசாத் திரங்களின்
நீதியால் ஆதியில் நிருமித்த முனிவர்கள்.
பிரமத் தானத்தெம் பிரான் திரு மந்திரம்
சுரர்மொய்த்த வாறுதித் தூபியும் துலங்கச்
செய்ததில் ஆதி சேடன்மேற் சயனமும்
பொய்தவிர் மாலைப் பூருவ முகமாய்த்
தென்றிசை முடியும் வடதிசை அடியுமாய்
மன்றுளே வளர்த்தி மணிமண்டபத்துக்
கீசான மூலை யிராகிச் சவுக்கையில்
கூசாமல் சிவனையோர் கூத்தாடி யாக்கினர்;
தென்றில்லைச் சித்திர கூடத் திருப்பதிக்
கென்றும் வெளியாயிடு—அம் பலத்தில்
நிருத்திய சிவனைமால் நெஞ்சில் நினைத்தால்,
கருத்துடன் முகத்தெதிர் கால்நீட்டு வானோ?
வானைத் தாவும் திருவரங்கனார் அடிக்கீழ்
ஆனைக்கா ஈசன் அமர்ந்தது போலவே
மாயவன் திருமுக மண்டலம் நோக்கியே
நாயகன் மூன்று நயனமும் களித்தும்
கழலணி மாலையும் கங்கையும் கொடுத்த
மழைவண்ணர் மகிமையை மனங்கனிந் துணர்ந்தும்
ஆனந்தமாய்ச் சிவன் ஆடிய தல்லவோ?
ஞானந்தான் ஈசற்கு நண்ணிய வாறுகேள்!
கைக்கனல் ஏந்தியோர் காலுக்கு நின்றும்
மெய்ப்பொடி பூசியும் விரிசடை திரித்தும்
வலக்கரந் தனில்சப மணிகள் உருட்டியும்
தலைக்கரி பதந்தரும் சலத்தினைச் சுமந்தும்
இராமதத் துவத்தை இதயத்தில் வைத்தும்
இராமரா மேதி' என்று தான் துதித்தும்

கோனெனத் தில்லைவாழ் கோவிந்தர் வாசலில்
தான் முதற் பத்தனாய்த் தவம்புரிந் தல்லவோ?
கூத்துக்கு மத்தளம் கொட்டினன் நந்தியென்று
ஏற்றமாம் பரதமும் இயம்பிய தொழித்தே
மாயவன் அடித்ததாய் வம்பரும் இயம்பலால்.
நீ அதற் கிங்ஙனம் நிகழ்த்திடும் நீதிகேள்
ஆடிய பாத்திரம் ஆன அச் சங்கரன்
கூடிய சபையினில் கொட்டுதற் கேற்ற
தாளமத் தளத்தையும் தாக்கிடு வோரை உத்
தூளன நீற்றன் தொழுதும் இருக்குமோ?
மத்தளந் தன்னை மாயவன் கொட்டினால்
சித்திர சபைக்குள் அத் திருவுரு இருக்குமோ?
கோவிந்தர் மத்தளம் கொட்டப்போய் நின்றிடிற்
பாவந்தீர் நாடகம் பார்க்கும் பெரியர் யார்?
நண்ணிய சபைக்கெலாம் நாயகன் மாயனும்
உண்மையும் நீயிங் குணர்த்திடக் கேட்டியால்!
நெல்லையம் பலத்தினும் நீள்திரி கூடத்தும்
தொல்லை நூற் புலவர் சொலும்பரங் குன்றினும்
விமல மாகும்திரு மெய்யத்தும் ஆரூர்க்
கமலா லயத்தினும் காஞ்சி புரத்தினும்
இப்படி எங்கும் இருப்பது போலவே
அப்பொழு தோதிய அண்ணா மலையினும்
மாயவன் சன்னிதி மகிமையாய் வந்ததைக்
காய்சின வல்லாள கண்டன் அழிக்குமுன்
வைமரு வாழியான் மாதலம் இருந்ததை
சைமினி பாரதம் சாற்றவும் தெரியுமே!
திருவாழி மலையாய்த் திகழ்ந்தபேர் மாற்றி
அருணைசலச் சொலால் அதனைக் கொண்டாடுதல்
நாகூரில் மீரா நபி என்று துருக்கர்
வாகாய்ச் சிறப்பித்த வண்ணம் போலல்லவோ?
மலையின் உச்சிகளெலாம் மாயவன் வாழ்வென்
றலைவறும் செயாதி யோமமும் சொல்லுதே!

காசியை முன்னே காபாலிக் களித்ததும்
கேசவன் என்றும் கிளத்துது நூலிலே;
சாலவே அனந்தன் தலையில் இப்புவியெலாம்
கோலம் ஓர் துகளெனக் கொடுவந்து வைத்ததால்
சுவேத வராக கல்பப்பேர் சொல்லி
இவேதியர் முதலாய் இனம்சங்கல் பிக்கிறார்
அப்படிக் கிருக்க அருணைக் கல்லடியை
எப்படி அறியா திருந்ததென் றிசைத்தாய்?
அதுவேறு பன்றி யவதாரம் என்றால்
எதிராம் அவ்விண்டு இவனல்ல வென்பேன்;
விண்டுவாய் வருமவர் வேறுளரோ? எனில்
பண்டொரு தச்சன் பகர்ந்த பாட்டுணராய்;
மூகனும் பன்றியின் முனையடி சந்திர
சேகரன் தேடித் திரிந்ததை மறந்தும்
சதாசிவன் தலைமேல் தனஞ்சயன் தாளால்
உதாசினம் பேசி உதைத்தது கேட்டும்
விண்டுவின் மயமாம் விரிசெகம் என்பது
கண்டிருந் தும்வீண் கதைசொல்லு வானேன்?
தாங்கிய சகலா தாரமாம் சேடனாய்
ஆங்கதன் அடியில் ஆமையாய்ப் புனலாய்
மேலுல கங்களாய் விரிஞ்சனா ருலகாய்
மூல மகானாய் முப்பாழும் ஆகிப்
பரமமாகிய மேற் பதத்திலும் நாரணன்
திரமதாய் வசிக்குஞ் செய்கையும் மறை நூல்
செப்புதற் குள்ளாய்ச் சிவனும் கயிலையும்
அப்புகழ் அருணையும் அடங்கிய தல்லவோ?
உலகெலாம் வாரி ஒருகவளம் போல்
அலகிலாப் புகழ்மால் அருந்திய போழ்து
கபாலியும் சுடலையும் கயிலையும் அருணையும்
உபாயமா யோகத் தொதுங்கிய துண்டே?
வான்முத லுலகை ஓர் மலரடி மூடும் நாள்

ஏன்சிவன் கீழே இருந்து நீரேந்தினான்?
கால்தொழும் பிரளய காலருத் திரனையும்
ஊறுகாய் போல ஒடுக்கிமால் உண்டதாய்
வேதமே சொல்லும் விதியினால் என்எதிர்
போதநீ சொன்னபொய் போச்சோ இருக்குதோ?
குயுத்தியர் கூறிய குதிட்டி நூல் விட்டு
சயுத்தி யாம்பெருஞ் சாத்திர முறைமையால்
மான்மனத் துதித்த மதியையும் அவன்ஒரு
கான்மலர்ப் பிறந்த கங்கையோடு இருவர்
நாலுபா தத்தையும் நடுத்தலை சுமக்கும்
சீலத்தீ சானன் சிவனா தல்லவோ?
ஆதலால் மேன்மை யறிந்தழகன் புயம்
காதலானேன் எனக் காணக் கடவையே.

63. இணங்கி—தோழி இணங்கி இசைத்த சொல் என்றது 62-ஆம் பாடலில் கூறியதனை. எதார்த்தம்—உண்மை. உபநிடதங்கள்—உபநிஷத்துக்கள். பாஞ்சராத்திரம்—பாஞ்சராத்திரம் எனும் வைஷ்ணவாகமம். மகோபநிட(த)ம்—மகோபநிஷத்து. *மிருதி—ஸ்மிருதி. இதிகாசம் இரண்டு என்றது ஸ்ரீராமாயண மஹாபாரதங்களை. புயல் வண்ணர் சத்துவ புராணங்கள்—மேகநிறமுடைய திருமால் பெருமை பேசும் சாத்துவிக புராணங்களாகிய விஷ்ணு புராணம், பாகவதம், நாரதீயம், காருடம், பதுமம், வராகம் என்பவை. வழங்குதல்—சொல்லுதல். மேதினி—பூமியை. முதல்—முன்னே. கோடு—கொம்பு. பொன்றிட—அழிய. பொறி—மனம். மெய்ச்சும்—விரும்புகின்ற. தராதலம்—பூமி. சுருள் நாறு கூந்தலாய்!—சுருளாகிய மணங்கமழும் கூந்தலை உடையவளே! இது தோழியை நோக்கிய சுந்தரவல்லி விளி. சுருள்—மகளிர் ஐம்பால் முடிகளுள் ஒன்று. சொற்றனை—சொன்னாய். அது, சிவபுராணத்திலும் சேராதது என இயைக்க. தாமதமும் கற்பனையுமான

*மூலத்தில் 7ம் வரியில் 'மிகுதி' என்பதைத் 'மிருதி' எனத்திருத்தவும்.

சிவபுராணம். கற்பனை—இல்லாததைக் கட்டிச்சொல்லுகை. அவனியில் *இருநூற்று எழுபத்துநாலு இருப்பதை என இயைக்க. மறைமுதற் பல நூலும் என உம்மை விரிக்க. § இவ்வுகத்தில்—இக்கலியுகத்தில். சிவாலயபந்தி—சிவாலய வரிசை. அக்கவிஞர்கள் என்றது சைவக்கவிஞர்களை. விபுதர்—தேவர். அவுணர்—அசுரர். முந்தைய யுகங்களில்—முற்பட்ட கிருத திரேதா துவாபர யுகங்களில். மால்—திருமால். இச்சையால்—தன் விருப்பத்தால். ஐந்துடன் ஐந்து—பத்து. திருவாய்மொழி நாலாயிரம் என்றது திருவாய்மொழி முதலிய நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தை. தேவாரம் எண்ணாயிரமென்றும், துறைமுறை அதிகமாயும் சொல்வதுபோல என்க. பரம்—தகுதி. பாவாடம்—வரம் வேண்டுவோர் கிடக்கும் நிலை. கோவை—திருக்கோவையார் என்னும் நூல். வரங்கிடந்தான் திருமாயவன் என்றது 'வரங்கிடந்தான் தில்லையம்பல முன்றில் அம் மாயவனே' என்னும் திருக்கோவையார்ப் பாடலடியைக் கொண்டு கூறியது. மந்திரம்—கோயில். நீதி—முறை. ஆதியில்—முற்காலத்தில். நிருமித்தல்—கட்டுதல். எம்பிரான் என்றது கோவிந்தராசரை. திருமந்திரம்—திருக்கோயில். மெய்ந்த — மெச்சிய. பூருவமுகம் — கிழக்கு நோக்கிய முகம். மன்று—சபை. வளர்த்தி—பள்ளி கொள்ளச்செய்து. ஈசானமூலை—வடகிழக்குத்திசை. இராகி—இராகம் கொள்ளச் செய்யும் நடனம். சவுக்கை—மேடை. முனிவர்கள் கோவிந்தராசர்க்கு மந்திரமும் தூபியும் ஆதிசேடன்மேற் சயனமும் துலங்கச்செய்து, அதில் மாலை வளர்த்தி, மணிமண்டபத்துக்கு ஈசான மூலையில் சவுக்கையில் சிவனைக் கூத்தாடியாக்கினர் என முடிக்க. வெளி—அயல். அம்பலம்—சபை. நிருத்தியம்—கூத்து. அரிபதம் தரு சலத்தினைத் தலைக்கு அணிந்தும் என்க. அரிபதம்

---

* மூலத்தில் 29-ம் வரியில் 'தலமிகு' என்பதைத் 'தலமிரு' எனத் திருத்தவும்.

§ 37-ம் வரியில் 'உலகத்தில்' என்பதை 'உகத்தில்' எனத்திருத்தவும்.

தரு சலம் என்றது கங்கையை; இது திருமால் திரிவிக்கிரமனாய் உலகளந்த காலத்துப் பிரமன் அவர் திருவடி விளக்கிய நீரே கங்கையாகப் பெருக, அதைச் சிவன் சிரத்தில் தரித்ததுகொண்டு கூறியது. ராம ராம இதி என்க. "ஸ்ரீராம ராம ராமேதி" என்று தொடங்குவதாய், ஸஹஸ்ரநாமத்தின் முடிவில் படிக்கப்படுபவதாய், ஆயிரம் நாமத்தையும் ஒத்த ராமநாமத்தைத் தான் எப்போதும் அனுசந்திப்பதாகச் சிவன் பார்வதிக்குக் கூறும் சுலோகம். பரதம்—பரதசாத்திரம். மத்தளத்தைத் தாக்கிடுவோரையும் என்க; மத்தளம் கொட்டுவோரையும் என்பது பொருள். உத்தூளன நீற்றான்—நீறு திமிர்ந்த உடலுடைய சிவன். சித்திரசபை—கோவிந்தராசர் பள்ளிகொண்ட மன்று. அத்திருவுரு என்றது கோவிந்தராசர் படிமத்தை. திரிகூடம்—குற்றாலமலை. வைமருவு ஆழியான் — கூர்மைபொருந்திய சக்கராயுதத்தையுடைய திருமால். போதாயன சூத்திரத்திலே உள்ள ஜயாதிஹோமம் சொல்லுவது "விஷ்ணு: பர்வதாநாம் அதிபதி:" [விஷ்ணுவே மலைகளுக்குத் தலைவன்] எனத் தொடங்கும் வேதமந்திரத்தை. காபாலி—சிவன். கிளத்துதல் — சொல்லல். அனந்தன் — ஆதிசேடன். கோலம்—வராகப்பெருமான். துகள்—தூசி. இவ்வேதியர் என்க; வேதியர் முதலாக உள்ளார் என்றபடி. இனம்—இன்னும். சங்கல்பித்தல்—சங்கற்பம் செய்கை. சங்கற்பம்—வைதிகக் கிரியைகளில் தொடக்கத்துச் செய்யும் செயல். அருணைக்கல் அடி—அருணசலேசர் பாதம். பண்டொரு தச்சன் பகர்ந்த பாட்டுணராய் என்பதிற் குறித்த செய்தி விளங்கவில்லை. சந்திரசேகரன் மூகனும் பன்றியின் முனையடி தேடித்திரிந்ததை என இயைக்க. சந்திரசேகரன் —சிவன். மூகன்—மூகாசுரன். துரியோதனன் வேண்டலால் அருச்சுனனைக் கொல்ல மூகாசுரன் பன்றியுருவில் வந்தபோது, சிவபெருமான் வேடனுருக்கொண்டு அப்பன்றியின் அடித்தடம் தேடித்திரிந்தது மகாபாரத ஆரணிய பருவத்து அருச்சுனன் தவநிலை சருக்கத்துக் கண்ட

கதையாகும். உதாசினம்—அலக்ஷியம். விரிஞ்சனர் உலகு—பிரமன் வாழும் சத்திய லோகம். மகான், பாழ் என்பவை அசித்தத்துவங்கள். பரமம்—உயர்ந்தது. பரமமாகிய மேற் பதம்—வைகுந்தம். திரமதாய்—திரமாய்—நிலையாய். சுடலை—மயானம். யோகத்து-யோகவலிமையால். சயுத்தி-யுக்தியோடு (நியாயவாதத்தோடு) கூடியது. மால்மனத்து—திருமாலின் இதயத்து. உதித்த—தோன்றிய. மதி—சந்திரன். "எங்கள் மாதவன் இதய மாமலர் வரும்உதயத் திங்கள்" என்பது வில்லிபாரதம். சீலம்—மேன்மை. ஈசானன்—வடகிழக்குத் திசையில் உறையும் சங்கரன். சிவன்—மங்கல உருவினன்.

இனி, பாடலின் பொழிப்புரை:— சிவனடி தேடிக் காணமாட்டாமல் அவமானப்பட்ட (திருமாலின் அர்ச்சா ரூபனை) அழகனையா காதலித்தாய் என்று பழித்த பாங் கிக்கு "நின் சொல் வேதங்களும், உபநிடதங்களும், ஸ்மிருதி களும், இதிகாசங்களும், சத்துவபுராணங்களும் முதலான வைதிக நூல்களோடு மாறுபட்டது; அது திருமால் ஆதி வராகமாய்த் தோன்றி இரணியாக்கனை வதைத்து அவனால் கவரப்பட்ட பூமியைத் தன்கோட்டின் நுனியால் எடுத்து மீட்டான் என்று பழைய நூல்கள் பேசும் உண்மையை மறைத்துப் பேசும் பொய்ப் புராணக் கற்பனை; உலக நீதி புராணம் முதலியவற்றைப் போலப் புராணப் பெயரிட்டுச் சொன்னால் உலகம் கொள்ளுமென்று நினைத்துப் பின் வந்த தமிழர் புனைந்த அருணசலபுராணக் கதையை நம்பியா சொன்னாய்? அது ஒரு தல புராணம்; கற்பனையும் தாமஸமு மான சிவபுராணத்திலும் சேராததல்லவோ! திருமால் தலபுராணங்களை யான் வெளிப்படச் சொன்னால் நீ சண்ட மாருதத்தை எதிர்ப்பட்ட சருகாய்விடுவை. நிலமிசை இருநூற்றெழுபத்து நான்கு சிவதலம் இருப்பதை ஆயிரத் தெட்டுச் சிவதலம் என்றது சைவர்கள் மிகைப்படுத்திய தல்லவோ? திருமால் திருப்பதி நூற்றெட்டையும் வட மொழி வேதம் முதலிய பல நூல்களும் புராணங்களும்

தமிழ்மறையும் தேவர் முதலியோர் போற்றும்படி பேசியது போல. கலியுகத்தில் பிறந்த சிவாலயங்களுக்கும் மேன்மை கூற விரும்பிய கவிஞர்கள். வேதங்களையும் உலகங்களையும் தேவர்களையும் காக்கவும் தீய அசுரர் முதலானோரை அழிக்கவும் முந்திய யுகங்களில் திருமால் தன்னிச்சையாய் அவதரித்த மேன்மை பொருந்திய அவதாரங்கள் பத்துள் ஒன்றான வராகத்தோடிணைத்து அவ்வராகப் பெருமான் சிவனைத் தொழுதலால் மேம்பட்டது இது என்று அருணசலபுராணத்தில் வலிந்து கூறினர்—என்று நினைக்க: யான் கூறும் ஒன்றை நன்கு கேட்பாயாக; திருமால் திருப்பதிகளின் தொகையிலும் சிவதலத் தொகையை மிகுத்துக்கூறியது போலவும், ஆழ்வார்கள் அருளிச் செயல் நாலாயிரமாக. தேவாரம் எண்ணுயிரமானது போலவும் நம்மாழ்வார் திருவிருத்தத்திலும் மிக்க பாடல்களுடன் மாணிக்கவாசகர் திருக்கோவையார் எழுந்தது போலவும் சைவர் திருமாலை நிந்தையே கூறினர்: தில்லையம்பலத்தில் சிவனுர் ஆடிய ஆனந்தத் தாண்டவத்தில் இடக்கால் தூக்கிய நிலையைக்கொண்டு. சிவனுர் திருவடி காணுத திருமால் தில்லையம்பலத்துப் பணிந்து வேண்ட, நடராசர் ஓரடி காட்ட. மற்றொன்றும் காட்டுக என்று கோவிந்தராசர் வரம் கிடந்து வேண்டினுர் எனத் திருக்கோவையாரில் சொல்லியது பொய்யோ மெய்யோ? உன்னறிவிற்கு உண்மை எது என்று உறுதியாய்த் தோன்றும். திருமாலின் இணையடிகளையும் சிவபிரானுடைய கங்கை தங்கிய சடைமுடியையும் தெரிசனம் செய்யும்படி சிவாகமங்களும், பாத்ம புராணமும், தரும சாத்திரங்களும் சொல்வதை நோக்குவாயாக. முற்காலத்தே கண்ணுவமுனிவர்க்குக் காட்சி கொடுத்து எழுந்தருளிய கோவிந்தராசர்க்கு. சோதிடம். சிற்பநூல். சுருதி, சாத்திரங்களின் முறைப்படி ஆலயம் அமைக்க எண்ணிய முனிவர்கள். பிரமத்தானத்தில் அவர்க்கு ஆலயமும் தூபியும் விளங்கச் செய்து. அதில் கோவிந்தராஜரை ஆதிசேஷனுகிய அணையின்மேல் தென்

திசையில் கிழக்கு நோக்கிய முகமும் வடதிசையில் நீட்டிய அடியுமாய் மணிமண்டபத்திலே சயனத் திருக்கோலமாய் அமைத்து. அம்மணிமண்டபத்துக்கு வடக்குத்திசையில் உள்ள சிறிய அம்பலத்தில் சிவனைக் கூத்தபெருமானாக ஆக்கினர்; தில்லைத் திருச்சித்திரகூடத் திருப்பதிக் கோவிந்தராசர், அடுத்துள்ள கூத்தபிரானை மனத்தில் எண்ணி வரங்கிடந்தால். அக்கூத்தபிரான் முகத்தெதிரே காலை நீட்டுவாரா?. திருவரங்கனார் அடிக்கீழ்த் திருவானைக்கா ஈசன் அமர்ந்தது போல, கோவிந்தராசர் முன் கூத்தபிரான் ஆடியது. கோவிந்தராசர் திருமுகமண்டலத்தை நோக்கிக் களித்தும். தம் திருவடிகளிற் சூட்டிய மாலையினையும் அத்திருவடிகளிற் பிறந்த கங்கையினையும் அணிந்து கொள்ளும்படி தந்த கோவிந்தராசர் பெருமையை எண்ணி மகிழ்ந்தும் மனங் கனிந்துணர்ந்தமையால் எழுந்த ஆனந்த தாண்டவமன்றோ? கூத்தபிரானுக்கு கோவிந்தராசர் பெருமையறியும் மெய்யறிவு, கையிற்கனலேந்தியும். ஓர் காலில் நின்றும், நீறு பூசியும், நீள்சடைதரித்தும். தலையில் திருமால் பதத்தினின்று பிறந்த கங்கை நீரைத்தாங்கியும். வலக்கரத்தில் மணிமாலை தரித்து இராம நாமத்தைச் செபித்தும், இராம தத்துவத்தை மனத்தில் எண்ணியும்,கோவிந்தராசர் வாசலில் முதற்பத்தனாய்த்தவம் புரிந்ததனாலன்றோ!. மேலும் ஒன்று கேள்: நடராசர் கூத்துக்குக் கோவிந்தராசர் மத்தளங் கொட்டினார் என்று வம்பர் சிலர் கூறுவது. 'நடராசர் கூத்துக்கு நந்தி மத்தளங்கொட்டினான்' என்று பரதநூல் கூறுவதோடு மாறுபட்டதன்றோ?. அன்றியும். தன் கூத்துக்கு மத்தளங்கொட்டுவோனை நடராசர் தொழுதல் முறையாகுமா?. கோவிந்தராசர் மத்தளம் கொட்டப் போய்விட்டார் என்றால் அவர் திருவுரு சித்திரசபையில் எவ்வாறு இருக்கும்?. கோவிந்தராசர் மத்தளங்கொட்டப் போய் நின்று விட்டால் நடராசர் ஆடும் கூத்தைப்பார்க்கும் பெரியோர் யார்?. சபைகளுக்கெல்லாம் நாயகன் திருமாலே என்னும் உண்மையையும் நீ அறிவாயாக; திருநெல்

வேலி அம்பலத்திலும், திருக்குற்ருலமலேயிலும், திருப்பரங் குன்றத்தும், திருமெய்யத்தும், திருவாரூர் கமலாலயத் திலும், காஞ்சிபுரத்திலும் இவ்வாறே பிறதலமெங்கும் திருமால் சந்நிதி பெருமையோடு முன்னுள் விளங்கி வந்தது போல அண்ணுமலேயிலும் வல்லாளகண்டன் அழிக்கு முன் திருமால் சந்நிதி இருந்தமை சைமினி பாரத நூல் சொல்லுதலால் அறியலாம். திருவாழிமலே என்ற பெயரால் விளங்கியதை மாற்றி அருணுசலப்பெயரால் வழங்குதல் பரிகசிக்கத்தக்கதன்ருே? மலேகளின் உச்சிக ளெல்லாம் திருமால் வாழுமிடமென்று செயாதி ஓமம் என்னும் நூல் சொல்லுவதும் கேட்டதில்லேயோ? முன்னே காசியைத்திருமாலே சிவனுக்குக் கொடுத்தார் என்பதும் நூல் வழக்கன்ருே?. ஆதிசேடன் தலேயில் உலகையெல்லாம் வராகப்பெருமான் ஒரு துகள் போல் கொண்டுவந்து வைத் தமையால், வேதியர் முதலியோர் சுவேத வராக கற்பப் பேர் சொல்லி இன்றும் சங்கற்பிக்கிருர்கள்; அப்படி யிருந்தும் அருணேக்கல்லடியை அவ்வராகப்பெருமான் எப் படி அறியாதிருந்தான் என்றனே? அதுவேறு வராகாவதா ரம் எனின். அடிதேடிய விண்டுவும் இவனல்லன் என் பேன். சிவன் மூகாசுரனுகிய பன்றியின் அடிதேடித் திரிந்ததை மறந்தும், அருச்சுனன் சிவன் தலேயில் அசதி யாடி உதைத்தது கேட்டும். உலகெலாம் விஷ்ணுமயம் என்பது கண்டும் வீண்கதை பேசுவதேன்?. எல்லாவற்றுக் கும் ஆதாரமான ஆதிசேடனுகியும் அவ்வாதி சேடனுக்குக் கீழே ஆமையாயும் நீராயும் சத்தியலோகம் முதலான மேலுலகங்களாகியும், மகான்,முக்குணப்பிரகிருதி எனப்படும் தத்துவங்களுமாகி, உயர்வறவுயர் வைகுந்தத்திலும் திருமால் நிலேபெற்றிருத்தலே வேதம் சொல்லும். இவற்றுள் சிவனும் கயிலேயும் அருணேமலேயும் அடங்காவோ? திருமால் எல்லா உலகங்களேயும் ஒரு கவளம் போல் உண்ட பிரளயகாலத்து, சிவனும் கயிலேயும் சுடலேயும், அருணேயும் யோகவலிமை யால் திருமால் வாயில் அகப்படாது ஒதுங்கியதுண்டோ?

மூன்றுலகையும் திருமால் அளந்தநாள் பிரமன் உலகளந்த திருவடிக்கு ஆட்டிய மஞ்சனநீரைச் சிவன் ஏன் தலையில் தாங்கினுன்? தன் அடிதொழும் பிரளயகால ருத்திரனையும் ஊறுகாய்போல் திருமால் உண்டான் என்று வேதமே சொல்லும் முறையினுல் என் எதிர் நீ சொன்ன பொய் நிலைக்குமோ? குயுக்தியர் சொல்லிய குத்3ருஷ்டி நூல்களைவிட்டு யுக்தியோடு கூடிய நல்ல சாத்திரங்கூறும் முறையால் திருமாலின் இதயதாமரையில் தோன்றிய சந்திரனும், அவர் திருவடித்தாமரையில் பிறந்த கங்கையுமாகிய இருவருடைய நாலுபாதங்களையும் நடுத்தலையிற்சுமக்கும் சீலத்தினுல் ஈசானன் சிவனுயினுன். ஆதலால் சிவன் திருமால் என்னும் இருவருள் மேன்மையறிந்து திருமாலாகிய அழகர் மீது காதல்கொண்டேன்'' என்று அழகர்பெருமையைச்சுந்தரவல்லி விரித்துரைத்தமை இவ்வகவலிற் பேசப்பட்டது.

''மங்கைபாகன் சடையில்வைத்த கங்கையார் பதத்துநீர்
வனசமேவு முனிவனுக்கு மைந்தனை தில்லையோ
செங்கையா லிரந்தவன் கபாலமா ரகற்றினுர்
செய்யதாளின் மலரரன் சிரத்திலான தில்லையோ
வெங்கண்வேழ மூலமென்ன வந்ததுங்கள் தேவனே
வீறுவாணை மரிலன்று விறலழிந்த தில்லையோ
அங்கண்ஞால முண்டபோது வெள்ளிவெற் பகன்றதோ
ஆதலா லரங்கனன்றி வேறுதெய்வ மில்லையே.''

''தேனந்து சோலை யரங்கேசர் சேவடி மேல்விசயன்
தானந்த நாளையிற் சாத்திய மாலையுந் தாள்விளக்கும்
வானந் தருங்கங்கை நன்னீருஞ் சென்னியில் வைக்கப்பெற்ற
ஆனந்தன் தானல்ல வோமுக்க ணுன்மன்று ளாடுவதே''

என்னும் பிள்ளைப்பெருமாளய்யங்கார் பாடல்களையும் இங்கு நோக்கத்தகும். (63)

*தரு*

*இராகம்—துஜாவந்தி.* *ஏகதாளம்.*

*பல்லவி.*

64. நாராயணன் மகிமை சொலப்—பணி
ராசனாலும் தகுமோ.

*அநுபல்லவி*

பாராயணம் செய்யும் வேதனும் ஈசனும்
பானுவும் அண்டர்கள் கோனும் முனிவரும்
ஈராயிரம் ஊழிக் காலம் இயம்பினும்
ஏட்டில் ஒரு பங்கும் பொட்டென ஓயாத—
நாராயணன்

*சரணங்கள்*

(1) சங்கரனைப் பரையைப் படைத்திடும்
பங்கயனைப் படைத்தான்
தங்கவ் வயிற்றில் அநேகம் அண்ட
சராசரத்தை யடைத்தான்
செங்கமலம் புரை கண்கள் பதம் கரம்
சென்னியுடன் திரு நாமமும் ஆயிரம்
அங்கமதான மகாத்துமனுயந்த
ராத்துமனைப் பரமாத்துமனாகிய—நாராயணன்

(2) நூறாயிரங்கோடி கோடி யுரோம
நுதிகள் தோறும் அனந்தம்
பேராத பிரமாண்டங்களைக் கொண்ட
பிரமம் அரியென்கையால்
கூறுதர்க்கிந்தைகள் கூறும் சமயக்
குறும்பரைச் சன்மக் குழிகள் அமிழ்த்தி
வேறாக ஏத்திய பாகவதரைத் தன்
மேலுகில்க் கொண்டு மெய்யடி காட்டிய—நாராயணன்

(3) புராண மெல்லாம் புகழும்—பரம
புருடனும் உத்தமனும்
முராரியுமாய் எந்த நாளிலேனும்
முடிவறும் அச்சுதனாய்ச்

சுராதியர் வேதியர் காலங்கள் மூன்றில்
துதித்திடும் காயத்திரிப் பொருளாய்
மராமரம் சூழ்திரு மாலிருஞ்சோலை
மலைக்கரசாயும் நிலைக்கும் ஒரு சீமந்—நாராயணன்

*64. பணிராசன்—பாம்பரசன்–ஆதிசேடன். வேதன்–பிரமன். ஈசன்—சிவன். பானு—சூரியன். அண்டர்கள் கோன் — தேவராசன் — இந்திரன். பொட்டெனை — விரைவாக. ஓயாத—சொல்லிமுடிக்க முடியாத.*

*1. சங்கரன்—சிவன். பரை—உமை. பங்கயன்—பிரமன். தங்கு அவ் வயிற்றில் எனப்பிரிக்க. அநேகம் அண்டங்களையும் சராசரங்களையும் என உம்மை விரிக்க. சராசரம்—நிற்பனவும் திரிவனவும். படைத்தவனும் அடைத்தவனும். செந்தாமரை மலர்போலும் ஆயிரம் திருக்கண்களும், ஆயிரம் திருவடிகளும், ஆயிரம் திருக்கைத் தலங்களும், ஆயிரம் திருமுடிகளும் ஆயிரம் திருநாமமும் அழகுற அமைந்த மகாத்துமாவும், அந்தராத்மாவும், பரமாத்மாவுமாகிய நாராயணன் என்க. 'காலாயிரம் முடியாயிரம் ஆயிரம் கண்பரப்பி, மேலாயிரந் தலை நாகம் கவிப்ப விண் பூத்த கஞ்சம்போல் ஆயிரம் கண்வளரும்பிரான்" என்னும் ஐயங்கார் பாடலும் இங்கு நோக்கத்தகும்.*

*2. உரோமநுதி—மயிரின் நுனி. பேராத—நிலைமாறாத. சன்மக்குழி—பிறவிக்கிடங்கு—பிறவிக்கடல். தன்மேலுலகு —பரமபதம்.*

*3. முராரி என்பது திருமால் திருநாமத்தொன்று; முரன் என்னும் அசுரனை அழித்தவன் என்பது அதன் பொருள். சுராதியர்—தேவர் முதலியோர். காலங்கள் மூன்று—காலை நண்பகல் மாலை என்பவை. காயத்திரி—அந்த முக்காலங்களில் செய்யப்படும் ஸந்த்₄யாவந்த₃னத்தில் ஜபிக்கப்படும் மந்திரம். பரமபுருடனும் உத்தமனும் முராரியும் அச்சுதனும் காயத்திரி மந்திரத்தின் பொருளும் சோலைமலைக்கு அரசும் ஆகி நிலைத்த ஸ்ரீமந்நாராயணன் என்க.*

*அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

65. வேதமொழி கேட்கவுந்தான் விதியில்லாச் சூத்திரரும்
விரும்பிக் கூடிப்
பாதகமார் உருத்திரற்குப் பரத்துவம் வேதாந்தம்போற்
பனு(ம்)நூல் சொல்வார்
நீதிமறையவரும் உயர்மூன்றுமதத் துறவியரும்
நெஞ்சில் வாக்கில்
மாதவனே பரவத்து எனும் அனுட்டானம்
தெரியும் வரைக்கும் தானே.

*65. மறையவரும். த்வைதம் அத்வைதம் விசிட்டாத்வைதம் என்னும் மூன்று மதத்துறவிகளும் மனத்தாலும் வாக்காலும் மாதவனே பரவத்து என்று கொண்டு ஒழுகும் ஒழுகலாறு தெரியும்வரைதான்—வேதமொழி கேட்டற்கும் தகுதியில்லாத பிறர் கூடி உருத்திரனுக்குப் பரத்துவம் பன்னும் நூல் சொல்வார் என்க. உருத்திரன்—சிவன். பனும்—பன்னும். மாதவன்—திருமால். பரவத்து—பரவஸ்து—பரம்பொருள்.*

*திருமால் தலப்பெருமை*

66. ஆக்கினேய புராணமதிற் றுலாகாவேரியின் புகழில்
அகத்தியன் தன்
வாக்கினால் அருச்சுனற்கித் தென்றிசை வாழ்தலங்களை
வழங்கும போது [முன்
பாக்கியமாம் திருவரங்கம் மாயூரம் திருமெய்யம்
பகரும் கோட்டி
தேக்குபுகழ்ச் சோலைமலை திருமோகூர் மூர்த்திதலம்
செப்பினரே.

*66. ஆக்நேயபுராணத்தில் துலாகாவேரியின் பெருமை பேசுமிடத்து அகத்தியமுனிவர் அருச்சுனனுக்குத் தென்னாட்டிலுள்ள திருப்பதிகளைச் சொல்லும்போது, திருவரங்கம், மாயூரம், திருமெய்யம், திருக்கோட்டியூர், சோலைமலை,*

*திருமோகூர் என்னும் தலங்களின் பெருமைகளையும் அத் தலங்களில் எழுந்தருளியுள்ள மூர்த்திகளின் பெருமைகளை யும் கூறினர் என்றவாறு.*

67. வலமைமிகும் வலாரிசுதன் வழுதிமகள் வடிவறிந்து
மனமாலுற்றுச்
சிலபகலோ டிரவிருந்து மணம்புரிந்த மதுரையில் ஓர்
தெய்வ மாக
நலமிகுமீனாட்சியென்றும் சொக்கரென்றும் இவ்விடத்தில்
நவிலா தாலே
குலங்கயஞ்சூழ் சொக்கலிங்கர் கோயிலப்போ தில்லை
குறிப்புள் ளோரே. [யென்பார்

*67. வலமை — வல்லமை. வலாரி — வலன் என்னும் அசுரனை அழித்தவன்—இந்திரன். வலாரிசுதன் —இந்திரன் மகன் — அருச்சுனன். வழுதிமகள் — பாண்டியன் மகள்— சித்திராங்கதை. வடிவு—அழகு. மால்—மயக்கம். கயம்— கஜம்—யானை. மகாபாரதத்தில் அருச்சுனன் பாண்டியனது மகளை மணந்துகொண்ட செய்தி பேசுமிடத்து, மதுரையில் மீனாட்சி சொக்கலிங்கர் கோயில்கள் இருந்தமை பேசப் படவில்லை என்பர் குறிப்புள்ளோர் என்றவாறு.*

68. சிவத்துதிக்கே பிறந்துளவாக்கியர் புராணமும் மதுரைச்
சிவனை முன்னே
அவத்தன் எனத் தள்ளிவிட்டது அதன்பிறகுண் டான
ஆலவாய்க்குப் [சொக்கர்
பவத்தொடராம் பாடண்டி விளையாட்டுப் புராணம் ஒன்று
பகர்ந்தான் பார்க்கத்
தவப்புகழ்சேர் மாயன் அவதாரம் இசை பாகவதம்
தனக்கீடாமோ?

*68. வாக்கியர் — சிவவாக்கியர். பவத்தொடராம் பாடண்டி—ஸம்ஸாரியான பாஷண்டி. தவ-மிகவும். மாயன் —திருமால். சிவவாக்கியர் புராணமும் சொக்கலிங்கரைப்*

*பேசவில்லை; அதன் பின் தோன்றிய சொக்கலிங்கர் ஆலவாய்க்குத் திருவிளையாடற் புராணம் என்று பிற்காலத்தில் ஒன்று தோன்றிற்று; அது—திருமால் அவதாரம் பேசும் பாகவத நூலுக்கு ஒப்பாகாது என்றவாறு.*

*புராணவுண்மை*

69. பத்தரனுக் கரிக்கொருநா லயர்க்கிரண்டு கனற்கொன்று
பருதிக்கொன்றாய்ப்
பித்தரெனச் சிலருரைத்த பிழைகளைந்து புராண உண்மை
பேசுவேன் கேள்!
முத்தர்தொழும் அரிக்கிருமூன் றயன்றனக்கு மூவிரண்டு
முக்கண் ணனுக்
கொத்தஒன்றே டைந்தெனவே மூவாறு பதினெட்டாம்
உரைக்கும் நூலே.

*69. அரன்—சிவன். அரி—திருமால். அயன்—பிரமன். அனல்—அக்கினி. பருதி-சூரியன். முத்தர்-முக்தர்-வினைக்கட்டற்றவர். இருமூன்று—ஆறு. மூவிரண்டு—ஆறு. முக்கணன் — சிவன். ஒன்றோடைந்து — ஆறு. பதினெண் புராணங்களுள், சிவனுச்குப் பத்து, திருமாலுக்கு நான்கு, பிரமனுக்கு இரண்டு, அக்கினிக்கு ஒன்று, சூரியனுக்கு ஒன்று என்று சிலர் வகுத்துரைப்பது பிழை; திருமாலுக்கு ஆறு, பிரமனுக்கு ஆறு, சிவனுக்கு ஆறு என்று பதினெண் புராணங்களையும் நூல்கள் பகுத்துரைப்பதே முறை என்றவாறு.*

70. இத்தொகையிற் சாத்துவிகம் இருமூன்று புராணம் அவை
யிரண்டிலக்கம்
அத்தொகையிற் குறைந்திருந்தார் அயன்அரனும் இரண்
ஆகத் தானும் [டிலக்கம்
உத்தமர்பே ணும்திருமால் சுலோகபுராணத் தொகையின்
உயர்ந்த தாலே
புத்தலர்மின் புணர்மாற்குப் புராணபுருடப் பெயர்நூல்
புகன்ற வாறே.

*70. புராணம் பதினெட்டினுள், சாத்விக புராணம் ஆறு, அவை திருமாலுக்குரியவை. அவற்றின் சுலோகத் தொகை இரண்டுலக்ஷம். அத்தொகையினும் அயனுக்கும் சிவனுக்கும் உரிய புராண சுலோக எண் குறைந்தது. திருமாலுக்குப் புராண சுலோகத்தொகை உயர்ந்தமையால் புராணபுருடன் என்ற பெயர் நூல்களில் வழங்கலாயிற்று என்றவாறு. அலர்மின்—பூமகளாம் பெரியபிராட்டியார்.*

*உன்னைப்போல் மோகமுற்றூர் உலகில் உண்டோ என்ற பாங்கிக்குச் சுந்தரவல்லி கூறுதல்*

**71.** இன்னனபுகழ்ந்து மால்மேல் இச்சையாய்த் தலைவிகூறப்
பன்னு கோமளையாம் நாமப் பாங்கியும் பரிந்து சொல்வாள்
உன்னிகர் மோகம் உற்றூர் உலகில் வேறுண்டோ? என்னத்
தன்னிகர் இலாத மெய்ச் சுந்தர வல்லி சாற்றுவாளே.

*71. தலைவி என்றது சுந்தரவல்லியை. பரிந்து — விரும்பி.*

*தரு*

*இராகம்—அம்சத்வனி.* *துருவ தாளம்.*

*பல்லவி*

**72.** ஆசையானு ரடி! ஆயன் செங்கனி வாயன்
திண்புயம்—ஆசை

*அனுபல்லவி*

ஓசையுறும் பாற்கடல் தாங்கும்
ஒருமாதெனும் நல்ல திருமா தொடுபலர்—ஆசை

*சரணங்கள்*

மூலப்ரகிருதி பராத்பரசத்தி
மூவகையாமொழி மேவிடு சத்தியும்
ஞாலச் சுமைதவிர் சீதையொருத்தியும்
நானக்குழல்பெறு பூமியும் நீளையும் —ஆசை
சத்தியபாமை உருக்குமணி
தன்னுடன் எண்மரும் விண்ணவரும்
அத்தையுடன்பதி னுருயிரவரும்
அச்சயமாம் நவலட்சம் பெண்களும்—ஆசை

கோதைமாதுமே யலால் கோடிகோடி மாதரும்
தாதைமோதும் ஓர் துழாய் அணிசங்கத்தழகனே
அங்கக்குழகனே—ஆசை

*72. மூவகையா மொழி மேவிடு சத்தி என்றது இச்சா சக்தி, ஞான சக்தி, கிரியா சக்திகளை. நானக்குழல்—கத்தூரிக் குழம்பணிந்த கூந்தல். அட்சயம் — அழிவில்லாமை. நவலட்சம்—ஒன்பது லட்சம். கோதைமாது—கோதையாகிய மாது — ஆண்டாள். தாது — மகரந்தம். அங்கக்குழகன்—அழகிய உடலுடையான். அங்கம்—உடல். குழகு—அழகு.*

*சுந்தரவல்லி அழகர்பால் தோழியைத் தூதனுப்புதல்*

*கலிவிருத்தம்*

**73.** மாது சுந்தர வல்லி சுவாக்கதைக்
காது விம்மிடக் காதலி கேட்டினி
ஓதும் உன்சொற் கெதிர்உரை யேன்எனத்
'தூதுசெல்' எனச் சொல்லத் தொடங்கினாள்.

*73. சுந்தரவல்லியாகிய மாது. சுவாக்கு — ஏற்றுக் கொள்ளத்தக்க பேச்சு. காதலி என்றது பாங்கியாகிய கோமளவல்லியை. ஓதும் — சொல்லுகிற. எதிர் — மறு மாற்றம் — மறுத்துரைக்கும் உரை. 'இனி ஓதும் உன் சொற்கு எதிர் உரையேன்' என்பது சுந்தரவல்லியை நோக்கிப் பாங்கி கூறியது. 'தூது செல்' என்பது பாங்கியிடம் சுந்தரவல்லி கூறியது.*

*தரு*

*இராகம்—பியாகடை* *தாளம்—அடதாளச்சாய்ப்பு*

*பல்லவி*

**74.** அனமேயுரை செய்யடீ! ஆண்டவன்முன்போய்—அனமே

*அனுபல்லவி*

இனமா அமரர்வந் தியல்மா தவம்செயும்
வனமாம் மலர்ச்சோலை மலைமாயவனிடம்—அனமே

*சரணம்*

துதிசீபதி நகரில் சுந்தரவல்லி தொழுதாள் பவனியிலே
மதுசூதன னென்றிடும் தேவர்கள்சிகா மணியே உமது
புதிதாகிய மலர் பொடியாய்க் களபமும் [பார்வையால்
கொதியாகிட இளங்கொடி தாங்குவளோ என்று—அனமே
நொந்தாள் பரதவித்தாள் இந்துவும் சுட
வெந்தாள் உரைவிம்மினள்
நைந்தாள் பல நினைந்தாள் அருவியாகும்
நயனம்புவில் நனைந்தாள்
பந்தாடுதல் மணிப்பணி சூடுதலுந் துறந்தாள் தலைவியை
வந்தாளுவை என்று—அனமே
அருணம்புய நயன! சேஷசயன!
அயனாதியில் வியன!
கருணம்புதியுருவே! அண்டங்களெனும்
கனிதாங்கிய தருவே!
வருணாதியர் வந்து சரணகதிமுந்து
மகிமார்ணவ! அருள் மலர் மாலையை என்று—அனமே

*74. ஆண்டவன் என்றது சோலைமலை அழகரை. இனம்—கூட்டம். இயல் மாதவம்—அமைவுடைய சிறந்த தவம். சீபதி(யாகிய) நகரில்; பவனியில் சுந்தரவல்லி தொழுதாள் எனக்கூட்டுக. களபம்—கலவைச் சந்தனம். இந்து—சந்திரன். நயனம்பு—கண்ணீர். மணிப்பணி—இரத்தினம் இழைத்த அணிகலன். அருணம்புயநயன—செந்தாமரை மலர்போன்ற கண்களையுடையவனே! சேஷ சயன — ஆதிசேஷனாகிய படுக்கையையுடையவனே! அருணம்—சிவப்பு. அயனாதியில் வியன—பிரமன் முதலிய தேவரிலும் மேம்பட்டவனே. வியம்—மேன்மை. கருணம்புதி—கருணைக்கடல். தரு—மரம். சரணாகதிமுந்து—சரணமடைய முற்படுகின்ற. மகிமார்ணவ—பெருமையாகிய கடலையுடையவனே! மலர்மாலையை அருள் என இயைக்க.*

### தோழி தலைவன் அடையாளம் கேட்டல்
### கலிவிருத்தம்

75. சந்து பஞ்சவர்க் காய்நடந் தானிடம்
பந்து மாமுலைப் பாங்கியும் தூதுபோய்
வந்து மாலை வழங்குவென் மற்றவற்
குந்தும் ஓர் அடையாளம்இங் கோதென்றாள்.

*75. பாங்கியும் பஞ்சவர்க்காய்ச் சந்து நடந்தானிடம் தூதுபோய் வந்து மாலை வழங்குவேன் என்றாள் என இயைக்க. சந்து-தூது. பஞ்சவர்-பாண்டவர். மகளிர் தனத்துக்குப் பந்து உவமை. உந்தும்—கிளர்ந்து தோன்றுகின்ற.*

### சுந்தரவல்லி தலைவன் அடையாளம் சொல்லுதல்
### அகவல்

*76. இண்டைசேர் செஞ்சடை எய்தா திசைக்கரு
வண்டையே நிகர்த்துநீள் மணச்சிகைச் சுந்தரன்;
தனதன் இந்திரன் அரன் சதுமுகாதியர் எனக்
கனமுறச் செய்தபொன் காமுற்ற சுந்தரன்;
ஆயிரங்கோடி காலாதித்தர் போல் ஒளி
பாய்கதிர்ச் சக்கர பாணியாம் சுந்தரன்;
ஆளரிபோல், நுதல் அனல்விழி ஒன்றின்றி
வாளிரு செந்தா மரைவிழிச் சுந்தரன்;
சருகுதின்பவர் புனை சடைமுடி யன்றிநீள்
திருவபிடேகமே சிரமணி சுந்தரன்;
முகம்நுதல் நகைஇதழ் மூக்குடன் மார்புதோள்
நகம்விரல் இடைதுடை நாபியும் சுந்தரன்;
ராமனாய் லோகாபி ராமனும் கண்ணனாய்
வாமனன் ஆகிமண் வாங்கிய சுந்தரன்;
சச்சிதா னந்தனாய்த் தாழ்பரந் தாமனாய்
அச்சுத னாகியே அழிவிலாச் சுந்தரன்;
கரித்தோல் பூளைப்பூக் கடுக்கை துர்க்கந்தம்
எருக்கிலை மாலையும் ஏற்காத சுந்தரன்;*

சுடலையும் பூதமும் துட்டமும் பேய்களும்
சடமெனும் குணபமும் சாராத சுந்தரன்;
அம்பிகை யோனியாய் ஆண்குறி தாணுவாய்
இம்பரிற் குருபமும் எய்தாத சுந்தரன்;
சகலதுர்க் குணந்தரும் தாமதன் போலன்றிச்
சகலசர்க் குணந்தரும் சாத்துவிக சுந்தரன்;
பூஜார்கமான புனித வெண் சங்கமும்
ராஜாங்கம் செங்கோல் நலந்திகழ் சுந்தரன்;
கோரமாய்ப் பாதி பெண்கோலம் ஆண்கோலமாய்ச்
சாருத லின்றித் தனுவெலாம் சுந்தரன்;
பவத்தில்வந் துதிப்பதும் பாணியில் கபாலமும்
சவட்பொடி என்புகள் தாங்காத சுந்தரன்;
உடலுயிர் மைந்தனால் ஓதல் மருகியால்
தடமனி தர்க்கெலாம் தந்தருள் சுந்தரன்;
தனம்எழில் பாரியால் தான்யாதி பெண்டால்
மனிதருக் கென்றும் வழங்கிய சுந்தரன்;
வானமோர் பேரனால் வாழ்க்கையோர் மைந்தனால்
ஞானம் பவுத்திரனால் நல்கிய சுந்தரன்;
வீட்சணம் செய்து விமல ஆன்மாக்கட்கு
மோட்சம் கொடுக்கும் முதலான சுந்தரன்;
கத்தூரி பச்சைக் கருப்பூரம் குங்குமம்
கொத்தார் சவ்வாதுக் குழம்பணி சுந்தரன்;
கைலைபோல் நந்தி கலங்க மாமேருச்
சைலமாம் விராட்டே தாங்கிய சுந்தரன்;
சத்தியமாய் அயன் சங்கரன் இருவரும்
துத்தியம் செயவரும் தொடைகள்சேர் சுந்தரன்;
ஆழிசங் கம்புயம் அங்குசம் கயல்துசம்
வாழிவில் கற்பகம் வச்சிரம் குடைமுதல்
திவ்விய ரேகைச் செறிவால் சிவந்தே
இவ்விதம் ஒப்பிலா இணையடிச் சுந்தரன்;
நூலுரை மன்மதர் நூறுகோடியின் மிகு
சீலமாய்க் கர்த்தரில் சிறந்துள சுந்தரன்;

நெருங்கிய வெண்மையில் நீனிற மாகிச்
சுருங்கலில் வானெனத் தோன்றுமெய்ச் சுந்தரன்;
கனக விமானமும் கனகவிக் ரகமுமாய்த்
தினமுயர் தருமன் தியானித்த சுந்தரன்;
ஆண்டாரும் முன்னம் ஐந்தாழ்வாரும் அன்புளம்
பூண்டாரியர்களும் போற்றுமெய்ச் சுந்தரன்;
மேதினி பூதர மீதுறை தேவர்க்கும்
ஆதியிலே உதித்து அருளிய சுந்தரன்;
ஒன்றுடன் பத்துநூ றுயிரம் அனந்தம்
என்ற மூர்த்திகளாய் இலகிய சுந்தரன்;
மஞ்சீர நதிமுதல் வருநதி பதியாய்
மிஞ்சீர வருள்பொழி விழிகளார் சுந்தரன்;
என்றடை யாளம் இசைத்திட இவன்பால்
சென்றனள் சேடித் தெரிவையும் தெரிந்தே.

76. இண்டை — ஒருவகைப் பச்சிலை. நிகர்த்து— ஒத்து. சிகை—குழல். தனதன்—குபேரன். பொன்—திருமகள். தனதனென்றும் இந்திரனென்றும் அரனென்றும் பிரமன் முதலியவர் என்றும் பெருமையுறச் செய்த திருமகளால் விரும்பப்பட்ட சுந்தரன். காலாதித்தர்—பிரளய காலசூரியர்கள். கதிர்—கிரணம். ஆயிரகோடி பிரளயகால ஆதித்தியர்களைப்போல ஒளிவீசும் கிரணங்களையுடைய சக்கரத்தைக் கைத்தலத்தேந்திய சுந்தரன். ஆளரி—நரசிங்கம். நுதல்—நெற்றி. அனல்விழி—நெருப்புக்கண். வாள்—ஒளி. செந்தாமரை போன்ற ஒளி பொருந்திய இரண்டு திருக்கண்களையுடைய சுந்தரன் என்க. திருவபிடேகம்—கிரீடம். சிரம்—தலை. லோகாபிராமன்—உலகத்தையெல்லாம் மகிழச்செய்பவன். மண்வாங்கிய—(மாவலிபால்) மூன்றடி மண்பெற்ற. சத்து சித்து ஆநந்தமாய் என்க. தாழ்—வணங்கப்படுகிற. பரந்தாமனை—மேலான பரமபதத்தில் உள்ளவனை. கடுக்கை—கொன்றை. துர்க்கந்தம்—தீயநாற்றம். சடம்—அறிவற்றது. குணபம்—பிணம்.

குரூபம்—அழகற்ற உருவம். சகலதுர்க்குணம் — எல்லாத் தீயகுணங்களையும். தாமதன்—தாமஸ குணமுடைய சிவன். சர்க்குணம்-நல்ல குணங்கள். பூஜார்கம்-பூஜைக்குத்தக்கது. பாதி பெண்கோலம் பாதி ஆண்கோலமாய் என்க. தனு—உடல். பாணி—கை. கபாலம்—மண்டையோடு. சவப் பொடியும் என்புகளும் என உம்மை விரிக்க. தடம்—பெருமை. மைந்தனுகிய பிரமனுல் மனிதர்க்கெல்லாம் உடலும் உயிரும், மருகியால் ஓதலும் ( கல்வியும் ) தந்தருள் சுந்தரன் என்க. மருகி என்றது சரசுவதியை. ஓதல்—கற்றல். தான்யாதி—தானியம் முதலியவை. பாரி—பெண்டு என்பவை மனைவி என்னும் பொருளுடையன. தனலக்குமி தான்யலக்குமி முதலிய அட்டலக்குமிகளை உணர்த்திநின்றன. பாரி என்று ஸ்ரீதேவியையும் பெண்டு என்று பூதேவியையும் குறிக்கிருராகவுமாம். வானம்—வானுலக இன்பம். பேரனுல் — பேரன் முறையினனுன இந்திரனுல். வாழ்க்கை யென்றது—மண்ணுலக இன்பத்தை. மைந்தனுல்—மகன் முறையினனுன மன்மதனுல். பவுத்திரன் —மகன் மகன் என்றது சிவனை. ' நான்முகனை நாராயணன் படைத்தான் நான்முகனும் தான்முகமாய்ச் சங்கரனைத் தான்படைத்தான்" என்பர் பெரியோர். ஒரு பேரனுகிய இந்திரனுல் வானக இன்பத்தையும், மகனுகிய மன்மதனுல் மண்ணுலக இன்பத்தையும், மற்றொரு பேரனுன சிவனுல் ஞானத்தையும் மக்களுக்கு வழங்கிய சுந்தரன் என்றவாறு. " பிரமன் மதன் சுதனும் பரமன் புரந்தரனும் பேரனுன....சுந்தரராஜன்" (இக்குறவஞ்சி 11ஆம் பாட்டு) என்று பின் அழகர் கிளைவளங் கூறுமிடத்து ஆசிரியர் கூறுதலால் திருமாலுக்குப் பிரமனும் மன்மதனும் மகன்முறையினரென்றும் சிவனும் இந்திரனும் பேரன்முறையினரென்றும் அறியலாம். வீட்சணம்செய்து—நோக்கி. விமல ஆன்மாக்கட்கு—குற்றமற்றவுயிர்களுக்கு. மோட்சம்—வீடு முதல்—தலைவன். மேருச் சயிலம்—மேருமலை. விராட்டு—பிரபஞ்சம் "தஸ்மாத் விராட் அஜாயத" என்ற புருஷஸூக்தம் காண்க. துத்தியம்—துதி.

தொடைகள்-பாடல்கள். துடைகள் என்று பாடமாகவுமாம். ஆழி-சக்கரரேகை. சங்கு-சங்கரேகை. அம்புயம்-தாமரை. துசம்—துவசம்—கொடி. நூல் உரை—நூல்களாற் பேசப் படுகிற. நூறுகோடி மன்மதரினும் மிகுசீலமாய் என்க. சீலம்—மேன்மை. கர்த்தர்—கடவுளர். நீனிறம்—நீலநிறம். தருமன்—தருமதேவதை—அறக்கடவுள். ஆண்டார்—திரு மாலையாண்டார். இவர் இராமானுசரின் ஐந்து ஆசாரி யர்களுள் ஒருவர். அழகருக்குப் புரோகிதர். இங்கே ஐந்து ஆழ்வார் என்றது; பெரியாழ்வார், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், ஆண்டாள், பூதத்தாழ்வார் என்ப வர்களை. ஆரியர் என்றது கூரத்தாழ்வான் முதலிய ஆசாரி யர்களை. போற்றுதல்—வணங்குதல், புகழ்ந்து (துதித்துப்) பாடுதல் என்னும் இரு பொருளும் தரும். திருமாலிருஞ் சோலை விஷயம் பெரியாழ்வார் திருமொழி 4ஆம்பத்து 2ஆம்பதிகம். நம்மாழ்வார் திருவாய்மொழி 2ஆம்பத்து பதிகம் 10, 3ஆம்பத்து பதிகம் 1, 10ஆம்பத்து பதிகம் 7. திருமங்கையாழ்வார் பெரியதிருமொழி 9-8, 9-9 பதிகம். ஆண்டாள் நாச்சியார்திருமொழி பதிகம் 9. பூதத்தாழ்வார் திருவந்தாதி48. ஆழ்வார்களில் ஐவரும் (சுந்தரபாஹுஸ்தவ மியற்றிய) கூரத்தாழ்வான் முதலிய ஆரியரும் அருளிய பாமாலை சூடிய பெருமை அழகர்க்குரியது என்றவாறு. மேதினிமீதும் பூதரமீதும் உறை தேவர்க்கும் முன்னே தோன்றிய சுந்தரன் என்றவாறு. மேதினி—பூமி. பூதரம்—மலை. மஞ்சீரநதி-சிலம்பாறு. நூபுர கங்கை. நதிபதியாய்-நதிகளுக்கு நாயகனாய். மிஞ்சு ஈர அருள் பொழி விழிகள் என்க. சேடித்தெரிவை—சேடியாகிய பெண்.

சூரியோதயம்

கலிவிருத்தம்

**77.** **தோழி தூது செலுந்திறம் காண்டும் என்று**
**ஆழி ஒன்றுடை ஆதவன் தோன்றினான்**
**வாழி மால்கொளும் வல்லி ஒருகணம்**
**ஊழி ஏழென உன்னிஒன் றோதுவாள்.**

77. காண்டும் — காண்போம். ஆழி ஒன்று உடை ஆதவன் — ஒற்றைச் சக்கரம் ( பூண்ட தேரினை ) உடைய சூரியன். மால்—மயக்கம். மால் கொளும் வல்லி என்றது சுந்தரவல்லியை.

சுந்தரவல்லி காதல்மிகப் புலம்புதல்

திபதை

இராகம்—பரசு. ஏகதாளம்.

78. ஊழிக்கனலை உண்ட திறத்தினர்—விரகினால் எனக்
குற்ற கனலை உண்ணத் திறமிலார்
ஆழிக்குத் திருவணை யொன்றியற்றினர்—விழிபொழிபுனல்
ஆழிக்குத் திருவணை யொன்றியற்றிலார்
மேரு வில்லிதன் தனுவை ஒடித்தவர்—புல்லகண்டமாம்
வில்லி-கைச்சிறு தனுவை ஒடித்திடார்
ஏருறும் வடவிலையில் துயின்றவர்—பின்னைச் சுழியில்
ஏற்கும் என்வடவிலையில் துயின்றிடார்.
முன்னும் பின்னும் நஞ்சுண்டு கருத்துளார்—முயங்கி
மோக விழிநஞ் சுண்ணக் கருத்திலார் [என் இரு
துன்னும் களிற்றின் கோடு பிடித்தவர்—கொங்கைகள்
துங்கக் களிற்றின் கோடு பிடிக்கிலார் [என்ற
அண்டர் வாழ அமுதம் கொடுத்தவர்—அடிமை வாழ்ந்திட
அதரம் ஊறும் அமுதம் கொடுக்கிலார்
தொண்டர் போற்றிய சோலை மலையில்வாழ்—அழகர்
சூழ்ச்சி யாரிடம் சொல்லி ஆறுவேன். [செய்திடும்

78. திறம் — வலிமை. விரகு — விரகம்—காமநோய். மேருவில்லி — சிவன். சிவன் வில்லை ஒடித்த செய்தி இராமாயண பாலகாண்டத் திருமணப்படலத்தால் அறியலாம். புல்லகண்டம்—ஒருவகைக் கரும்பு. வில்லி—மன்மதன். வடவிலை—ஆலிலை. வடவிலையில் துயின்றது பிரளயவெள்ளத்தில். என் வட இலையில்—ஆலிலைபோலும் என் வயிற்றில். மகளிர் வயிற்றுக்கு ஆலிலை உவமை. முயங்கி—கூடி.

கருத்து இலார் — எண்ணமில்லாதவராயினர். துன்னும் (கொல்ல) நெருங்கிய. களிற்றின்கோடு—குவலயாபீடமென்னும் யானையின் கொம்பு. அண்டர்—தேவர். அதரம்—இதழ்—உதடு. சூழ்ச்சி—வஞ்சனை.

*சுந்தரவல்லிக்குப் பாங்கியர் சயித்தியோபசாரம் செய்தல்*

*அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்*

**79.** **இவ்விதமாய் மனதுருகி மயிர்பொடித்தும்**
**இதழ்துடித்தும் ஈசன் ஏந்தும்**
**நவ்விதொழத் தாவிருகட் கருங்கடலும்**
**உடைந்துவிரல் நாலில் நண்ணும்**
**செவ்விமிகுஞ் செவிக்கிணறு தேக்கிஎழப்**
**பரவசமாய்த் தியங்கும் மாதை**
**வவ்விவளை மங்கையரம் மயக்கமதைத்**
**தெளியவைக்கும் வகைசெய் வாரே.**

79. ஈசன்—சிவன். நவ்வி—மான். தொழத்தாவு இருகண் கருங்கடலும் எனப் பிரிக்க. விரல் நாலில் நண்ணும் செவி, செவ்விமிகும் செவி என்க. கண்களிலிருந்து நான்கு விரலளவிலுள்ள அழகு மிக்க செவி என்பது பொருள். கண்களாகிய கடல்கள் உடைந்து பெருக்கெடுத்த நீரைச் செவிகளாகிய கிணற்றில் தேக்கி என்க. கடலுடைந்து பெருக்கெடுத்த நீரைக் கிணற்றில் தேக்கி என்ற நயம் நோக்கத்தகும். மாதென்றது சுந்தரவல்லியை. வளைமங்கையர் வவ்வி என இயைக்க. வளை மங்கையர் என்றது பாங்கியரை. வவ்வி—கைக்கொண்டு. வளைமங்கையர் என்பது வளையணிந்த மங்கையர். சுந்தரவல்லியைச் சூழ வளைந்த மங்கையர்—என இருபொருள்பட நின்றது.

*தரு*

*இராகம்—தோடி.* *தாளம்—அடதாளச்சாய்ப்பு.*

*பல்லவி*

**80.** **தாங்கியே பாங்கியர் சயித்திய வுபசாரம்**
**சகலமும் செய்தாரே**

*அநுபல்லவி*

கோங்கிலவலர் கமழ் சோலைமலை வளர் முகுந்தன் மேல்
கொண்ட சுந்தரவல்லியைத்—தாங்கியே [மயல்

*சரணங்கள்*

பன்னீரின் தாரையால் பாதங்கள் விளக்கியும்
பானியின் நன்மலர்ப் பாணிகள் கழுவியும்
கன்னிவாய் உமிழ்நீர் கனகவட்டிலில் ஈந்தும்
கமலமா மலர்முகம் கமலமேந்தித் துடைத்தும்
கங்கணம் தொடியின் கணங்களுமே கறங்கிடச் செங்
கையொன் றுடனொன் றும் ஒன்றிட
இங்கு நன்கு விளங்கிடு மென்ன
*........................................—தாங்கியே
செவ்விளநீர் சீனி சேர்த்தருந்த முன் செய்தும்
தேன் கற்கண்டுடன் வெண் ணெய்திரள் செங்கையிற்
தவ்வமிலாத பஞ்ச சயனத் தூசலில் விட்டும் [பெய்தும்
தழைக்கும் மண் கிள்ளி நெற்றிதனில் நடுக்காப்பிட்டும்
தருணிகள் கையொளி திமிதிமெனவிரை
தசமுருகு புகை குமுகுமெனமுறை—தாங்கியே.

*80. சயித்திய உபசாரம் சகலமும்—குளிர்ச்சியடையச் செய்யும் உபசாரம் எல்லாவற்றையும். கோங்கலர் இலவலர்—கோங்கம்பூ; இலவம்பூ. கோங்கு இலவு என்பவை மரவகை. தாரை—நீரொழுக்கு. பன்னீரால் அடிகளைக் கழுவியும் என்பது பொருள். பானியின்—(குளிர்ந்த) நீரால். நன்மலர்ப் பாணிகள்—நல்ல தாமரைமலர் போலும் கைகள். வாய் உமிழ்நீர்—வாய்க்கொண்டு உமிழ்தற்குரியநீர். கனகவட்டில்—பொற்கிண்ணம். தொடியின் கணம்—வளைகளின் கூட்டம். கறங்கிட—ஒலிக்க. தவ்வம்-குற்றம். பஞ்ச சயனத்து ஊசல்—அன்னத்தூவி. பூ. இலவம்பஞ்சு கோரை. மயிர் என்பவற்றால் அமைந்த ஐந்துவகைப் படுக்கையினை*

---

*ஏட்டில் சிதைந்த வரி புள்ளியொற்றிக்காட்டப்பட்டது.*

*யுடைய ஊஞ்சல்; அழகு, குளிர்ச்சி, மென்மை, பரிமளம், வெண்மை என்று ஐந்து தன்மைகொண்ட படுக்கை ஊஞ்சலும் ஆம். தருணிகள்—இளமகளிர். தசமுருகு— நறுமணம் கமழும் பத்துப்பொருள்கள்.*

*சுந்தரவல்லி கூடல் இழைத்தல்*
*அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

**81.** இனியாரைப் போல இருந் தின்னல்செயும்
ஏந்திழையார் ஈட்டத் தூடே
தனியாகும் கைக்கிளி சுந்தர ராசன்
எனப்புகன்ற சத்தம் கேட்டுக்
கனிவாகி வந்திருப்பன் காண்டுமென
எழுந்திமைத்துக் காணுள் சென்னி
குனிவாய் ஓர்உபாயம் உன்னிக்கூடல்
வளைத்திட உளத்தில் குறிப்பிட்டாளே.

*81. இன்னல் — துன்பம். ஏந்திழையார் ஈட்டம் என்றது பாங்கியர் கூட்டத்தை. விரகதாபம் உற்று சுந்தரவல்லிக்கு அத்தாபத்தைத் தணிக்கப் பாங்கியர் செய்யும் உபசாரம், அத்தாபத்தை மேலும் மிகுத்தலால் இனியாரைப் போலிருந்து இன்னல் செய்ததாயிற்று. கூடல் இழைத்தல் என்பது குறிவகையில் ஒன்று; காதலனைப் பிரிந்த காதலி, கண்ணைமூடிக்கொண்டு கைவிரலால் மணலில் வளையம் வளையமாகச் சுழித்து அவ்வளையம் தொடங்கிய இடத்தே வந்து கூடினால் பிரிந்த காதலன் வந்து தன்னைக் கூடுவன் என்று அறிதல்.*

*தரு*

*இராகம்—நவரோசு.* *தாளம்—திரிபுடை.*

*பல்லவி*

**82.** கூடுவாரெனில் கூடுநீ குலவும் கூடலே!

*அநுபல்லவி*

மாடெல்லாம் மொய்பூஞ்சோலை மலை
மாலிங்கு வந்தென்னைக்—கூடுவா

*சரணங்கள்*

காலுங் கழுநீரோடையும் மாளிகை சூழ்பூங்
காவுங் கனகமேடையும் புது நிலாவும்
பாலெங்கும் தூபவாடையும் கற்பூரதீபம்
பலவும் சபலமாகவே—கூடுவா
பஞ்சாமிர்த மதுபர்க்கம் பருகிச் சீவற்
பாக்கும் பவளச் சுண்ணமும் பரிமளம்செய்
பஞ்சவாசமும் சேர்ந்திடும் வெள்ளிலைச் சுருள்
பவளங்களால் இடுக்கியே தந்து சுந்தரன்—கூடுவா
தேனூர் பன்மலரால் செய்யும் புதுமணம்சேர்
தெரியல் சிகையிற் சூட்டியே அத்தர்பன்னீரில்
நாணம் புழுகு பூரம்சேர் வேரிச் சந்தனத்தை
நன்மார்பிற் பூசியே ராசியாய்ப் பரமசாமி—கூடுவா
உத்தான சம்புடம்செய் திதழ்சுவைத் தென்
உள்ளக் கவலையைக் கொய்து மதநீர்பெய்து
மெத்தைப் பட்டு மகமலாம் பஞ்ச சயனமீதே
வினோதமாகவே மாலலங்காரன்—கூடுவா

*82. குலவுதல்—விளங்குதல். மாடு—பக்கம். கால்—வாய்க்கால். பால்-பக்கம். தூபவாடை-தூபமிகுதலால் எழும் நறுமணம். சபலம்—ஸபலம்—பயனுடையது. பஞ்சாமிர்தம்-வாழைப்பழம். தேன். சர்க்கரை. நெய். திராட்சை என்னும் இனிய பொருள்களால் ஆனது. மதுபர்க்கம்—தேனும் பாலும் பழமும் கலந்த உணவு. பவளச்சுண்ணம்—பவளத்தை நீற்றிக்கொண்ட சுண்ணும்பு. பஞ்சவாசம்—வால்மிளகு. ஏலம். இலவங்கம். ஜாதிக்காய். பச்சைக் கர்ப்பூரம் என்பவை. வெள்ளிலைச்சுருள்—வெற்றிலைச்சுருள். பவளம் என்றது அதரத்தை. நாணம்—கஸ்தூரி. புழுகு—புனுகு. பூரம்—கருப்பூரம். வேரி—நறுமணம். உத்தான சம்புடம்—கலவிநிலையுள் ஒன்று.*

குறவஞ்சி வருதல்

அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

83. நூலை நுசுப் பெனப்புகல்சுந் தரவல்லி
யோர்குறியாய் நோக்கிக் கூடல்
வேலையென வளைத்ததுவும் மேவிடவே
மன துகந்த வேலை வேதம்
நாலைமதித் தழகரது தசாங்கம்
நவநீதமென நவின்று செங்கண்
மாலைமதித் திடுநிறத்துச் சோலைமலைக்
குறவஞ்சி வருகின்றாளே.

83. நுசுப்பு—இடை. நூலெனப்புகல் நுசுப்பினை யுடைய சுந்தரவல்லி என்க. மகளிர் இடைக்கு நூல் உவமை. அது—இழைத்த கூடல். மேவிட—பொருந்த. தசாங்கம்—பத்து உறுப்புக்கள். அவை; நாடு, நகர், மலை, யானை, குதிரை, முரசு, குடை, கொடி மாலை, முடி என் பவை. நவநீதம் — வெண்ணை. மாலை மதித்திடுநிறம்— திருமாலை நினைவிக்கும் கரியநிறம்.

குறத்தி அழகர் தசாங்கம் கூறுதல்

ஆசிரியப்பா

84. விதிசிவ னுதியாம் விபுதரும் அனுதினம்
துதிதிரு மாலிருஞ் சோலைமா மலையான்;
பழகிய பஞ்சமா பாதகம் தீர்த்திடும்
கழலணி நூபுர கங்கைமா நதியான்;
வேண்டிய உதவிகள் விண்ணவர்க்கும் செயும்
காண்டிவன் மதித்ததென் பாண்டிநன் னாட்டான்;
உலகெனும் வனிதைதன் ஒளிர்மதி நுதலணி
திலகமாய் விளங்கிடும் சீபதி நகரான்;
வாவிசூழ் மகேந்திர வரைநின் றிலங்கைமேல்
தாவிய அனுமச் சதாசிவக் குதிரையான்;
ஆதியாய் மூலமாய் அனைத்தும் ஆயவன் என

ஓதிமுன் வெளிசெய்த உத்தம யானையான்;
பருதிபோல் உலகுளோர் பவஇருள் அகற்றிய
சுருதியிற் புனிதமாம் துளப மாலிகையான்;
கூவதிர் முகிலரி குஞ்சர முழக்கென
மூவகை முரசமும் முழங்கிடும் முன்றிலான்;
மலையின் மா மேருவின் வண்ணமாய் எண்ணெண்
கலைபுகழ் விராட்டெனும் கருடப் பதாகையான்;
காலகா லனுக்கும் காலனாய் உலகெலாம்
சாலவும் நடத்திடும் தன்திரு ஆணையான்;
கண்டகர் சுரரொடெக் கடவுளும் பிழைசெயில்
தண்டிக்கும் ஆக்கினை சக்கரம் ஒன்றுளான்;
மகமெலாம் நுகர்பர வத்து மாதவன்எனச்
செகமெலாம் அறிவுறச் செங்கோல் செலுத்துவோன்;
அரனயற் கதிகனென் றனைவரும் அறிந்திடக்
கிரணமொய்த் திலங்கிய கிரீடம் உற் றுயர்ந்தோன்:
ஆயிரம் பணமணி அரவர சானது
வேயிசை ஒருதிரு வெண்கொற்றக் குடையான்;
திக்குள யாவரும் தேவரும் கூடல் வாழ்
சொக்கரும் தலையில் சுமக்கும் நற்பெயருளான்;
ஈசனுக் கீசனென் றிம்பரும் அறிந்திடத்
தேசுபெற் றொளிர் பெயர்த் தெய்வசிகாமணி
சத்தியைச் சிவனை அச் சதுமுகா தியை நரர்
புத்தியால் தொழுதிடும் புண்ணியம் அனைத்தும்
ஒருவடி வாகிவந் துலகில் நற்றவம் செய்யும்
தரும தேவருக்குமுன் சான்னித்யம் ஆகினேன்;
என்று கொண்டாடி இசைக்குறம் பாடியே
குன்றினில் அருணன் குறுகுமுன் பெழுந்து
சுந்தரத் தோளனைச் சுந்தர மூர்த்தியை
சுந்தர ராசனைச் சுந்தரே சுரனைச்
சிந்தித்தும் பொற்பொடி திருமண்காப் பெழுதியும்
வந்தித்தும் பன்முறை வாயாரத் துதித்தும்
அன்னம் உண்டதற்பின் அடைக்காய் அருந்தியும்

மின்னிகர் இடைக்கொரு வெண்பட் டுடுத்தியும்
கால்வைத்துப் பின்னிய காம்பினில் கூடையும்
வால்வளைக் கரத்தின் மணிப்பிரம் புடனே
முலையின் முத்திறமாய் மூடிய குன்றியும்
கலைநிலா வியபொற் கழுத்தினில் காரையும்
சிங்கப்பல் புலிநகம் சேர்ந்தொளிர் தாலியும்
தங்கத்தில் கொம்பால் சமைத்த தோள்வளைகளும்
புருடா மிருகத்தின் போர்க்கொம்பில் ஆழியும்
இருள்தாழ் குழல்மீது எழுதும் புழுகுடன்
பூரண பொற்குடம் போல்திரு முலைகளும்
வாரணப் பிடிதாழ் வணங்கிய நடையுமாய்
தோரணம் துவசம் துலங்கு சீபதியில்
ஆரண வீதியில் ஆயிழை யார்முதல்
சகலர்க்கும் உரைசெயும் சாமுத் திரிகமும்
பகலென நிமித்தம் பகர்பலன் கவிகளும்
நட்டமும் முட்டியும் நயந்த சிந்தனையும்
பொட்டென உரைத்திடும் புதுமையும் அன்றியே
சண்டமா ருதத்துடன் சத்தசாகரம் உணும்
கொண்டல் ஏழும் சினம் கொடுவிடும் தாரையும்
பொருஅல் என்றிடப் புங்கானு புங்கமாய்
வருகுறி சொலும் குறவஞ்சி வந்தனளே.

84. விதி—பிரமன். விபுதர்—தேவர். அனுதினம்—நாள்தோறும். தேவர்க்குப் பகைவரான நிவாதகவச காலகேயரை வென்றதுபற்றி 'வேண்டியவுதவிகள் விண்ணவர்க்குச் செயும் காண்டிவன்' என்றார். காண்டிவன்—காண்டீபன்—அருச்சுனன். உலகெனும் வனிதை—உலகென்று சொல்லப்படும் பெண். அனுமச் சதாசிவக் குதிரையான்—அனுமன் என்று சொல்லப்படும் சிவனாகிய குதிரையையுடையவன். 'புராரிமற் றியானே வாதசேய் எனப்புகன்றான்' (திரு அவதாரப்படலம்) என்னும் கம்பர் கூற்றும் இங்கு நோக்கத்தகும். ஆதியாய்.... ஓதி முன்

வெளிசெய்த உத்தமயானையான் என்றது கஜேந்திரனை. பருதி—சூரியன். பவ இருள்-ஸம்ஸாரமாகிய இருள். சுருதி-வேதம். முகில்—மேகம். அரி—சிங்கம். குஞ்சரம்—யானை. மூவகை முரசும்—மணமுரசு, கொடைமுரசு, படைமுரசு. என்பவை. மலையின் மாமேருவின் வண்ணமாய்—மலைகளுக்குள் மகாமேருமலையின் பொன்னிறமுடையவனாய். விராட்டு—விராட்புருஷன். கருடப்பதாகை—கருடக்கொடி. கால காலனுக்கும் காலனாய்—யமனுக்கும் யமனான சிவனுக்கும் யமனாய். கண்டகர்—கொடியவரான அசுரர். ஆக்கினை சக்கரம் — ஆஜ்ஞாசக்கரம். மகம் — யாகம். மகமெலாம் நுகர்-எல்லா வேள்விகளிலும் கொடுக்கப்படும் அவியுணவை உண்கின்ற. பரவத்து—பரவஸ்து—பரம்பொருள். ஆயிரம் பணமணி அரவரசான துவே இசை....—மணிபொருந்திய ஆயிரம் படங்களையுடைய ஆதிசேஷனே திருமாற்கு இயைந்த ஒப்பற்ற அழகிய குடையாய் அமைந்தமை "சென்றாற் குடையாம் இருந்தாற் சிங்காதனமாம் நின்றால் மரவடியாம் நீள் கடலுள் — என்றும் புணையாம் மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும் அணையாம் திருமாற் கரவு" (முதல் திருவந்தாதி 53) என்பதனால் அறியலாம். 31, 32ஆம் அடிகள் தெய்வசிகாமணி என்னும் பெயர்க்காரணம் விளக்கின. இம்பர் — இவ்வுலகோர். சாந்நித்யம் ஆகினோன்—வெளிப்பட்டோன்—பிரத்யக்ஷமானவன். குன்று என்றது உதயகிரியை. பொற்பொடி—ஸ்ரீ சூர்ணம். வந்தித்தல்—வணங்குதல். அடைக்காய்—வெற்றிலை. முத்திறமாய்—செம்மை கருமை வெண்மை நிறம் பொருந்தி. குன்றி—குந்துமணி. கலை—புடவை. நிலாவிய—விளங்கிய. புருடாமிருகம் — புருடன் முகமுடையதொரு விலங்கு. ஆழி—மோதிரம். வாரணப்பிடி—பெட்டையானை. ஆரணவீதி—வேதமுழக்கமுள்ளவீதி. சாமுத்திரிகம்—உடலுறுப்புக்களின் இலக்கணம் கூறும் நூல். நிமித்தம்—சகுனம். நட்டம்—இழப்பு. முட்டி—கைப்பிடியுள் அடங்கியது. பொட்டென—

விரைவாக. சண்டமாருதம்—பிரளயகால வாயு. சத்த சாகரம் உணும் கொண்டலேழும் — ஏழு கடல்களையும் பருகும் ஏழுமேகமும். பொரு—ஒப்பு. புங்கானுபுங்கமாய்—இடைவிடாது தொடுத்து வருதல்.

*பதம் (தரு)*

*இராகம்—சுருட்டி.* *தாளம்—அடதாளச்சாய்ப்பு.*

*பல்லவி*

85. வஞ்சிவந்தனளே மலைக்குற வஞ்சி வந்தனளே

*அநுபல்லவி*

வஞ்சி சரரிது மஞ்சில் அழகிய
குஞ்சி நுதல்மதி விஞ்சும் அடிகள்செம்
பஞ்சு மலரது மிஞ்சு மதனனும்
அஞ்சி முறைமுறை கெஞ்சி இறைஞ்சிடும்—வஞ்சி

*சரணங்கள்*

சேலையும் குன்றி வடங்களும் தன்புன்
சிரிப்பும் மின்செய்திடவே—பசும்
பாலின் மதுரம் புரிந்திட நாளும்
பலன்குறி எய்திடவே—உயர்
காலை மலையுடன் மாலைமலை முன்சு
வேலைமலை தொழும் சோலைமலைக்குற—வஞ்சி

கோலத்தொடிரிரு கால்வைத்த மூங்கில்நற்
கூடையும் இடுக்கியுமே—பிறர்
சாலத்தை ஒற்றைக் கணுப்பிரம் பான
தடியில் தடுக்கியுமே—இந்த்ர
நீலத்தையும் சிவன் ஆலத்தையும் தன்
நிறத்தின் முடுக்கியுமே—கன்று
மாலைத் தரும் அந்தி மாலைப்பிறை வந்த
வேலைத்தடங்கல்செய் சோலைப்பிறங்கலின்—வஞ்சி

சந்தன கும்ப தனங்கள் இரண்டும்
ததும்பி அசைந்திடவே—அது

சந்ததம் மைந்தரை அஞ்சன்மின் என்றிடு
தன்மை இசைந்திடவே—இடை
நைந்தது வென்று மருங்குல் இரங்கி
நலிந்து பசைந்திடவே—வழி
வந்தன மென்று வளைந்து மிகும்பிற
வஞ்சமுறுங்குற வஞ்சிகள் அஞ்சிடும்—வஞ்சி
இம்மையி லேவெகு நன்மை வருகுது
ஈழம் வருகுதின்றே—எங்கள்
அம்மே யம்மே என்று கொம்மை வரிமுலை
யாரைப் பசப்பி நின்றே—மயல்
மம்மலை மாற்றிட அம்மலை மால்புகழ்
மந்திரம் சொல்லியே சுந்தரவல்லிமுன்—வஞ்சி.

*85. சரிது மஞ்சில் அழகிய குஞ்சி—சரற்கால மேகத்திலும் அழகிய கூந்தல். நுதல் மதி—பிறைச்சந்திரனாகிய நெற்றி. விஞ்சும்—(அழகினால்) மிக்க. அடிகள் செம்பஞ்சு மலர்—பாதங்கள் செம்பஞ்சூட்டிய மலர்போலும். காலை மலை—உதயகிரி. மாலைமலை—அத்தகிரி. தடுக்கி—தடுத்து. நிறத்தின் முடுக்கி—நிறத்தினால் ஓட்டி. அந்திமாலைப் பிறை வந்த வேலைத்தடங்கல் செய் சோலைப் பிறங்கலின்—அந்திக் காலத்துப் பிறை வந்த போது, தன் உயரத்தினால் அப்பிறை மேற்செல்லவிடாது தடுக்கின்ற சோலைமலைக்குரிய. மருங்குல்—இடையின் கீழ்ப்பகுதியாகிய இடுப்பு. பசைந்திட—கரைய. வழிவந்தனம் என்று—பரம்பரையாய்க் குறி சொல்லும் குடிப்பிறந்தோம் என்று. வஞ்சம் உறும் பிற குறவஞ்சிகள் என்க. ஈழம்—பொன். கொம்மை—பருமை. வரி—வரிக்கோலம். மயல் மம்மலை—காம மயக்கத்தை. மால் புகழாகிய மந்திரம் (கோயில்) என்க.*

*சுந்தரவல்லி குறத்தியிடம் அவள் வாழும் மலைவளம் கேட்டல்*
*அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

86. மந்தரமும் பஞ்சமமும் மருவியஏ
ழிசையார்கள் வர்ணம் கீதம்
சந்ததமும் பயில்நெடிய மறுகின்வந்த
குறவஞ்சி தனைக்கண் ணுற்றுச்

சுந்தரவல்லியும் நுடங்கும் துடியிடையாய்!
சுற்றமுடன் சுகமாய் வாழ்வது
எந்தமலை உந்தன்மலை அந்தமலை
வளமெனக்கிங் கியம்பென் றுளே.

*86. மந்தரம்—'ம' என்னும் நாலாவது சுவரம். பஞ்சமம்- 'ப' என்னும் ஐந்தாவது சுவரம். மந்தரம், பஞ்சமம் வீணைநரம்புகளாகவுமாம். ஏழிசை — குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பவை. வர்ணம், கீதம் என்பவை இசைப் பாடல் வகைகள். சந்ததமும்—எப்போதும். மறுகு—வீதி. நுடங்குதல்—அசைதல்.*

*குறத்தி தன் மலைவளம் கூறல்*

*சிந்து*

*இராகம்-புன்னுகவராளி.* *துருவ தாளம்.*

**87.** சேவலின்மேல் ஆசையுடன் பூவை எங்கும் கூவும்
தென்றல்வந்து தலையருவித் திவலைகளைத் தூவும்
காவலிலா வயிரம்விடும் கதிர்ககனம் தாவும்
கந்தமணல் நூபுரகங்கை யின்வழியே மேவும்
ஏவலின் நான்முகன் உதவும் எவ்வுயிரும் ஓங்கும்
எம்பெருமான் அடிவனசம் எழுபுவனம் தாங்கும்
மாவலிபால் வாமனமாய் மூவடிமண் வாங்கும்
மாலழகன் வளர்சோலை மலையெங்கள் மலையே.

*87. பூவை—நாகணவாய்ப் பறவை. தலையருவி என்றது இச்சோலைமலையிலுள்ளதோர் அருவியை. திவலை—நீர்த்துளி. காவல் இலா வயிரம்—பாதுகாக்கப்படாத மணிகள். கதிர்—ஒளி. ககனம்—ஆகாயம். கந்தம்—நறுமணம். ஏவலின்—(பகவானுடைய) கட்டளையால். அடிவனசம்—தாளாகிய தாமரை.*

**88.** பணஅரவின் மணிகோடி பானுவெனக் காயும்
பைம்புயலைப் பிடியெனவே தும்பிசென்று தோயும்
உணவுசெய் கோரங்கிழங்காய் உடுபதியைப் பன்றி
ஒளிர்பிறைக்கொம் பாலெடுக்க ஓடிவரும் துன்றி

குணமிகுதண்டெனும் வள்ளிக் கொடிதரும் கிழங்கும்
கூட்டியுண்டு குறவர்செயும் குறவைஎங்கும் முழங்கும்
மணமுறுசெந் தாமரையின் மலர்தசம்பூத் தொளிர்மை
வாரிதிபோல் அழகர்உறை மலையெங்கள் மலையே.

*88. பணம்-படம். பானு-சூரியன். காயும்-ஒளி விடும். தும்பி-(ஆண்)யானை. உடுபதி-சந்திரன். துன்றி—நெருங்கி. குறவை—மகளிர் கைகோத்து ஆடும் கூத்து. செந்தாமரையின் மலர் தசம் பூத்து ஒளிர் மைவாரிதி—செந்தாமரை மலர் போலும் பத்து உறுப்புக்களால் பொலிந்து விளங்கும் கருங் கடல். செந்தாமரை போலும் பத்து உறுப்புக்களாவன; திருக்கண்கள் (இரண்டு) திருக்கைத்தலம் (நான்கு) திருவடி (இரண்டு) திருவாய் (ஒன்று) திருநாபி (ஒன்று) என்பவைகளாம். தசம்—பத்து.*

89. மந்திகள்தே மாங்கனிகள் சிந்துதல்கண் டஞ்சும்
வானரங்கள் பாய்ந்துவர மரமுடுவல் கெஞ்சும்
முந்திரி மாதுளைகோதிப் பைங்கிளிகள் கொஞ்சும்
முறைமுறையே குயிலும்வகை மொழிகள் பொழில் [மிஞ்சும்
சந்திரன்நீள் கதிருணும் சகோர இனம் பலவும்
சக்கரவா கங்களுடன் சாதகமும் குலவும்
வந்துமணி முடியரசர் வணங்கிநிதி வாங்கும்
மாலழகன் வளர்சோலை மலையெங்கள் மலையே.

*89. மரமுடுவல்—மரநாய். சகோர இனம்—சகோரம் என்னும் பறவைகளின் கூட்டம், சாதகம்—மழைநீருண்டு வாழும் ஒரு பறவை.*

*இராகம்—பியாகு.* *தாளம்—ரூபகசாய்ப்பு.*

90. பார்புகழும் கத்தூரிப் பட்சியுடன் மானும்
பரிமளமாம் சவ்வாது புழுகுபிள்ளை தானும்
கார்புரைகான் மேதிகள் காண்டாமிருகம் சிங்கம்
கவரியின்மா வெண்கேழல் கலைபுலிமா தங்கம்

சார்புதங்கும் குகையெங்கும் தமருடனே வாழும்
தவமிகுபாக வதருக்குத் தலைவணங்கித் தாழும்
மார்பில்வளர் திருஒளிர்மின் சார்ங்கவில்கண் கருணை
மழைமுகிலாய் அழகர்உறை மலையெங்கள் மலையே.

*90. புழுகுபிள்ளை—புனுகுப்பூனை. புரை-உவமவுருபு. கான்மேதி-காட்டெருமை. வெண்கேழல்—வெள்ளைப்பன்றி, கலை—மான். மாதங்கம்—யானை.*

91. திணிநெடு நீலச்சிலையைச் சிந்துரமாய்ப் பாயும்
சீயமது பிளந்துபிளந் திடநகமும் தேயும்
பணிபதும ராகவொளி படுத்தீயாய் மோதிப்
பாயிந்து காந்த அப்பில் படிந்திடுங்கான் மேதி
துணிவொடுகோ மேதகத்தின் சுடர்மதுவென் றேங்கும்
தொல்கரடிக்குழு உறிஞ்சிச் சுவைகாணு தேங்கும்
மணிமவுலியொடு மகிமான் வலமுலையாய் வயங்கி
மணங்கமழ் மாலிருஞ்சோலை மலையெங்கள் மலையே!

*91. திணிநெடு நீலச் சிலையை—இறுகிய நீல நிறமான பாறையை. சிந்துரம்—யானை. நீல நிறமுள்ள பாறையை யானையென்று நினைத்து பாய்ந்த சிங்கம். அதனைப் பிளக்க முயன்று நகங்கள் தேயும்; பதுமராகக்கற்களின் ஒளியைத் தீ யென்று கருதிப் பாய்ந்து மோதிய காட்டெருமை. சந்திரகாந்தக் கற்களினின்று பெருகிய நீரில்ப்படிந்திடும்; ஒளிவிடும் கோமேதக மணியைத் தேனென்று கருதிக் குடிக்க முயன்ற கரடிக்கூட்டம் சுவைகாணுமையால் ஏங்கும் என்க. மவுலி—கிரீடம். மகிமான் —பூமிதேவி.*

92. நிதிதருசெஞ் சூதம்ஒரு நீள்சுனையின் ஊறும்
நித்தமங்கே வழலைகண்ட சித்தர்குழாம் ஏறும்
எதிர்அறு சூதாங்கிசமாய் இடிவிலக்கும் காந்தம்
இலக்குமிகாந்தன் நிறமாய் இருக்கும்இது பாந்தம்

கதிர்உறு பொன்நிமிளை கெந்திகடகம் அரிதாரம்
கார்முகிலும் விளைந்திடும் சக்கரக்கல்லடி யாரம்
மதிகதிர்பொன் புனையும்நெடு மரகதமேரு வெனும்
வடிவுள மாலலங்காரர் மலையெங்கள் மலையே!

*92. சூதம், சூதாங்கிசம், வழலை, காந்தம், நிமிளை, கெந்தி, கடகம், அரிதாரம், ஆரம் என்பவை மருந்துச் சரக்குகள். மதி, கதிர், பொன்புனையும்—மதியையும் கதிரவனையும் பொன்னையும் தரித்த; மதியையும் கதிரவனையும் பொன்னையும் தரித்தல் மேருவுக்கும் அழகருக்கும் பொதுத் தன்மைகள். மேருமலைக்கு உயர்வால் மதியையும் கதிரையும் தாங்கி, பொன்மயமாய் விளங்குதல். அழகருக்கு முறையே மதியையும் கதிரையும் ஒத்த சங்க சக்கரங்களை யேந்தி, திருமகளை மார்பில் தரித்து விளங்குதல்.*

93. தலையருவி கங்கைநதி தன்னில்அரும் புனிதம்
தரளமணி தேனருவி தன்னில் அரும் புனிதம்
சிலையிடைஎம் மெய்யன்உறை சேரிமருங் காயும்
தேடவரும் கருநெல்லி சேருமருங் காயும்
விலையுயர் சோலையில் தாரு விளைந்திருக்குமே நல்
வேர்பொரு சாரலினிடத்தும் விளைந்திருக்கும் ஏனல்
மலையருவி சலசலெனப் பலதலையும் வழியும்
வளம்கொளும் மாலிருஞ்சோலை மலைஎங்கள் மலையே!

*93. இம்மலையிலுள்ள தலையருவி கங்கை நதியினும் புனிதம் வாய்ந்தது; முத்துக்களையுடைய தேனருவி அத்தலையருவி போல மிக்க புனிதமுடையது என்பது பொருள். சிலையிடை—இம்மலையில். எம் மெய்யன் உறைசேரி மருங்காயும்—எங்கள் சத்திய சொரூபனாகிய கண்ணன் தங்கிய இடைச் சேரிக்கு அருகே இருந்தும். தேட அரும் கருநெல்லி சேரும் அருங்காயும்—அடைதற்கரிய கருநெல்லி மரத்தில் அருமையான காய்கள் பொருந்தும். சோலையில்*

*விலை உயர் தாரு விளைந்திருக்கும் என இயைக்க. வேர் என்றது நறுமணம் உள்ள வெட்டிவேர், இலாமிச்சை வேர்களை. பொரு—பொருந்திய. ஏனல்—செந்தினை.*

94. இந்திரனுர் செவிக்கமுதாய் எட்டெழுத்தை வார்க்கும்
இமையவர் யாரையும் பெருமாள்சமயமதில் ஈர்க்கும்
சந்திரசேகரன் தலையிற் சக்கரத்தைக் காட்டும்
தாமரைநீள் துளபமணி தாழ்வடங்கள் பூட்டும்
திந்திரிணி நிழலுகந்தார் தென்கலை நன்னுமம்
தேசிகர்சீடரும் அணியச் செய்யும் உயர்நேமம்
மந்திரமாம் எண்ணுன்கும் மறைமுடிவும் தேடும்
மலரடிகள் உடையழகர் மலைஎங்கள் மலையே!

*94. பெருமாள் சமயம் என்றது திருமால் சமயம். அழகரை வணங்குதற்குறிய காலம் என்னும் இருபொருளும் தொனிக்க நின்றது. திந்திரிணிநிழல் உகந்தார்—திருப்புளி நிழலை விரும்பித்தங்கிய சடகோபர்—நம்மாழ்வார். நேமம்—விதிமுறை. மந்திரமாம் எண்ணுன்கும்—பூ₄மவித்₃யை முதலான முப்பத்திரண்டு வித்₃யைகள். மறைமுடிவு—உபநிஷத்து.*

95. தரைசொல் சென்ருர்த்தன மலைக்குக் கிழக்குமலை அம்மே!
சத்யகிரி எனும் மலைக்கு மேற்குமலை அம்மே!
விரைகமழ் வேங்கடமலைக்குத் தெற்குமலை அம்மே!
விளங்கு குறுங்குடிமலைக்கு வடக்குமலை அம்மே!
திரைபணியும் திருவரங்கம் திருவெள்ளறை நகர்க்கும்
தெற்காகத் தழைத்தோங்கும் தற்காலம் நிகர்க்கும்
வரைகளெல்லாம் நிரைகளென வளைவுற ஓர்ஏருய்
வளர்திருமா லிருஞ்சோலை மலைஎங்கள் மலையே!

*95. சத்யகிரி — திருமெய்யமலை. திரை — காவிரியின் அலை. "தெண்ணீர்ப் பொன்னி திரைக்கையால் அடிவருடப் பள்ளி கொள்ளும் கருமணி" என்பது பெருமாள் திருமொழி.*

நிகர்க்கும்—ஒத்த. நிரைகள்—பசுக்கூட்டம். ஏறு—காளை—இடபம்.

**96.** திருமண் இடா மறையவர்கைச் செலபானம் பண்ணோம்
சிவனை உயர் தெய்வமென்று தெண்டனிட எண்ணோம்
அருமைபெறும் குருமொழி யாசரணையின்றி இழையோம்
ஆனைதுரத்திடினும் அரன் ஆலயத்தில் நுழையோம்
ஒருபிரகலாதனைப்போல் அரியை நம்பி உய்வோம்
உலகிலுள்ள குறவருக்கும் உபதேசம் செய்வோம்
மருமலிதண் துளவணியும் பரமசுவாமி யெனும்
மாலழகர் வளர்சோலை மலைக்குறவர் யாமே! *

*96. செலபானம் பண்ணோம்—நீர்குடியோம். குருமொழி ஆசரணை—ஆசாரியன் உபதேசித்த ஒழுக்கம்.*

*சுந்தரவல்லி கேட்கக் குறத்தி நாட்டுவளம் கூறுதல்*

*அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

**97.** குடைகுடையாய் அடுக்கும் இறால் குடக்கண்வழி பொழியருவிக்
குறிஞ்சிச் செந்தேன்
படமுடை வாசுகியெனவும் பகர்கவிகைக் காம்பெனவும்
பணிப்பர் கண்டாய்!
அடல்அனுமன் கருடன்முதல் அமரர்பெயர் புணர்பெருமை
அளவின் றென்றாள்
தொடை அளிகள் விளரிபயில் சுந்தரமின் நாட்டுவளம்
சொல்லென் றுளே.

*97. இறால்—தேன்கூடு—குடக்கண்—குடத்தில். தேன் கூட்டிலிருந்து ஒழுகும் தேன் ஒழுக்குக்குப் படமுடைய வாசுகிப் பாம்பும், குடைக்காம்பும் உவமை. அடல்—வலிமை. 'அனுமன் கருடன் முதல் அமரர் பெயர் புணர் பெருமை*

---

** "இந்தப் பாடல் தொடரின் சில பாடல்கள் காணப் படவில்லை" என்று மூலப்பிரதியில் ஒரு குறிப்பு உள்ளது.*

*அளவின்று' என்பது குறத்தி கூற்று. அனும தீர்த்தம், கருட தீர்த்தம் என்பவை அமைந்த நிலையும் இங்கே குறிப்பித்தபடி. தொடை—மாலை. அளி—வண்டு. விளரி—பண் வகையில் ஒன்று.*

*வேறு சந்தச் சிந்து*

98. பூமிவனிதைக் கிருகண் ஆகிப் பொலிந்துவிளங்கிப்
புகழ்பெறும்
பொன்னிச் சோழநாடும் வைகைதென்பொருனைப்
பாண்டிநாடுமே
ஆமிவ் விரண்டில் வலக்கணகும் அழகர்வழுதி நாடுதான்
அமிழ்துக்கினிய தமிழ்பன்மூன்றின் அரிய
செந்தமிழ் நாடுமாய்க்
காமித்துகந்து கோதைநாயகி கலைகள்பாடப் பிறந்ததும்
காரிமாறனும் கோதைதாதையும் கதித்தும்
குதித்தும் புகழ்ந்ததும்
நேமிக்கும் சமயாசாரியரும் நிதியம்போலும் உதயமாய்
நீற்றுச்சமயக் கலியைமாற்றி நீடுவாழ் திருநாடிதே.

*98. பூமிவனிதை — நிலமகள். பொன்னி — காவிரி. பொருநை — தாம்பிரவருணி. பொன்னிச் சோழநாடும். வைகையும். தாம்பிரவருணியும் பாயும் பாண்டி நாடும் நிலமகளுக்கு இருகண்களாகி விளங்கிப் புகழ் பெறும் என்க. அமிழ்துக்கு இனிய தமிழ் பன்மூன்று—தமிழ் மொழி வழங்கும் பதின் மூன்று நாடுகள். அவை,* தென்பாண்டி, குட்டம், குடம், கற்கா. வேண், பூழி. பன்றி, அருவா, அதன்வடக்கு.-நன்றுய சீதம், மலாடு, புனனுடு. செந்தமிழ் நாடு *என்பவைகளாம். கோதைநாயகி—ஆண்டாள். காரிமாறன் — நம்மாழ்வார். கோதைதாதை — பெரியாழ்வார். கதித்தல் — உரக்கத்துதித்தல். நேமிக்கும் — நியமிக்கும்— கட்டளை இடும். சமயாசாரியர் என்றது வைணவ சமயாசாரியர்களாகிய திருவாய் மொழிப்பிள்ளை முதலியவர்களை.*

99. கலியுகம்பிற ....................................... ...........
கதிரிற் புகழுற் றெதிரற் றொளிர்தென் மதுரைக்கூடற் பதியிலே
பலிதம் பெறுசெங்கோற் சீவல்லபபாண்டியன்மு(ன்)னம் ஈண்டியே
பாசுபதர் காணுதர் அமணர் பவுத்தர் காபிலர் பலருமாய்
வலியவாதம்புரிய லட்சவராகனைக் கிழிதூக்கியே
வந்துதர்சன மாக்குவீரெனும் வழுதிசொற்கவர் மயங்கவே
பொலிந்து பட்டர்பிரானும் வேதமெய்ப் பொருள் சொலிக் கிழியறுத்துநம்
பூவைவண்ணற்குத் திருப்பல்லாண்டு புகன்ற நாடிது பூவையே.

*99. பலிதம்—பயன். ஈண்டி—நெருங்கி. கிழி-முடிப்பு. தர்சனமாக்குவீர் — வைதிகதர்ஶனத்தை நிலைநாட்டுவீர் என்பது பாண்டியன் கூற்று. பட்டர்பிரான்-பெரியாழ்வார்.*

100. சோலைமலை தென்மோகூர் மதுரை தோட்டயன் தொழும் கோட்டியூர்
துய்யசீர்த்திருமெய்யம் அம்பருத்தூணி ராமன் புல்லாணியும்
மாலை அருளும் புதுவை நகரும் வண்காலூர் திருத் தண்காலூர்
மகிழ்திருக்குருகூர் தொலைவில்லி மங்கலநகர் பொங்கும்பால்
வேலையைநிகர் சீவரமங்கை வீறுதென்திருப்பேரையும்
மெய்வந்துறை சீவைகுந்தம் சுவைவிளைந்திடும் பொழிற் குளந்தையும்
நூலையார்திருப் புளிங்குடியுடன் நுவல் வரகுணமங்கையும்
நோக்கும் கோளூர் திருக்குறுங்குடி வாய்க்கும் வழுதிநாட்டும் ...

*100. தோட்டு அயன் — தாமரைப் பூவில் உறையும் பிரமன். மாலை அருளும் புதுவை நகர்—வடபெருங் கோயிலுடையானுக்கு ஆண்டாள் மாலைசூடிக்கொடுத்த ஸ்ரீ வில்லிபுத்தூர். வண் கால் ஊர்—நீர்வளம் மிக்க கால்கள் பாயும். பால்வேலை—பாற்கடல். குளந்தை—பெருங்குளம். இப்பாடலில் பாண்டிய நாட்டுள்ள திருமால் திருப்பதி பதினெட்டும் பேசப்பட்டமை காணலாம்.*

**101. தாதுக் கனியி னிருந்து சிறந்த தங்கம் கொடுக்கும்**
**தருக்களும்**
**சந்தக்களபம் சிந்தக்களபம் சருக்கும் அரசர்**
**தெருக்களும்**
**போதக்கமலம் கழுநீர் குவளை புட்பிக்கும்பல**
**பொய்கையும்**
**புளினம் கடந்து பழனங்களின்முப் பூவுவிளைக்கும்**
**வைகையும்**
**சீதப்பாரி சாதம் சூதம் செறிந்த பாணர் இருக்கையும்**
**சேடன்விடத்தை அமுதமாக்கிடச் செல்லும்**
**வேர்க்கனி வருக்கையும்**
**மோதிக் கமுகின் வளர்செங் கரும்பின்முத்தம்**
**குவியும் முற்றமும்**
**முழுதும் எழுதி மொழியும் அழகு மூடும் வழுதி நாடிதே!**

*101. தாதுக்கனி—தேன்போலும் இனிய கனி. சந்தக் களபம்—கலவைச் சந்தனம். களபம்—யானை. சருக்குதல்—வழுக்குதல். இங்கே "கோதை மடவார்தம் கொங்கை மிசைத் திமிர்ந்த சீதக்களபச் செழுஞ்சேற்றால்—வீதி வாய் மானக்கரி வழுக்கும் மாவிந்தம்" என்னும் நள வெண்பாப்பாடல் நோக்கத்தகும். போத—மிகவும். புட்பிக்கும்—பூக்கும். புளினம்—மணற்குன்று. பழனம்—வயல். முப்பூ—முப்போகம். பாணர் இருக்கை—பாணர் வீதி. வேர்க்கனிவருக்கை—வேரில் (பூமிக்குள்) கனிகளையுடைய பலா. ஒன்றோடொன்று மோதுதலால் கமுகினின்றும் கரும்பினின்றும் உதிர்ந்த முத்தம் குவியும் முற்றம் என்க.*

99. கலியுகம்பிற ........................................ ...........
கதிரிற் புகழுற் றெதிரற் றொளிர்தென் மதுரைக்கூடற்
பதியிலே
பலிதம் பெறுசெங்கோற் சீவல்லபபாண்டியன்மு(ன்)னம்
ஈண்டியே
பாசுபதர் காணுதர் அமணர் பவுத்தர் காபிலர் பலருமாய்
வலியவாதம்புரிய லட்சவராகனைக் கிழிதூக்கியே
வந்துதர்சன மாக்குவீரெனும் வழுதிசொற்கவர்
மயங்கவே
பொலிந்து பட்டர்பிரானும் வேதமெய்ப் பொருள்
சொலிக் கிழியறுத்துநம்
பூவைவண்ணற்குத் திருப்பல்லாண்டு புகன்ற
நாடிது பூவையே.

*99. பலிதம்—பயன். ஈண்டி—நெருங்கி. கிழி-முடிப்பு. தர்சனமாக்குவீர் — வைதிகதர்ஶனத்தை நிலைநாட்டுவீர் என்பது பாண்டியன் கூற்று. பட்டர்பிரான்-பெரியாழ்வார்.*

100. சோலைமலை தென்மோகூர் மதுரை
தோட்டயன் தொழும் கோட்டியூர்
துய்யசீர்த்திருமெய்யம் அம்பருத்தூணி
ராமன் புல்லாணியும்
மாலை அருளும் புதுவை நகரும் வண்காலூர்
திருத் தண்காலூர்
மகிழ்திருக்குருகூர் தொலைவில்லி மங்கலநகர்
பொங்கும்பால்
வேலைநிகர் சீவரமங்கை வீறுதென் திருப்பேரையும்
மெய்வந்துறை சீவைகுந்தம் சுவைவிளைந்திடும்
பொழிற் குளந்தையும்
நூலையார் திருப் புளிங்குடியுடன் நுவல்
வரகுணமங்கையும்
நோக்கும் கோளூர் திருக்குறுங்குடி வாய்க்கும்
வழுதிநாடம் மே!

*100.* தோட்டு அயன் — தாமரைப் பூவில் உறையும் பிரமன். மாலே அருளும் புதுவை நகர்—வடபெருங் கோயிலுடையானுக்கு ஆண்டாள் மாலேசூடிக்கொடுத்த ஸ்ரீ வில்லிபுத்தூர். வண் கால் ஊர்—நீர்வளம் மிக்க கால்கள் பாயும். பால்வேலே—பாற்கடல். குளந்தை—பெருங்குளம். இப்பாடலில் பாண்டிய நாட்டுள்ள திருமால் திருப்பதி பதினெட்டும் பேசப்பட்டமை காணலாம்.

**101.** **தாதுக் கனியி னிருந்து சிறந்த தங்கம் கொடுக்கும்**
**தருக்களும்**
**சந்தக்களபம் சிந்தக்களபம் சருக்கும் அரசர்**
**தெருக்களும்**
**போதக்கமலம் கழுநீர் குவளே புட்பிக்கும்பல**
**பொய்கையும்**
**புளினம் கடந்து பழனங்களின்முப் பூவுவிளேக்கும்**
**வைகையும்**
**சீதப்பாரி சாதம் சூதம் செறிந்த பாணர் இருக்கையும்**
**சேடன்விடத்தை அமுதமாக்கிடச் செல்லும்**
**வேர்க்கனி வருக்கையும்**
**மோதிக் கமுகின் வளர்செங் கரும்பின்முத்தம்**
**குவியும் முற்றமும்**
**முழுதும் எழுதி மொழியும் அழகு மூடும் வழுதி நாடிதே!**

*101.* தாதுக்கனி—தேன்போலும் இனிய கனி. சந்தக் களபம்—கலவைச் சந்தனம். களபம்—யானே. சருக்குதல்—வழுக்குதல். இங்கே "கோதை மடவார்தம் கொங்கை மிசைத் திமிர்ந்த சீதக்களபச் செழுஞ்சேற்றால்—வீதி வாய் மானக்கரி வழுக்கும் மாவிந்தம்" என்னும் நள வெண்பாப்பாடல் நோக்கத்தகும். போத—மிகவும். புட்பிக்கும்—பூக்கும். புளினம்—மணற்குன்று. பழனம்—வயல். முப்பூ—முப்போகம். பாணர் இருக்கை—பாணர் வீதி. வேர்க்கனிவருக்கை—வேரில் ( பூமிக்குள் ) கனிகளேயுடைய பலா. ஒன்றோடொன்று மோதுதலால் கமுகினின்றும் கரும்பி னின்றும் உதிர்ந்த முத்தம் குவியும் முற்றம் என்க.

102. முக்காலம் சொலும் தக்கோர் என்றிடமுக்கோல்
கைக்கொளும் மிக்கோரும்
முத்திவேள்வி செய்து எத்திவுந்தொழும் முற்ரு
நான்மறை கற்ருரும்
எக்காலும் புகழ் மிக்காம் எங்கள் இயற்பா
ஓதி வியப்பாரும்
இப்பால் நாலடி முப்பால் நாலு கவிப்பா
ஐந்தும் இசைப்பாரும்
மக்காசீனம் மலாக்கா ஊர்திறை வைப்பாரும்
கைகுவிப்பாரும்
மற்ருரும் சரியற்ருர் காற்பதுமத்தாம் ஓர்
வருணத்தாரும்
மிக்காம் ஈரிரு திக்காரும் ஒருமித்தே வாழ்ந்திடும்
இத்தேயம்
வெற்பாலும் மிகு பொற்பாகும் மதன் விற்போலும்
நுதற் பொற்பாவாய் !

*102. முக்காலம் என்றது இறந்தகால நிகழ்கால எதிர்கால நிகழ்ச்சிகளை. முக்கோல் கைக்கொளும் மிக்கோர்—திரிதண்ட சன்யாசிகள். முத்தீ—ஆகவனீயம், காருகபத்தியம், தக்ஷிணக்கினி என்பவை. தீவு—த்வீபம். எத்தீவும் தொழும் — எத்வீபத்திலுள்ளோராலும் வணங்கப்படுகிற. இயற்பா — நாலாயிர திவ்யப் பிரபந்தத்தின் ஒரு பகுதி. நாலடி—நாலடியார். முப்பால்—அறம், பொருள், இன்பம் என்று மூன்று பகுதிகளையுடைய திருக்குறள். நாலுகவி—ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்பவை; ஐந்துபா—வெண்பா, அகவல், கலி, வஞ்சி, மருட்பா என்பவை; 'ஐந்து பாவுடை நால்வகைக் கவி' என்ருர் வரந்தருவார். மக்கா, சீனம், மலாக்கா என்பவை அயல்நாடுகள். ஊர் திறை—மிக்க திறைப் பொருள்களை; மக்கா முதலிய பிற நாடுகளிலிருந்து மிக்க திறைப் பொருள்களைக் கொண்டு வந்து கொடுக்கும் அரசரும் என்றவாறு; இது மக்கா*

*முதலிய பிறநாடுகளிற்சென்று வணிகம்செய்து பெரும் பொருள்கொண்டுவரும் வைசியரையும் குறிக்கொள்ள நின்றது. மற்று ஆரும் சரிஅற்றூர் காற்பதுமத்து ஆம் ஓர் வருணத்தார்—பிறர் எவரும் ஒப்பாரின்றி விளங்கும் திருமாலின் திருவடிகளினின்று தோன்றிய சூத்திரரும். ஒருமித்து — ஒருமைப்பாட்டுடன். மதனவில் — கரும்பு. பாவாய்! முக்கோற் பகவரும். நால்வகை வருணத்தாரும், புலவர்களும். எட்டுத்திசையிலுள்ள நாடுகளிலிருந்து வந்த மக்களும், ஒருமைப்பாட்டுடன் வாழும் இப்பாண்டிநாடு, மலைகளாலும் மிக்க அழகுடையதாகும் என்றவாறு.*

*பள்ளுச் சந்தச் சிந்து*

**103.** **மூலமென்று கைம்மலைமுன் ஓலமிட்டதும்—மாயன்**
**முந்தியே மீனவதாரம் வந்து தொட்டதும்**
**வேலைகடைந்திட விண்ணோர் வேண்டிவந்ததும்—காள**
**மேகமென்று வந்தமுத பாகம் தந்ததும்**
**சிலராக வன்புரிந்த சேது சேர்ந்ததும்—எங்கள்**
**சீதரனூர் கல்கியுற்பவம் செய்ய நேர்ந்ததும்**
**ஞாலமிசை காலனுக்காய் நங்கள் குன்றின்மேல்—நின்று**
**நாரணன் அழகன் ஆள்தென் னாட்டிலே அம்மே !**

*103. முன் கைம்மலை மூலம் என்று ஓலமிட்டதும் என இயைக்க. கைம்மலை—கையையுடைய மலைபோன்ற யானை — கசேந்திரன். கஜேந்திரனுக்கு முதலையால் உண்டான துன்பம் நீங்கிய தலமான ஆனைமலையினையும். மத்ஸ்யாவதாரம் நிகழ்ந்த வைகையாற்றினையும். திருப்பாற் கடலைக் கடையும் பொருட்டுத் தேவர்கள் கூடிய திருக் கோட்டியூரையும், தேவர்க்கு அமுதம் வழங்க வந்த காளமேகப்பெருமாள் தங்கிய திருமோகூரையும், இராம பிரான் அமைத்த திருவணையினையும். திருமால் கற்கியாய்த் தோன்றுதற்குரிய தலத்தையும் தன்னுட்கொண்ட பெருமையுடையது சுந்தரராஜப்பெருமான் ஆட்சியில்*

*அடங்கிய இப்பாண்டி நாடு என்றவாறு. காலன்—தரும தேவதை. "நங்கள் குன்று" என்பது சோலைமலையின் பெயர்களுள் ஒன்று. "நங்கள் குன்றம்" [திருவாய்10.7-4] என்றார் நம்மாழ்வாரும்.*

**104.** **பத்துநாளைக் கோர்மழையாய் மெத்தவும் பெய்யும்—சம்**
**பாவும் அங்கே ஓதுமுறை யேபலன் செய்யும்**
**வித்துருமம் கோடிகுருக் கத்திமே லேறும்—பெரு**
**வெள்ளமெனத் தேன்கழுநீர்க் கொள்ளையின் ஊறும்**
**கொத்துறுமாங் கனிவிழத்தேன் கூடுகிழிந்தே—வாசக்**
**குடக்கனிகள் பீறிமது ஓடும் இழிந்தே**
**முத்து முக்கலத்தின் ஓர் முதற்றிரையுள்ளோன்—ஆதி**
**மூலம்எம் அழகன் ஆளும் ஞாலமீதம்மே !**

*104. மெத்த—மிக. சம்பா—நெல்வகைகளில் ஒன்று. சம்பா பலன் செய்யும் என்க. பலன் செய்தல்—பயன் தருதல். ஓதும் முறையால் பலன் :செய்தலாவது ஆண்டொன்றுக்கு மூன்றுமுறை விளைதல். கோடி வித்துருமம் என மாற்றுக. வித்துருமம்—பவளம். குருக்கத்தி—ஒரு வகை மரம். கழுநீர்—ஒருவகைப்பூ. கொள்ளை—மிகுதி. கழுநீர்க்கொள்ளையில் தேன் பெருவெள்ளமென ஊறும் என இயைக்க. குடக்கனி—பலாப்பழம். பீறி—பிளவுபட்டு. மது — தேன். மாங்கனிகள் உதிர்வதால் தேன்கூடு சிதைந்து பலாக்கனிகீறிப் பெருகிய தேன் வெள்ளமாக ஓடும் என்றவாறு. முக்கலமுத்தின் ஓர் முதல்திரை உள்ளோன் என்க. மூன்றுகலம் முத்தினால் அமைந்த ஒரு சிறந்த திரையுடையான் என்பது பொருள். முத்துத்திரையுடையவனும் ஆதிமூலமும் ஆன அழகன் ஆளும் நிலமிசை மாதம் மூன்று மழை பொழியும்; சம்பா ஆண்டுக்கு மூன்றுமுறை விளையும்; பவளக்கொடிகள் குருக்கத்திமேல் படரும்; மலர்களினின்றும். தேனடைகளினின்றும். கனிகளினின்றும் தேன் வெள்ளமாகப் பெருகும் என்றவாறு.*

105. சாரும்வரம் பேறியுறங் காமைமுதுகில் — சூல்வெண்
சங்குறங்க நண்டுறங்கும் சங்கின்முதுகில்
நீருறை செந்தாமரையின் மாமகளுடன் — வண்டு
நின்றுறங்க ஓதிமங்கள் சென்றுறங்கிடும்
காருறைபூங் காவினிடை சாதியங்காயோ — டேலக்
காய்களும் தித்திக்கும்பல காயும் உறங்கும்
சீருறையும் தாரான் அலங்காரன் அழகன் — வாழும்
தெள்ளுதமிழ்த் தொள்ளங்காது கள்ளர்நாடம்மே !

*105. சாரும்—அடுத்துள்ள. வரம்பு—வரப்பு. சூல் வெண்சங்கு—கருக்கொண்ட வெள்ளிய சங்கு. நண்டு சங்கின் முதுகில் உறங்கும் என்க. ஓதிமம்—அன்னம். சாதியங்காய்—சாதிக்காய். உறங்கும்—தூங்கும். தார்—மாலை. தொள்ளங்காது—தொள்ளைக்காது. நாட்டு—நாட்டின்கண். அழகர் வாழும் கள்ளர் நாட்டின்கண் வயல் வரப்பில் ஆமை உறங்க அதன் முதுகில் சங்கு உறங்கச் சங்கின் முதுகில் நண்டு உறங்கும்; நீரிலுள்ள செந்தாமரைப்பூவில் திருமகளுடன் வண்டுகளும் அன்னங்களும் உறங்கும்; சோலைகளில் சாதிக்காயும், ஏலக்காயும் இனிய காய்கள் பலவும் தூங்கும் என நீர்வளமும் நிலவளமும் பொழில்வளமும் கூறியவாறு.*

106. சீரமரும் தாரணிமந் தாரமலரின் — புதுத்
தேன்குதிக்கும் நான்குதிக்கும் செல்வார் மீதெல்லாம்
வேரமரும் தெங்கிளநீர் வீழஅடித்தே — வாளை
மீன்குதிக்கத் தான்குதிக்கும் மேவுகவிகள்
வாரமரும் கொங்கை மடவார்விழிகள்போல் — பெடை
மான்குதிக்க வான்குதிக்கும் மன்னுகலைமான்
காரமரும் மேனிஅலங்காரன் அழகன் — வைகைக்
கனதமிழ் நாட்டின் வளங்கள் காண்பாயேயம்மே !

*106. சீர் அமரும் தாரணி மந்தாரமலரின்—பெருமை பொருந்திய நிலமாகிய தேவர்நாட்டு ஐந்தருக்களுள் ஒன்*

ருன மந்தார விருக்ஷத்தின் பூவினின்று. மந்தார மலர் களினின்று துளிக்கும் தேன் நான்கு பக்கமும் செல்வோர் மேலெல்லாம் தெறிக்கும்; தெங்கு—தென்னை. கவிகள்—குரங்குகள். தடாகத்தினின்று வாளைமீன் கரையிலுள்ள தென்னையில் இளநீர் சிந்தத் தாக்கிக் குதிக்க, அதுகண்டு அஞ்சிய குரங்குகள் குதிக்கும்; மகளிர் கண்போலப் பெடைமான் தாவக் கலைமான் வான்மிசைத் துள்ளும்; இத்தகைய அழகர் நாட்டு வளங்களைக் காண்பாயாக என்றவாறு.

107. கோவமென்பது புணரிக் கொள்ளைநீரையே—மற்றும்
கொல்லென மொழிவதையம் கூர்கவியிலே
பாவமென்பது கணிதர் பன்னுநூலிலே—பின்னும்
பங்கமென் பதுவும் வைகைபாய் வயலிலே
தாவமென் பதுவிரகத் தையல் மார்பிலே—சிலர்
சாவியென்பது திறவுகோலையே மகா
தேவ தேவ தேவன் வாசுதேவன் அழகன்—பாதம்
தீண்டுபுகழ் பூண்டதமிழ்ப் பாண்டி நாடம்மே!

*107. கோவம்–பிரளயநீர். சினம்; புணரிக்கொள்ளைநீர்–பிரளயகாலக் கடல்வெள்ளம். கொல்—கொலைத்தொழில். ஐயம்; பாவம்—சோதிடர் வழங்கும் ப₄ாவம் எனும் சொல், தீவினை; பங்கம்–சேறு. அவமானம்(ப₄ங்க₃ம்); தாவம்–விரகதாபம். வெம்மை; சாவி—திறவுகோல், பதர். மகாதேவதேவ தேவன்–பெருந்தேவர்க்கெல்லாம் தலைவனான தேவன். அழகன் தமிழ்ப்பாண்டி நாட்டில் பிரளயகாலக்கடல்நீரைக்கோவ மென்பதன்றிச் சினம் விளைவதில்லை; நூல் வழக்கில் ஐயவாய்ப் பாட்டில்வரும் கொல் என்பதன்றிக் கொலைத்தொழில் இல்லை; சோதிட நூலில் புத்திரப₄ாவம் களத்திரப₄ாவம் (புத்திரருண்மை, களத்திரமுண்மை) என வழங்கும் ப₄ாவம் என்பதன்றித் தீவினை (பாபம்) இல்லை; வயல்களில் சேறேயன்றி அவமானம் (ப₄ங்க₃ம்)யார்க்கும் இல்லை; காமுற்ற மகளிர்பால்*

*விரகதாபமன்றி மற்றவர்பால் வெம்மை நோயில்லை; பெட்டகத்துக்குரிய சாவியையன்றி விளைவில் சாவி என்பதில்லை என அழகர் நாட்டு மக்களின் நன்னெறி மேம்பாடும் விளைவுமிகுதியும் கூறியவாறு. "வெஞ்சிலையே கோடுவன மென்குழலே சோருவன. அம்சிலம்பே வாய்விட்டரற்றுவன—கஞ்சம் கலங்குவன" என்னும் நளவெண்பாப்பாடலும் இங்கு நோக்கத்தகும்.*

*குறத்தி தலவளம் கூறுதல்*

*அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

**108.** புலத்து வழியே மனத்துணர்வு போகா தொடுக்கிப்
புகலறுநன்
னலத்து முனிவர் நினைத்திருக்கும் நளினப் பதத்து
நாரணன்றன்
வலத்து மருமம் தனைமருவ வருசுந் தரவல் லியும்அழகர்
தலத்துவளத்தை உரைத்தி யென்று சாற்றக்
குறத்தி சாற்றுவளே.

*108. புலத்துவழி—சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் (ஶப்த₃ம், ஸ்பர்ஶம் முதலியன) என்பவற்றின் வழி. மருமம்—மார்பு.*

*தரு*

*இராகம்—கும்பகாம்போதி.* *தாளம்—ரூபகம்.*

*பல்லவி*

**109.** அழகர்கோவில் மகிமை கேள்அம்மே!—அவர்க்கு
அந்தரங்கம் உள்ள சுந்தரவல்லியே—அழகர்

*அனுபல்லவி*

நிழல்களாக முகில்கள் உறங்கும்
நீலநிறத்துங்கச் சோலைமலைச்சங்கத்து—அழகர்

*சரணங்கள்*

ஆதிமன்வந்தரத்தில் இந்திரன்—தருமவாசகம்
ஆன இட மலையதாகினன்
நீதித்தென்றிசைத் தருமராசனும்
நினைக்க முன்னின்று வினைக்குறும்புதீர்—அழகர்

ஆடி யத்தம் திருக்கொடியேறிப்—பிரம்மோற்சவமும்
ஐப்பசிச் சுக்கில த்வாதசித்திதியில்—நூபுரகங்கை
ஆடு திருநாள் மீன உத்தரத்
தாண்டாள் திருக்கல்யாணமும் செயும்—அழகர்

மேடபூரணை மதுரைவைகையில்—கோடைத்திருநாள்
விளக்கியே வைகாசி வசந்தம்—திருப்பவித்திரம்
நாடி நவராத்திரியும் கைசிகம்
நவில் அத்யயனம் செவியில் பருகும்—அழகர்

மகுடபதிகள் திசைதொறும் இருந்தே—வந்துமங்கள
வார ஸ்நானம் நேரத்துடன் செய்தே
நிகரிலாத உபய மயுதம்
நியதம் பொன்கொடுசெயும் தெப்போற்சவத்து—[அழகர்

மேருமலைபோல் நாலுகோபுரம்—சோமச்சந்த
விமானம் பசும்பொன் வேய்ந்து திரிசிகை
சாரும் பதினெண் படியும் வாசலில்
சத்தியம் காணும் நித்தியோற்சவத்து—அழகர்

நகரிசூழ்மதில் நாலு வாசலும்—நாலுமன்னவர்
நண்ணிய படையொடு காவலும்
சிகரியான பொற்றேரும் வெள்ளிபொன்
செய்த மண்டபம் எய்தியமலை—அழகர்

கும்பகாம்போதி ராகம் பாடியே—ரூபகதாளம்
கொட்டியே சுதி கூடியாடியே
நம்பி கிருஷ்ணையங் கார் குறவஞ்சி
நாடகத்தினைச் சூடியவடி—அழகர்

109. துங்கம்—உயர்வு. சோலைமலை அழகர். சங்கத் தழகர் என்க. ஆதிமன்வந்தரத்தில்—முதல் மனுவின் காலத் தில். இந்திரன் தருமவாசகமான இடமலை ஆயினன்-இந்திரன் தருமத்தைச் சொல்லும் வ்ருஷாத்ரி என்னும் இம்மலையாக ஆனான். இடமலை-வ்ருஷாத்ரி(த ர்மமலை). நீதிக் தருமராசன். தென்திசைக்குஅதிபனான தருமராசன் என்க. வினைக்குறும்பு-வினையாகிய பகை. ஆண்டுதோறும் ஆடி மாதத்து ஹஸ்த நட்சத்திரம் கூடிய நாளில் கொடியேறிப் பிரம்மோற்சவ மும். ஐப்பசி சுக்கில த்வாதசியன்று நூபுரகங்கையில் திருமஞ்சனம் கொண்டருளும் திருவிழாவும். பங்குனி மாதம் உத்திர நட்சத்திரங்கூடிய நாளில் ஆண்டாள் திருக்கல்யாண உத்ஸவமும் கண்டருளும் அழகர் என்க. மேடபூரணை—சித்ராபௌர்ணமி. சித்ராபௌர்ணமியன்று மதுரை வைகையில் கோடைத் திருவிழாவும். வைகாசி மாதம் வசந்தோத்ஸவமும். (ஆவணி மாதம்) திருப்பவித்ரோத்ஸவ மும். (புரட்டாசி மாதம்) நவராத்திரி உத்ஸவமும். (கார்த்திகை மாதம்) கைசிகமும் விளக்கி. (மார்கழி மாதம்) திரு அத்யயன உத்ஸவத்து ஆழ்வார்கள் பாசுரமும் அரையர் சேவையும் திருச்செவிசாத்தும் அழகர் என்றவாறு. மகுடபதிகள்—அரசர். திசைதொறும் இருந்து மகுடபதி கள் வந்து நேரத்துடன் மங்களவாரஸ்நானம் செய்து நியதம் அயுதம் பொன்கொடு உபயம் செய்யும் நிகரிலாத தெப்போத்ஸவத்தழகர். உபயம்—கோயில்களில் செய்யும் அறம். அயுதம்—பதினாயிரம். நியதம்—எப்பொழுதும். அயுதம் பொன்கொடு நியதம் செய்யும் நிகரிலாத உபயம் என இயைக்க. மேருமலை போலும் நான்கு கோபுரமும், சோமச்சந்தவிமானமும். பசும்பொன் வேய்ந்து திரிசிகை சாரும் பதினெட்டுப்படியும் (பெற்றுப்) பதினெட்டாம்படி வாசலில் சத்தியம் காணும் நித்தியோத்ஸவத்தினையும் உடைய அழகர் என்றவாறு. திரிசிகை—சூலம். சிகரி—மலை. நாலு வாசலும் மன்னவர் காவலும் தேரும் மண்டப

*மும் எய்திய அழகர் என்றவாறு. சுதி — இசை. கிருஷ்ணையங்கார்-இக்குறவஞ்சி நாடக நூலை இயற்றியவர்.*

*ஆறடி தரவு கொச்சகக் கலிப்பா*

**110.** வடம் அரசு கூவிளமாய் வண்புத்ர தீபகமாய்த்
தடமருவு சதுருகங்கள் தனிலும்ஒரு தருவுண்டு
புடவிமிசை உறங்காத புளியுண்டு புதிதாகச்
சடமிறுகி நரைதிரையைத் தள்ளுமொரு தருவுண்டு
குடமுலையர் குடைந்திடும் ஐங்குளமுண்டு குடதிசையில்
மடமடெனும் கனகமணி மஞ்சீர நதியுண்டே.

*110. தடம்—பெருமை. சதுருகங்கள்—நான்கு யுகங்கள். இம்மலையில் யுகம் நான்கில் ஒவ்வொரு யுகத்திலும் ஆல், அரசு, கூவிளம், புத்ரதீபகம், எனும் பெயருடன் ஒவ்வொரு தலவிருக்ஷம் உண்டு. மேலும், உறங்காத புளியும் உண்டு; உடலைத் திண்ணிதாக்கி நரை திரைகளைப் போக்கும் ஒரு மரமும் உண்டு; மகளிர் நீராடும் ஐங்குளம் உண்டு; மேலைத்திசையில் பொன்னும் மணியும் கொண்டு மடமட என ஒழுகும் சிலம்பாறும் உண்டு என்க. கூவிளம்—வில்வம். புத்ரதீபகம்—ஒருவகை மரம். புடவி—பூமி. சடம்—உடல். குடதிசை—மேற்றிசை. மஞ்சீரநதி என்பது சிலம்பாற்றின் பெயர்களுள் ஒன்று.*

*சுந்தரவல்லி கேட்கக் குறத்தி அழகர் கிளைவளம் கூறுதல்*
*அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

**111.** சுளைவளத்தை ஊழ்பலவின் கனிகடொறும்
சொரிபிரசம் சூழ்ந்தங் கேனல்
முளைவளத்தைக் கருமைசெம்மை பொன்னிறமாய்ப்
பளபளத்து முதிர்ந்து நாளும்
விளைவளத்தை முனம்உரைத்த புனமயிலே!
அழகரென்ற வேத மூர்த்தி
கிளைவளத்தை மொழியெனச்சொல் தலைவிபக்கல்
வருகுறத்தி கிளத்து வாளே.

*111. ஊழ்—பதனழிந்த. பிரசம்—தேன். ஏனல்—தினை. முளை — முளைக்கின்ற. புனமயிலே! — புனமயில் போன்றவளே! "புனமயிலே! அழகர் என்ற வேத மூர்த்தி கிளைவளத்தை மொழி" என்பது குறத்தியை நோக்கிச் சுந்தரவல்லி கூறியது. தலைவி என்றது சுந்தர வல்லியை. கிளத்துதல்—சொல்லுதல்.*

*தரு*

*இராகம்—கமாசு.* *தாளம்—ஆதி.*

*பல்லவி*

**112.** ராசன்குலம் உயர்ந்திடும்—பிரமன் உமை
நாதன்புரு கூதன் துதி சுந்தர—ராசன்

*அநுபல்லவி*

தேசம்பெருகும் பாண்டிய தேசந்தனில் முன்னாள்
திருமாலிருஞ் சோலை மலையாளும் சுந்தர—ராசன்

*சரணங்கள்*

மூலப்ரகிருதியென்ற மாயை வலத்துமார்பன்—என்றும்
முளரித் திருமகளும் வளரத்திருமார்பினன்—ஊழிக்
காலப்பரிதி மங்கும் கோலத்திகிரி சங்கும்
கமலம் பொருந்துஞ் செங்கை விமலன் எங்கள்
சுந்தர—ராசன்

பரமபதத்திறைவன் பரமசுவாமியெனக் கூறும்பேரும்
பதிகளெவற்றினும்சீ பதிமுக்கியமென்றிடும் தன்
பிரமன்மதன் சுதனும் பரமன் புரந்திரனும் [ஊரும்
பேரனைரகு வீரனெனும் சுந்தர—ராசன்

தாய் தந்தையும் குருவும் தேவும் கடவுளர்க்குத்
தானாய்த் தனக்கத்தனையுந் தானாய் நினைக்கச்
சமானமும் இல்லானாய்
ஆயும் மறையந்தங்கள் வாயும் கதறியின்னம்
அடங்காத பரமருள் நுடங்காத வரமருள் சுந்தர-ராசன்

வேகம் தரும்கமாசு ராகம் கருணையுறப்—பாடிக்கூடி
மேகந்தனிலே யாதி தாளம் சபையடக்கி—ஆடிநாடி
போகங்களுடன் மன்னர் யோகம்கிருபைசெய்பரி
பூரணனை மூல காரணனை சுந்தர—ராசன்

*112. புருகூதன்—இந்திரன். தேசு அம் பெருகும்—விளக்கமும் அழகும் மிக்க. "தேசமோ திருவேங்கடத்தானுக்கு" [திருவாய் 3.3-4] என்றவிடத்திற்போலே 'தேசம்' தனிச்சொல்லாய், தேஜஸ்ஸாகிற ஒளியைக் குறிக்கிறதாகவுமாம். மூலப்பிரகிருதி என்ற மாயை தங்கிய வலமார்பினையுடையான் என்க. வலமார்பிலுள்ள ஸ்ரீ வத்ஸமெனும் மறு மூலப்ரக்ருதிவடிவானது என்பது நூல் வழக்கு. என்றும் மூளரித்திருமகளும் வளர் அத் திருமார்பினன்-எக்காலத்தும் அலர்மேல்மங்கை தங்கிய அவ்வலமார்பினையுடையான். உம்மை சிறப்புரை நின்றது; இங்கு, "வடிவாய் நின்வல மார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டு" "அகல கில்லேன் இறையும் என்று அலர்மேல் மங்கை உறை மார்பா" என்னும் அருளிச்செயற்பகுதி நோக்கத்தகும். ஊழிக்காலப் பரிதி மங்கும் கோலத்திகிரியும் சங்கும் செங்கைக் கமலம் பொருந்தும் விமலன் என்க. திகிரியும், சங்கும் கமலமும் பொருந்தும் செங்கை என்றுமாம். பரமசுவாமி என்பது அழகர் திருநாமத்துள் ஒன்று. சீபதி என்பது அழகர் தலப்பெயருள் ஒன்று. பிரமனும், மதனும் சுதனை சுந்தரராசன், பரமனும் புரந்தரனும் பேரனை சுந்தரராசன் என்க. மதன்—மன்மதன். சுதன்—மகன். பரமன்—சிவன், புரந்தரன்—இந்திரன். தேவும்—தெய்வமும். ஆய்தல்—ஆராய்தல். மறையந்தம்-வேதாந்தம். பரமருள்—உயர்ந்த தேவருள். நுடங்காத—கெடாத. வரமருள்—வரம் கொடுக்கும். யோகம்—அடையும் நற்பயன். பரிபூரணன்—எல்லாம் நிறைந்தவன்.*

*சுந்தரவல்லி குறத்தியை வினவுதல்*

*அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

**113.** துறவஞ்சிப் பரியுமிளம் பருவமும்விற்
புருவமும்கட் சுரும்பும் துய்ய
நறவுஞ்சிக் கெனக்குதிசெங் குமுதமும்சொல்
லமுதமும்வாள் நகையும் கொண்டோர்

புறவம்சித் திரமிணைசொல் சுந்தரவல்லியும்
கிளையைப் புகன்ற கானக்
குறவஞ்சிக் குயர்ந்தவிலைக் கூறைவந்த
காரணமென் கூறென் றுளே.

*113. துறவுஅஞ்சிப் பரியும் இளம் பருவமும் என்க. பரிதல்—ஓடுதல். விற்புருவம்—வில்போலும் புருவமும். கட்சுரும்பு — கண்ணுகிய வண்டு. சுரும்பு — வண்டு. சிக்கென — விரைவாக. நறவம் — தேன்; அது இங்கே வாயிலூறிய நீரை உணர்த்தியது. செங்குமுதம் என்றது செவ்விய குமுத மலர் போன்ற அதரத்தை. புறவம்—புறு. இணைசொல்—உவமை சொல்லத்தக்க. கூறை—புடவை. இளம் பருவமும் விற்புருவமும் கட்சுரும்பும் குமுதமும், சொல்லமுதமும், நகையும் கொண்டு, புறுவும் சித்திரமும் உவமை சொல்ல நின்ற சுந்தரவல்லி குறத்தியை நோக்கி உனக்கு உயர்ந்த விலைக் கூறை எவ்வாறு கிடைத்தது கூறுக என்றுள் என்றவாறு.*

*குறத்திவிடை*

*அஷ்டபதி*

*நொண்டிச் சிந்து*

114. குறிசொல்லும் திறமை கண்டே—அரங்கர்முன்
கூறையும் காறையும் கொடுத்தனரே !
நறைகமழ் வேங்கடவர்—மனக்குறி
நவின்றதற்குக் கடகம் நல்கினரே

திருமா லிருஞ்சோலை—அழகர்க்குத்
தேவி சூடிக்கொடுத்தாள் திருமாலை
வருமா? எனக்கேட்கச்—சொன்னதற்கு
மகிழ்ந்தவர் தந்த முத்துவடம் பாராய்

பாண்டியன் மனது மெச்ச—வில்லிபுத்தூர்ப்
பட்டர்பிரான் வென்று கிழியறுத்து

வேண்டும் திருப்பல்லாண்டு—உலகுக்கு
விதிப்பரென் றும்குறிமுன் விரித்தேனே

தெய்வங்கள் பெருமாள் பொற்—கிண்ணியைத்
திருக்கச்சி நம்பிவந்து திருடினதாய்ப்
பொய்வந்த மொழிகளெல்லாம்—பறந்தோடிப்
போகக்குறி சொன்னதென் ஊகம் அம்மே!

திருக்கண்ண புரம்சவரி—ராசற்குச்
சிகைச் சவரி உண்டென்று திறமாகக்
குருக்கணம் அரசன்மனம்—நிசமென்று
கொள்ளக்குறி சொன்னதென் உள்ளம் அம்மே!

திருவெள் ளறையினிரண்டு—கோபுரத்தும்
சிங்க முகமுள தூபி சிறப்பாகிப்
பெருவெள்ளம் போல்திறைகள்—வருதென்றும்
பேசக்கண்டதுவிசு வாசம் அம்மே!

திருக்கோட்டி யூர்நம்பிபாற்—பலமுறை
சென்றபின் புபதேசம் செய்வரென்று
கருக்கூட்டி உடையவர்க்குக்—குறிசொன்ன
காரணங் காணுயோ ஆரணங்கே!

திருவாய் மொழிப்பிள்ளை—அவதாரம்
செய்தகொ ந்தகைதனில் திருப்ரதிட்டை
குருவாம் திருமலை யாழ்—வாருக்குக்
கோயில்கட்டப் புகன்ற குறியொன்றம்மே!

*114. காறை—மகளிர் கழுத்தில் அணியும் அணிகளில் ஒன்று. நறை—நறுமணம். மனக்குறி—நினைத்தது கூறும் குறி. நவிலுதல் — சொல்லுதல். முத்துவடம் — முத்து மாலை. பாண்டியன் என்றது ஸ்ரீவல்லபனை. வில்லிபுத்தூர் பட்டர்பிரான் — பெரியாழ்வார். கிழி — பாண்டியன் பர தத்துவ நிர்ணயம் பண்ணினார் பெறுக என்று தூக்கிய பொன் முடிப்பு. திருப்பல்லாண்டு—ஆழ்வார்களின் அருளிச்*

செயல்களுள் தொடக்கத்து அமைந்ததொரு பிரபந்தம்; பெரியாழ்வாரால் இயற்றப்பட்டது. விதித்தல்—அருளுதல். தெய்வங்கள் பெருமாள்—காஞ்சிபுரம் தேவராஜப் பெருமாள். திருக்கச்சிநம்பி — வைணவ சமயப் பெரியாருள் ஒருவர்; இவர் தேவப்பெருமாள் பொன் வட்டிலைத் திருடியதாகக் கூறப்பட்ட குற்றச்சாட்டு தவறு என்று தான் முன் குறி சொல்லியதாகக் குறத்தி கூறுகிறாள். திருக்கண்ணபுரம்—சோழநாட்டுத் திருமால் திருப்பதிகளில் ஒன்று; இத்தலத்திறைவன் திருநாமம் சவரிராஜன் என்பது. சிகைச்சவரி—குழலில் இணைத்துப் பின்னுதற்குரிய கவரிமான் மயிர்க் கற்றை. திறமாக—உறுதியாக. குருக்கணம்—அருச்சகர் கூட்டம். திருவெள்ளறை—சோழநாட்டுத் திருமால் திருப்பதிகளுள் ஒன்று. சிங்கமுகம் உள தூபியும் சிறப்பும் ஆகி என்க. தூபி—உச்சி. சிறப்பு—திருவிழா. திருக்கோட்டியூர் நம்பி—இராமானுஜர்க்கு ஆசாரியரான ஐவருள் ஒருவர். கரு — மாயவித்தை செய்தற்குதவும் கூட்டுச் சரக்கு. உடையவர் — இராமானுஜர். கொந்தகை—குந்தீ நகரம். திருமலையாழ்வார்—ஸ்ரீசைலேசர் எனும் திருவாய்மொழிப்பிள்ளை.

சுந்தரவல்லி தான்நினைத்தது கூறும்படி குறத்தியிடம் வினவுதல்

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

**115.** இப்படிக் குறிகள் சொல்லி இசைபெற்ற குறத்தி யென்றால்
முப்படி புகழவே யான் முன்னிய குறியொன் றுண்டு
மைப்படி குழலாய் சூடா மணியுனக் களிப்பன் நன்றாய்ச்
செப்படி அறிவோ மெந்தன் சிந்தையின் குறியென் றாளே.

*115.* முப்படி—மூன்றுலகமும். முன்னிய—நினைத்த. சூடாமணி—மகளிர் தலையில் அணியும் அணி. சிந்தையின் குறி—மனக்குறி. 'எந்தன் சிந்தையின் குறி நன்றாய்ச் செப்படி அறிவோம்' என்றாள் என இயைக்க.

*குறத்தி சுந்தரவல்லி நினைத்தது கூறல்*

*காவடிச் சிந்து*

*ஆனந்தக்களிப்பு*

116. திருமெழுக் கிடுசதுர மாக—மேலே
செமமண்ணும் கோலமிடு தீவினைகள்போக
இருதனத் தணிமஞ்சள் விழுது—பெரிய
எலுமிச்சங் கனிபோலத் தருவாய் இப்பொழுது
நிறைகுறுணி சிறுமணிநெல் வைப்பாய்—உந்தன்
நினைவையான் சொன்னவுடன் சரியென்றுமெய்ப்பாய்
திறைவருபொன் பலகோடி துய்ப்பாய்—கோடி
சென்மமூ டரையும்உன் திருவருளில் உய்ப்பாய்.

*116. சிறுமணி நெல் நிறை குறுணிவைப்பாய் என்க. குறுணி — முகத்தல் அளவைகளுள் ஒன்று. துய்த்தல் — அனுபவித்தல். திருவருளில் உய்ப்பாய் — திருவருளால் உய்விப்பாய்.*

*வேறு சந்தச் சிந்து*

117. அட்சதையி னொடுதுளசி கந்தம்—புஷ்பம்
ஆலத்தி பூரமுடன் சாம்பிராணி நந்தம்
பட்சமுள சேனையதிபதிக்கு—வெல்லம்
பச்சரிசி பழந்தேங்காய் வைத்திடுசந் நிதிக்கு
அடைக்காயும் அபரஞ்சிப் பணமும்—வைத்திங்
கறிவோடு வேண்டலால் குறியோடு குணமும்
கிடைக்காத அரும்பொருளும் எய்த—மந்திரக்
கிரியைமுறை போலவன கிரிமாது செய்த
பூசைமுகந் தன்னிலருள் பெருகிக்—காலம்
பொழியுமழை என்ன இவள் மதியமுதுபெருகி
ஆசையொடும் இதுநல்ல நாளே—என்றே
ஆசிரியர் ஆழ்வார்கள் அருள்வேண்டு வாளே.

*117. அட்சதை—மஞ்சள் திமிர்ந்த அரிசி. கந்தம்—சந்தனம். பூரம்—கர்ப்பூரம்—சூடம். நந்தம்—நம்முடைய,*

சேனை அதிபதி—சேனைத் தலைவர். அபரஞ்சிப் டணம் என்பது பழையபொன் நாணய வகையுள் ஒன்று. மந்திரக் கிரியை முறை போல—மந்திரத்தோடு கூடிய பூசை முறை போல. வனகிரி மாது—சோலை மலைக் குறத்தி. வனகிரி என்பது சோலை மலையின் பெயர்களுள் ஒன்று.

மற்றும் ஒருவகை நொண்டிச் சிந்து

118. திருமாலை யாண்டாரே!—தர்க்க
சிம்மமென்று பெயர் பூண்டாரே!
குருவான தோழப்பரே!—நங்கள்
குன்றத்தின் கோட்டியில் வாழப்பரே!
திருக்கோட்டி யூர்நம்பியே!—இவள்
சிந்தனை செல்லச் சிரங்கம்பியே
குருக்கூட்டச் சேகரரே!—கூர
குலோத்தம தாச குணாகரரே!
திருவாய் மொழிப்பிள்ளையே!—நல்ல
சீவைணவர் கூட்டில் வாழ்கிள்ளையே!
மருவார் துவர்வாயரே!—திரு
மாலிருஞ் சோலை மலைச் சீயரே!
பல்லாண்டு பாவை முதல்—பிர
பந்தம் திருவாய் மொழி சுலோகி
எல்லா வியாக்கியானமும்—ஈந்த
எந்தை பெரியவாச் சான்பிள்ளையே!
ஆழ்வார்தம் தோழப்பரே!—நாலூர்
ஆச்சானே! வெள்ளறை வாசனே!
ஏழ்பாரும் கண்டாரே!—குரு
எல்லாரையும் உய்யக் கொண்டாரே!
கதிகாட்டும் நம்பிள்ளையே—மணக்
கால்நம்பியே! பெரியநம்பியே!
துதிலோக தேசிகனே!—குறி
சொல்லும்எனக்குத்துணை யாவீரே
மணவாள மாமுனியே!—பூதூர்
வந்தவரே! ஆளவந்தவரே!

குணநாத மாமுனியே! பராங்
குசநம்பியே ! மதுரகவி நம்பியே !
நம்மாழ்வாரே ! புதுவைப்—பட்ட
நாதரே ! தொண்டர் அடிப்பொடியே !
சிம்மாசனபதியாம்—குல
சேகரனாதி எழுவர்களே !
போதா யனர்முதலாய்—உள்ள
பூருவா சாரியப் புண்ணியரே !
தாதாவென் றென்னிதயம்—குடி
தான்கொண்டு செல்வம் தருவீரே !

118. தர்க்கசிம்மம் என்று சிறப்புப் பெயர் பூண்டவராகிய திருமாலையாண்டார் என்க. நங்கள் குன்றமாகிய திருமாலிருஞ்சோலைமலை அழகர் சந்நிதிப் பணி புரிவார் கோஷ்டியில்வாழும் சுவாமியானதோழப்பர் என்க. கோட்டி-ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டி. சிரம்கம்பி—தலை யசைப்பாயாக. குருக் கூட்டச் சேகரரே—ஆசாரியர் குழுவுள் தலைவரே. குணாகரர்—குணங்களுக் கெல்லாம் இருப்பிடமானவர். ஆரியர் குழுவுள் தலைவரும் குணாகரரும் ஆன கூரகுலோத்தம தாசரே என்க. நல்ல ஸ்ரீவைஷ்ணவர் கூட்டத்துள் வாழும் கிளிபோல்பவரான திருவாய்மொழிப் பிள்ளையே என்க. கிளி என்றதற்கேற்பக் கூடும் தோன்றப் புணர்த்த நயம் காணத்தகும். மரு—நறுமணம். துவர்வாய்—சிவந்த வாய். சீயர் — வைணவத் துறவி. பாவை — திருப்பாவை. திருப்பல்லாண்டு திருப்பாவை முதலிய திவ்யப் பிரபந்தங்களுக்கும், திருவாய்மொழிக்கும், ஸ்ரீராமாயண தனிஸ்லோகங்களுக்கும் விரிவுரை முழுதும் வழங்கிய எங்கள் சுவாமியாகிய பெரியவாச்சான்பிள்ளையே என்றவாறு. கலாப காலத்தில் நம்மாழ்வார் அர்ச்சா திருமேனியை ரக்ஷித்தவர் ஆழ்வார் தோழப்பர். திருவாய்மொழிப்பிள்ளைக்கு திவ்ய ப்ரபந்தார்த்தங்கள் ஸாதித்தவர் நாலூராச்சான் பிள்ளை. திருவெள்ளறையில் வசிப்பவரும், ஏழுலகினரும் கண்டு

கொண்டாடும் பெருமையுள்ளவருமான உய்யக்கொண்டார் என்க. லோகதேசிகன்—பிள்ளைலோகாசாரியர். பூதூர் வந்தவர்—உடையவர். ஆளவந்தவர்—ஆளவந்தார். நாதமாமுனி-நாதமுனிவர். பராங்குச நம்பி—நாதமுனிகளுக்குக் கண்ணிநுண் சிறுத்தாம்பு உபதேசித்த மதுரகவி குலத்தோன்றல். மதுரகவி(யாகிய)நம்பி-மதுரகவியாழ்வார்; புதுவைப் பட்டநாதர் என்றது பெரியாழ்வாரை. குலசேகரனாதி எழுவர்:- குலசேகராழ்வார், பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார். திருமழிசை ஆழ்வார். திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார் என்போர். சிம்மாசனபதி-அரசன். தாதா என்று—வள்ளல் போல்.

உடுக்கடித்துக்கொண்டு வேண்டிக் குறிசொல்லும்
ஒருவகைச் சிந்து

119. சோலைமலை யாண்டவனே!—ஆதி
சுந்தரேசப்பேர் பூண்டவனே!
காலமெல்லாம் நீண்டவனே.........*
ஆயுள் நீண்டவனே !
பணக்காளியன் முடிமேல்
தாண்டவனே ரத்தினத்தாண்டவனே
.........................................
.........................................
வானொழுகும் தலையருவிப்—பக்கம்
வாழ்ந்திருக்கும் சத்தகன்னிமாரே !
தேனருவிச் சாரலிலே—வந்து
சேர்ந்த சக்க தேவியம்மா !
சோலைமலை யாலயத்தைச்
சுற்றும் துவாரம் காப்பவரே !
நீலமலை போலெதிர்
நின்ற பதினெண்படியாய் !

---

* புள்ளி ஒற்றிய பகுதிகள் மூலப் பிரதியில் சிதைந்தழிந்து விட்டன.

சேத்திரத்தைப் பாலகரே—நகர்த்
திக்கிலெட்டுப் பாலகரே !
சாத்திரத்தை மெய் எனவே—குறிகள்
தம்மை நன்ருய்ச் சாற்றுவனே
என்றவுடன் சமமெனவே—வந்
திருந்ததம்மா பிடரியிலே
வேறிடத்தில் வந்திருநீ—குறியை
விரைவாகவே யுரைப்பேன்
கூறுமந்தச் சீலனை நீ
கூடுதற்கே கேட்டதம்மே !
சீவன் எண்பத் தீரிரண்டு—லட்சம்
செந்துவின்மேல் தேவன் அவன்
பாவனமாம் உள்ளுயிராம்
பரமானமா வான அவன்
சகலாண்ட நாதனுமாய்த்
தழைசோமச் சந்தம் உள்ளோன்
இகலாண்ட தோளுடைய
எம்பெருமான் பவனியிலே
கண்டாசை கொண்டபெண்கள்
கரையடங்காப் பிரளயம்காண் !
பெண்டாக உனைவிரட்டிப்
பிடித்ததவன் சுந்தரத்தோள்
ஆதலினல் விதிவழியே—உனக்கு
அந்தமதி வந்ததுபார் வந்ததுபார்!
காதலினல் மாலைதந்து—திருக்
கலியாணம் செய்வனம்மே !
கலியாணம் செய்வனம்மே !

*119. பணக்காளியன் முடிமேல்—படமுடைய காளியன் என்னும் பாம்பின் தலை மீது. துவாரம் காப்பவர்—துவார பாலகர்—வாயில் காப்பவர். சேத்திரம்—க்ஷேத்ரம். சேத்திர(த்தைப்) பாலகர்—க்ஷேத்ர பாலகர்—தலங்காவலர்.*

சம் என்பது குறிப்புமொழி. தெய்வம் பிடரியில் ஆவே சித்தது என்றவாறு. அம்மா வியப்பிடைச் சொல். 'நீ வேறு இடத்தில் வந்து இரு' என்பது—சுந்தரவல்லியை நோக்கிக் குறத்தி கூறியது. எண்பத்தீரிரண்டு—எண்பத்து நான்கு. பாவனம்—தூய்மைப்படுத்துபவன். உள்ளுயிர்-உயிருக்குள் உயிர். சோமச்சந்தம் — சோமச் சந்த விமானம். இகல்—வலிமை. பவனி-உலா. பிரளயம்—ஊழி வெள்ளம்; இங்கே ஒருபேரெண் குறித்து நின்றது.

*சுந்தரவல்லி குறத்தியிடம் முட்டி வினவல்*

*கலிவிருத்தம்*

**120.** என்றுகுறி சொன்னவுடன் இந்திரையும் 'மானே!
மன்றல்புரியக்கடவுள் மாமிமக ளோ?
நன்றுரைசெய் தாய்'என நகைத்தவண்ணம்'நங்கை!
இன்றுபிடி ஒன்றினுள் இருப்பதுசொல்' என்றாள்.

*120. இந்திரையும்—திருமகள் போல்பவளான சுந்தரவல்லியும். மன்றல்புரிய — திருமணம் செய்துகொள்ள. 'மானே!.... நன்றுரை செய்தாய்';'நங்கை! இன்றுபிடி ஒன்றினுள் இருப்பது சொல்' என்பவை குறத்தியை நோக்கிச் சுந்தரவல்லி கூறியவை. சுந்தரத்தோளன் உன்னைக் கலியாணம் செய்வன் என்ற குறத்தியை நோக்கி, 'அழகன் எனனை மணந்துகொள்ள அவன் எனக்கு மாமிமகனோ? நன்று சொன்னாய்!' என்று பரிகசித்துச் சிரித்தபடி, 'இப்போது இக்கைப்பிடியினுள் இருப்பதனைச் சொல்லுக என்றாள்' என்றவாறு. கடவுள் என்றது சுந்தரத்தோளனை.*

*குறத்தி முட்டியுள் இருப்பது கூறுதல்*

*தரு*

*இராகம்—செஞ்சுருட்டி.* *ஆதி தாளம்.*

*பல்லவி*

**121.** முட்டிசொல்லச்சொல்லிநீ மொழியவந்தாய் அம்மே!
—முட்டி

*அநுபல்லவி*

அட்டியின்றிச் சொல்லுகிறேன் ஆட்பரிட்சை பாரம்மே!

*சரணங்கள்*

அன்னமுண்ணும் கையிலே அடக்கிவந்து கேட்கிறாய்
பொன்னின்கம்பி மாணிக்கம் பூண்டசின்னப் பூஷணம்–
திருவணைக்குத்தென்புறம் செனித்தஆணிமுத்துடன்[முட்டி
கருஇசைத்த தாமஒற்றைக் கல்லுமுத்து மூக்குத்தி-முட்டி
என்றுசொன்ன ஓர்பொருள் இல்லையென்று கூறவே
நன்றுளங்கை காட்டெனு நகையிருந்ததேயம்மே!–முட்டி
மாலைகொண்டு தோழியும் வந்துசேரு வாளிதே
காலம் என்று கூறவும் களிதுளங்கு றாயம்மே!—முட்டி.

*121. அன்னம் உண்ணும் கை என்றது வலக்கையை. குறத்தி சுந்தரவல்லியை நோக்கி 'நீ வலக்கையில் அடக்கி வந்து கேட்பது நீ பூண்ட ஒரு சிறிய பூஷணம்;' என்றாளாக; (சுந்தரவல்லி 'அவ்வணி இன்னது என்று விளங்கக் கூறுக' எனக் குறத்தி) 'அது மாணிக்கம் இழைத்த பொற் கம்பியில் திருவணைக்குத் தெற்கே பிறந்த ஆணிமுத்துத் தொங்க இசைத்த ஒற்றைக்கல் மூக்குத்தி' என்றாளாக; சுந்தரவல்லி 'நீ சொல்லிய பொருளில்லை' என்று கூற, குறத்தி 'உன் உள்ளங்கையை நன்றாக விரித்துக் காட்டு' எனச் சுந்தரவல்லி கையில் குறத்தி கூறிய மூக்குத்தி இருந்தது. அது கண்ட குறத்தி, 'இப்பொழுதே உன் தோழி அழகர் மாலையைக் கொண்டு வருவாள்' என்று கூறி, மேலும் 'என் குறி பலித்தமையால் நீ மகிழ்கிறாய்' என்றாள் என்றவாறு. கரு—அச்சுக்கரு.*

*சுந்தரவல்லி தன் கைரேகையின் பலன்வினவுதலும் குறத்திகூறுதலும்*

*அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்*

122. சிந்தனைமுட்டி நன்றாய்ச்செப்பிய குறத்தியைப் பார்த்து
'உந்தனை மதித்தேன் என்கை உற்றரேகை யையும்பார்த்து
முந்தனை போலச் சாமுத் திரிகமும் மொழிவை' என்றாள்
வந்தனை புரியும் சோலை மலைக்குற மகள்சொல் வாளே.

*122. சிந்தனையும் முட்டியும் என உம்மை விரிக்க. சிந்தனை—மனக்குறி. முட்டி—கையுள் அடக்கியதை அறிந்து கூறும் குறி. முந்து அனைபோல்—சிறந்த தாய்போல். சாமுத்திரிகம்-உடலுருப்புக்களின் இலக்கணம் கூறும் நூல்.*

*தரு*

*இராகம்—பியாகு.* *தாளம்—ரூபகம்.*

*பல்லவி*

**123.** காந்தள் ஓடக் கமழும் இடக்கை
காட்டுவை மானே! தேனே!

*அனுபல்லவி*

பாந்தள் சூடும் மணிகொள் கனகப்
பாட்டில் வளைகள் பூட்டி மிளிர்செங்—காந்தள்

*சரணங்கள்*

ஆயுரேகை தீர்க்கமும் அங்குசவரை மார்க்கமும்
தோயும் கமலக் கரங்கள் மெதுவும் சுந்தரன்
மனதுகந்த சுகந்தக்—காந்தள்
மச்ச மகரரேகை ஏறிவந்த பலன்கள் கேள் அம்மே!
இச்சையாகும் கல்வி செல்வமும் எவரினும் குலத்
தேற்றமும் தரும்—காந்தள்
பதுமரேகை இதுகொடுத்திடும் பத்துலட்சம் வராகனை
எதிரிலாத இச்சங்கரேகை எண்ணில்கோடி பொன்
இருப்பு வைத்திடும்—காந்தள்
சக்ர ரேகை தானிதேக சக்ராதிபத்யம் தந்திடும்
திக்கு யானை போலும் கோடி சிந்துரங்குடைச்
சந்திரன் தரும்—காந்தள்
ராகம் பியாகு ரூபகம் நடன தாளம் ஞாபகம்
தேகம் வீசும் சம்பகம் செங்குவளைகள் அம்பகம்—
காந்தள்

*123. காந்தள்—ஒருவகைப் பூ; மகளிர்க்கு உவமை கூறப்படுவது. காந்தள் ஓட—காந்தட் பூவும் தோற்று ஓடும்படி. பாந்தள் சூடும் மணி—நாகரத்தினம். பாந்தள்—பாம்பு. பாட்டில்—மகளிர் தோளணி வகையுள் ஒன்று. மிளிர் — விளங்குகின்ற. ஆயுரேகை—ஆயுளைக் குறிக்கும் ரேகை. தீர்க்கம்—நீளம். அங்குசவரை—அங்குச ரேகை. சுகந்தம்—நறுமணம். மச்சரேகை மகரரேகை என்க. சக்கர ரேகையாகிய இது ஏக சக்ராதிபத்தியம் தந்திடும். மேலும் திக்கு யானைகள் போலும் கோடி யானைகளையும், சந்திரவட்டக் குடையையும் தரும் என்க. ஏகசக்ராதிபத்தியம்—உலகனைத்திலும் தன் ஓராழியே செல்ல ஆளுதல். தேகம் சம்பகம் வீசும்—நின் உடல் சம்பகப்பூவின் மணம் கமழும். அம்பகம்—கண்.*

*குறிகள் சொன்ன குறத்திக்குச் சுந்தரவல்லி*
*பரிசு வழங்குதல்*

*அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.*

124. செங்கைக் குறியும் முகக்குறியும்
சிந்தைக் குறியும் திரண்டு விம்மும்
கொங்கைக் குறியும் மொழிக்குறியும்
குழையிற் குதிக்கும் விழிக்குறியும்
மங்கைக் கரசே அகிலாண்டம் வணங்க
வாழ்வாய் என்றகுற
நங்கைக் கமுதம் ஆடை சொன்னம் நகையும்
புகழ்ந்து நல்கினளே.

*124. குழை—காது. மங்கைக்கு அரசே! கைக்குறி முதலியவற்றால் நீ எல்லா அண்டங்களும் வணங்க வாழ்வாய் என்றாள் என்றவாறு. குறநங்கை—குறமகள். அமுதமும் ஆடையும் சொன்னமும் நகையும் நல்கினள் என்க. அமுதம்—சோறு. சொன்னம்—பொன்.*

*சிங்கக் குறவன் வருதல்*

*கலித்துறை.*

125. ஒட்டுச்சல் லடம்பூட்டி ஒளிர்க்கருங் கச்சைகட்டி
வெட்டுவாள் இடுப்பினீட்டி மிதிகாடு தாங்கிப்பூட்டிச்
சட்டமாய் மீசை நீட்டித் தலைமயிற் பீலி சூட்டிப்
பட்டையாய்த் திருமண் தீட்டிப் பதிச்சிங்க னும்வந்தானே.

*125. ஒட்டுச் சல்லடம்—குறுங்காற்சட்டை வகையுள் ஒன்று. கருங்கச்சை—கரிய இடைவார். வாள் இடுப்பில் கட்டி—வாளை இடுப்பில் தொங்கவிட்டு. காடுதாங்கி—கவைக்கம்பு. தலைமயிற் பீலி சூட்டி—தலையில் மயிற் றோகையை அணிந்து.*

*சின்னக் குறவன் வருகை*

*அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.*

126. கண்ணியும் ஒட்டுக் கூடும் கடிநாயும் கையிற் கோத்து
வண்ணமா யிருக்கும் தும்பு வார்மிதி யடியும் சேர்த்து
பெண்ணெனக் கொண்டை கூட்டிப் பிறைநுதற்
றிருமண் தீட்டித்
திண்ணமாய்க் குழு(ளு)வன் வேட்டைச்
சின்னனும் தோன்றினனே.

*126. தும்புவார் மிதியடி—செருப்பு வகையுள் ஒன்று. குளுவனாகிய வேட்டைச் சின்னனும் வந்தான் என்க.*

*தரு*

*இராகம்—தர்பார்* *தாளம் சாய்ப்பு*

*பல்லவி*

127. குறவர் வந்தாரே—சோலைமலைக் குறவர் வந்தாரே.

*அனுபல்லவி*

குறவர் வந்தார் நறவம் ஏந்திய
கோங்கைச் சருவிய பொன்மலர்
வேங்கைத் தொடையணி நின்மலர்—குறவர்.

*சரணங்கள்*

நெட்டைக் கழுதுகள் போற்—சுவடது—தட்டிவரும்
தாளும்
பட்டுக் கயிறுகள் பொற்கொடி யொன்றில்—கட்டும்
அரைஞாணும்
மொட்டை விழுதை முடுக்கிய கைகளும்
மோவாயும் மீண்ட முதுகுமை மெய்களும்
ஒட்டை வயிறும் உடும்புத்தோற் பைகளும்
ஓலம்புரிகுறக் கோலம் சரியென்னக்—குறவர்
காடைத்தட் டும்கூடும்—கவுதாரி—கத்தும் பலகூடும்
பேடைப் புருநாடும்—முயல்கள்—பிடிக்கும் வலையோடும்
வாடைப் பொடியும் மயக்கும் பொடிகளும்
வாளுத் தடியும் வளைதடியும் தெத்தி
மேடிட் டுதட்டுக்கு மிஞ்சிய பல்லும்
விசிகம் விடும்பெரு விற்சுண்டு வில்லுமாய்—குறவர்
வேங்கைகளையும் கடிக்கும்-கொடிய-ஞமலியும் சங்கிலியும்
காங்குருமால் சிரத்தே—வீணைவைத்துக் —கட்டிய
அங்குலியும்
தாங்கிய வேலும் முறுக்கிய மீசையும்
தண்டம் அடிக்கும்பல் தொண்டகமுங் குத்தி
வாங்கிய ஒட்டடை மேதியின் கொம்பும் சொல்
வம்புகளும் நரிக் கொம்புகளுங் கொண்டு—குறவர்
மோக முடன் கூடித்—தர்பார் இராகமிதைப் பாடித்
தாக முடன்நாடி—ஒரு சாய்ப்புத்—தாளந்தனிலாடி
நாக வனங்களும் நந்தவனங்களும்
நாங்கு வனங்களும் கோங்கு வனங்களும்
பூக வனங்களும் மாகம் நிறைத்திடும்
புட்கள் பிடித்திடும் கட்கள் குடித்திடும்—குறவர்.

*127. நறவம்—தேன். கோங்கைச் சருவிய—கோங்க மரத்திற் பொருந்திய. வேங்கைத் தொடை—வேங்கைமரப் பூமாலை. கோங்கம் பூவையும் வேங்கைப் பூமாலையையும் அணிந்த நின்மலராகிய குறவர் என்க. நின்மலர்—குற்றம்*

அற்றவர். கழுது—பேய். சுவடது தட்டி வரும் தாளும்—அடியோடு அடிதட்டி வரும் கால்களும். மொட்டை விழுதை முடுக்கிய கைகளும்—மொண்ணையான ஆலம் விழுதைத் தோல்வியுறச் செய்யும் நீண்ட கைகளும். மை மெய்களும்—கரிய உடலும். ஒட்டை—ஒட்டகம். ஓலம்புரி—பேரிரைச்சலைச் செய்கின்ற. கவுதாரி—ஒரு பறவை. பேடைப் புறாவும் நாடும் முயல்களும் என உம்மை விரிக்க. நாடும்—விரும்பிய. வாடைப் பொடி—வசியப்படுத்தும் பொடி. வாளுத்தடி—பாளுத்தடி—சிலம்பக்கம்பு. வளைதடி—எறிதடி. மேடிட்ட உதட்டுக்கு மிஞ்சித் தெத்திய பல்லும் என்க; விசிகம்—அம்பு. சுண்டு வில்—சிறுவில். ஞமலி—நாய். சிரத்தே காங்கு உருமாலும் என்க; தலையில் கருநீலநிறத் தலைப்பாகையும். வீணை வைத்துக் கட்டிய அங்குலியும்—வீணை உருப்பதித்துக் கட்டிய மோதிரமும். தண்டம்—கம்பு. தண்டத்தால் அடிக்கும் தொண்டகம் என்க. தொண்டகம்—ஒருவகைப் பறை. குத்தி வாங்கிய ஒட்டு அடை மேதியின் கொம்பும்—வேட்டையில் குத்திப் பறித்த பல்த்துண்டுகளை இணைத்தாற்போன்றுள்ள காட்டெருமைக் கொம்பும். நாகவனம்—சுரபுன்னை மரங்களடர்ந்த காடு. நாங்கு—மரவகையில் ஒன்று. பூகம்—கமுகு. மாகம்—ஆகாயம். கட்சள்—கள் வகை.

சோலைமலைக் குறவர் பெருமை

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

128 துங்கசிக ரங்களும் வளங்கொள் நதியுஞ்சுனை
துலங்கும் ஒருசோலை மலைவாழ்
சங்கமுதல் ஐம்படைகள் பைம்பொன்முடி செம்பதுமை
தங்குநெடு மார்பிடை மு(ந்)நூல்
கொங்கலர் பசுந்துளப மும்களப மும்கொளுமோர்
கொண்டல் புகழ் கூறு குலமாம்
சிங்கவெ டிணங் கனது திண்டிற லொடும் புகழ்
தெரிந்திடுவர் தேவர் களுமே!

*128.* துங்க சிகரம்—உயர்ந்த மலை உச்சி. சுனையும் என உம்மை விரிக்க. துலங்கும்—விளங்குகின்ற. சங்கம் முதல் ஐம்படை—சங்கு முதலான ஐந்து ஆயுதங்கள்; அவை சங்கு சக்கரம், கதை, கட்கம், சார்ங்கம் என்பவை. பதுமை—இலக்குமி. மு(ந்)நூல்—பூணூல். முந்நூலும் என உம்மை விரிக்க. கொங்கு—பரிமளம். களபம்—கலவைச் சந்தனம். சோலைமலை வாழ் கொண்டல் என்க. சிங்கனும் அவனோடு இணங்கிய சின்னனும் ஆகிய இவர்தம் வலிமையையும் புகழும் தேவர்களும் தெரிந்திடுவர் என்க.

*சிங்கன் தன் குலப்பெருமையும் வரலாறும் தன் பெருமையும் கூறுதல் சிந்து.*

**129.** தாய்மாரே! தந்தையரே! சாதியெல்லாம் துதி வேதியரே!
வாய்மாறு தேயுதவும் மன்னவரே! வரும் தென்னவரே!
சேனுலகோர் காசுகொளும் செட்டிகளே!
கோமுட்டிகளே!
தூணெனவே கன்னல்செயும் சூத்திரரே! சற்பாத்திரரே!
சோலைமலைச் சிங்கன் என்றால் சூரனும்நெஞ்சு
துணுக்கிடுவான்;
வேலைவிடும் சின்னன் என்றால் வேந்தரெல்லாம்
செயல் ஓய்ந்திடுவார்;
சிங்கமுடன் போர்பொரலால் எனைச் சிங்கன் எனப்
பெயர் செப்பினரே!
பொங்குபுலி குத்துவதால் பொன்னுடையார் எனைச்
சின்னனென்றார்
தந்திகளைக் கொள்ளிகொடு தங்கை தமக்கையர்
சாடுவரே
பைந்தினையைக் கிம்புரியின் பால்போல் மருப்பால்
இடிப்பாரே
வான்மீகி வில்லி கண்டன் மருவருநம்பி குகப்பெருமாள்
தான்றர்ம வியாதனுடன் தங்கு கண்ணப்பனும்
நங்குலமே.

*129. வாய்—வாய்ச் சொல். சேணுலகோர்—நெடும் தூரத்திலுள்ள பிறநாட்டார். தூணெனவே கன்னல் செய்யும்—தூண் என்று சொல்லும்படி கரும்பை வளர்க்கின்ற. சிங்கமுடன் போர் பொரலால்—சிங்கத்தோடு போர் புரிந்தமையால். பொங்குபுலி—சினந்த புலி. சின்னன்—(எதிர்ந்த பகையை) அழிப்பவன். எங்கள் தங்கையரும் தமக்கைமாரும் தந்திகளைக் கொள்ளிகொ(ண்)டு சாடுவர் என்க, தந்திகள்—யானைகள். சாடுவர்—தாக்குவர். கிம்புரியின் பால்போல் மருப்பால்—பூண் செறிக்கப்பட்ட பால்போலும் வெண்ணிறமுடைய யானைத் தந்தத்தால். வால்மீகி, வில்லி, கண்டன், நம்பி, குகன், தர்மவியாதன், கண்ணப்பன் என்போரும் நம்முடைய குலத்தினர் என்றவாறு. நம்பி—நம்பிராசன் என்ற வேடர் தலைவன்; வள்ளியின் தந்தை.*

*அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்*

**130.** எங்களில் இளையாள் மக்கள் இடைமொழி வடுகைத்
தொட்டும்
கொங்கர் பால்கூறு கேட்டும் குத்தி பள்ளாரி விட்டும்
தங்கள்ஒன் பதுவாருக்கும் தரிக்கும் நாயகப்பேர் இட்டும்
துங்கமாய்த் துலங்கும் பிரம்மத் துவேஷியாய்த்
தொலைந்தார் ஐயோ!

*130. வடுகு—தெலுங்கு. இடைமொழியாகிய வடுகு என்க. வடுகைத் தொடுதலாவது வடுகுமொழி பேசுபவராதல். கூறு—பங்கு. குத்தி, பள்ளாரி என்பவை ஆயுத வகைகள். ஒன்பதுவார்—குறவருள் மொக்கலவார் முதலிய ஒன்பது பிரிவு. தரிக்கும் நாயகப்பேர்—தாங்கும் தலைமைப் பெயர். இளையாள் மைந்தர், தொட்டும், கேட்டும் விட்டும் இட்டும் தொலைந்தார் என்க.*

*சிந்து*

**131.** சோலைமா மலைவாழ் மாலையே தொழுவார்
துணையடி யென்றும் துணையென நின்று

மாலையும் மதியம் காலையம் பொழுதும்
வழுதிகொண் டாடும் குழுவனும் நானே!
கேசவ ஞதி துவாதச நாமம்
கிளரியங் குலியால் தவளமண் எழுதா
மோசர்கள் தோலைப் பாசமிட் டிறுக்கி
முழவுகள் அடிக்கும் குழுவனும் நானே!
சங்கம்ஒண் திகிரி செங்கையில் அணிவார்—
தம்புகழ் துதியாச் சங்கம ருடல்நீள்
சிங்குவை நரம்பைத் துங்கவில் நாணுச்
செங்கணை செலுத்தும் சிங்கனும் நானே!
கண்ணினுள் மணியாய் நண்ணும்எம் பெருமான்
கழல் மனம் பிடியார் குழல்களைக் கடிந்தே
கண்ணிகள் முடிந்தே நண்ணுபுள் பிடிக்கும்
கல்நவில் திரள்தோட் சின்னனும் நானே!
ஒருமலை திரித்தும் ஒருமலை தரித்தும்
ஒருகரி காத்தும் ஒருகரி சாய்த்தும்
திருவிளை யாட்டைப் புரிபவர் பாட்டைத்
திறமுறக் கேட்கும் குறவனும் நானே.

*131. மாலையும் மதியமும் என உம்மை விரிக்க. மதியம்—நண்பகல். காலையம்பொழுது—காலைப்பொழுது. வழுதி—பாண்டியன். கேசவன் ஆதி துவாதச நாமம்—கேசவன் முதலிய பன்னிரண்டு பெயர்கள்; அவை:—கேசவன், நாராயணன், மாதவன், கோவிந்தன், விஷ்ணு, மதுசூதனன், திரிவிக்கிரமன், வாமனன், சீதரன், இருடீகேசன், பத்மநாபன், தாமோதரன், என்பவை. கிளரி—சொல்லி. அங்குலியால்—விரலால். தவளமண்—வெள்ளிய திருமண்காப்பு. எழுதல்—வரைதல். வைணவர் திருமண் இட்டுக்கொள்ளும் காலத்தில் கேசவன் முதலிய நாமங்களைச் சொல்லி அணிதல் முறை. பாசம்-கயிறு. பகவானுடைய கேசவாதி நாமங்களைச் சொல்லித் திருமண்காப்பு அணியாத தீயவர் தோலைப் பாசத்தால் இறுக்கிக்கட்டி*

முழுவாக்கி அடிக்கும் குழுவனும். சங்கசக்கரங்களைக் கைகளில் அணிகலமென அணிந்த இறைவன் பெருமை பேசாத பாஷண்டிகளின் உடலில் நீண்ட நரம்பையும், நாக்கையும் வில்நாணாகப்பூட்டி அம்புகளைச் செலுத்தும் குழுவனும். கண்மணி போல் நெறிகாட்டி நண்ணிய அழகருடைய திருவடிகளை மனத்தில் பதியவைத்துக் கொள்ளாதவருடைய சிகையைக் களைந்து கண்ணியாக்கி, வரும் புட்களைக் பிடிக்கும் கல்ப்போலும் திண்மையும் திரட்சியும் வாய்ந்த தோள்களையுடைய சின்னனும், அமுதம் கடைவதற்கு மந்தரமாகிய ஒரு மலையைச் சுழல் வித்தும், இந்திரன் ஏவிய கல்மழையால் பசுக்களும் ஆயரும் நலிவுறாது காக்கக் கோவர்த்தனம் என்னும் ஒரு மலையைத் தாங்கியும், மூலமே என்று ஓலமிட்ட கஜேந்திரன் என்னும் ஒரு யானையை முதலையால் வருந்தாது காத்தும், தன்னைக் கொல்லவந்த குவலயாபீடம் என்னும் ஒரு யானையைக் கொன்றும் (இங்கு "ஓரானை கொம்பொசித்து ஓரானை கோள் விடுத்த சீரானை" என்ற சிறிய திருமடல் நினைவு கூறத் தகும்) விளையாடிய அழகர் விஷயமான பாடல்களை உறுதியாகக் கேட்கும் குறவனும் நான் என்ற வாறு. சங்கமர்—ஒருவகை வீர சைவர். சிங்கு—நாக்கு. திரித்தல்—சுழலவிடுதல். தரித்தல்—தாங்குதல்.

சிங்கன் பறவைகள் உள்ள இடம் கண்டுசொல்லும்படி
சின்னனிடம் கூறுதல்
அறுசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்

**132.** குழுவனே! சின்ன! ஏலே! குருவிகள் ஒன்றும் காணோம்
வழுவறு தலைமுழுக்கு வந்தது கறிக்கென் செய்வோம்?
புழுவகை குத்திமேயும் புட்குலம் எங்குண்டென்று
தழுவவாய்ப் பாம்இத் தெங்கின் தலையேறிச் சாற்றுவாயே.

132. வழுவறு — குற்றமற்ற. தலைமுழுக்கு — தலை முழுகுதற்குரிய நாள். புட்குலம்—பறவைக்கூட்டம். தெங்கின் தலையேறி—தென்னையின் உச்சியில் ஏறி.

*சின்னான் பறவை வரவு கூறுதல்*

*தரு*

*இராகம்—கமாசு* *தாளம்—சாய்ப்பு*

*சரணங்கள்*

**133.** வருதே நிரையாய் வளநாரைகள் கூடி
எருதேழ் அடர்த்தார் இடம் தேடியே நாடி—வருதே
செங்கால் விழிகூர் செழுவாய் களம்நீள்
கங்கா நதிபோல் சிங்கா ரமதாய்—வருதே
கருநா ரையும் கொய் கழல்நா ரையும் தாய்ப்
பெருநா ரையும்சேய்ச் சிறுநா ரையுமாய்—வருதே
கக்கா எனவே கடல்போல் ஒலிசெய்
வக்கா வுடனே கொக்கோந் திகளாய்—வருதே
அழகா புரியோ டமரா பதியும்
பழகா எழிற்சீ பதிமேல் இனிதாய் வருதே

*133. வருது—வருகுது. நிரையாய்—வரிசையாய். எருது ஏழ் அடர்த்தார் இடம்—ஏழு காளைகளையும் வலியழியச் செய்த கண்ணன் எழுந்தருளியுள்ள தலமான சோலைமலை. எருது ஏழ் அடர்த்தது என்றது—நப்பின்னைப் பிராட்டியை மணந்துகொள்ள விரும்பிய கண்ணன், நப்பின்னையின் தந்தையாகிய கும்பாண்டன் சொற்படி அவன் வளர்த்த ஏழு எருதுகளையும் வலியழித்து அடக்கி வென்ற விருத்தாந்தத்தை. செங்காலும் விழியும் கூர்வாயும், நீள்களமும் சிங்காரமாய் நாரைகள் கங்கா நதிபோல் வருது என்க. களம்—கழுத்து. கொய் கழல் நாரை—கொய்யடி நாரை. வக்கா—ஒரு பறவை. குபேரனுக்குரிய அளகாபுரியினும் இந்திரனுக்குரிய அமராபதியினும் அழகுமிக்க சீபதியை நோக்கி நாரைகளும் கொக்கும் வக்காவும் ஓந்திகளும் வருது என முடிக்க.*

*கொச்சகக் கலிப்பா*

**134.** புக்கிவர வெட்டாத பொற்பதத்திற் போயிருந்த
மக்களையும் தந்ததிரு மாலழகர் சோலைவெற்பில்

கைக்கிசைவாய் வந்துபின்பு கண்ணிருத்த
வொண்ணுமல்
பக்கிநிரை யெல்லாம் பலமுகமாய்ச் சாயுதையே!

*134. புக்கு இவர எட்டாத பொற்பதம்—சென்று அடைதற்கு எட்டாத அழகிய தானம்—வைகுந்தம். இவர்தல்—அடைதல். பொற்பதத்திற் போயிருந்த மக்களை யும் தந்த என்பதனுள் "இடரின்றியே ஒருநாள் ஒரு போழ் தில் எல்லாவுலகுங்கழியப் படர் புகழ்ப்பார்த்தனும் வைதி கனும் உடனேறத்திண்தேர் கடவி, சுடரொளியாய் நின்ற தன்னுடைச் சோதியில் வைதிகன் பிள்ளைகளை உடலொடும் கொண்டு கொடுத்த" [திருவாய்மொழி 3-10-5] செய்தி பேசப்பட்டது. பக்கி நிரை—பறவை வரிசை.*

*தரு*

*இராகம்—சங்கராபரணம்.* *தாளம்—சாய்ப்பு.*

*பல்லவி*

**135.** சாயுதடய்யே!—குருகினம்—சாயுதடய்யே!

*அனுபல்லவி*

தோயும் தயிருண்ட வாயர் அலங்காரர்
சுந்தரத் தோளனுர் சந்தனச் சோலைக்கும்
தாயுயர் ஆண்டாள் சவுந்தர வல்லியார்
சண்பகத் தோப்புக்கும் விண்படர்ந் தொன்றாகச்—
சாயுதடய்யே!

*சரணங்கள்*

காட்டுப் புறுக்களும் காடைக் குலங்களும்
கஞ்சரீ டம்கானம் கோழிவான் கோழியும்
ஆட்டுக் கழகாம் மயூரம் சிறகியும்
அன்னக் குழாங்களும் அன்றிலும் தாராவும்
பாட்டுப் பசுங்கிளி பஞ்சவர் ணக்கிளி
பஞ்சமக் கோகிலம் கொஞ்சிடும் மைனவும்
நாட்டுக்குள் வால்நீண்ட ராஜாக் குருவியும்
நண்ணும் ஆட்காட்டியும் ராசாளிப் புள்ளுமாய்—
சாயுதடய்யே!

சக்கர வாகமும் சாதகப் பட்சியும்
சம்பங்கோழி கொம்புக் கோழிதீக் கோழியும்
சிக்காத கற்ருழைச் சிட்டும் கரிச்சானும்
சீத்தைக் குருவியும் செம்போத்தும் சிச்சிலும்
வக்காவும் முந்திய வல்லூறு வாவலும்
வல்லத்தனும் மரங்கொத்தி மீன்கொத்தியும்
புக்காத கூழைக் கடாவும் பருந்தும்
புழுவைப் பிறக்கியும் போர்வல சாறுமாய்ச்—
சாயுதடய்யே!
தண்ணீரின் காக்கை தகுகிண்ணிக் கோழியும்
சாலக் குருவியும் கொண்டை வளர்த்தானும்
கண்ணியில் வீழ்கே கயத்துட னேசிவல்
கத்தூரிப் பட்சியும் தித்திரிச் சிட்டுடன்
புண்ணியமான கருடன் பொய்யாப் புள்ளும்
போதாவும் வீறுள புல்புல் குருவியும்
எண்ணுறும் தூக்கணத் தானூர்க் குருவியும்
எண்காற் சரபமும் கண்காண வந்திங்கே—
சாயுதடய்யே!
வன்னச் சிறையுள்ள காடானும் விச்சுளி
வாத்தும் குறும்பூழும் கொண்டைக் கிலாத்தியும்
உன்னி வருங்கற் பிறக்கி யுருளியும்
ஓங்குகால் பீளியும் ஊசுலை உள்ளானும்
தன்னிகர் பச்சைக் குருவியும் பொற்புள்ளும்
தாவிடும் ஞாளி முனிகவு தாரியும்
மன்னும் இருதலைப் பட்சி யாளிப்புள்ளும்
மண்டமர் செய்திடும் கண்ட பேரண்டம்போல்—
சாயுதடய்யே!

*135. குருகினம்—பறவைக் கூட்டம். கஞ்சரீடம்—பறவை இனத்தொன்று. ஆட்டு—ஆட்டம். மயூரம்—மயில். பஞ்சமக்கோகிலம்–இராகம் பாடும் குயில். பஞ்சமம்—ஓர் இராகம் (பண்). சிக்காத—அகப்படாத. புகாத என்பது எதுகை நோக்கி புக்காத என நின்றது. தண்ணீரின் காக்கை–நீர்க்காக்கை. கேகயம்—பறவை இனத்துள் ஒன்று.*

*ஞாளி—நாய். ஞாளி முனி கவுதாரியும்—நாயைச் சினந்து ஓட்டும் கவுதாரியும்.*

*பறவைகள் மேய்தல்*

*அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்*

**136.** **வந்தபல பறவைஆணை மடைகுளங்கள் கால்மறுகால் மதகு பாலம்**
**சந்தவன நதிகலிங்கல் தாம்போகி ரெடிகண்ணார் தழைத்தி ருந்த**
**கொந்தலர்பூஞ் சோலைநங்கள் குன்றவரை நின்றுதிருக் குருகூர் போலும்**
**விந்தைமிகும் பழனமெல்லாம் விளையாடிக் குலவியல்லோ மேவு தய்யே.**

*136. சந்தவன நதி—அழகிய காட்டாறு. ரெடி கண்ணார்—தண்ணீர் பாயும் ஒருவகை வாய்க்கால். கொந்து—பூங்கொத்து. திருக்குருகூர்—ஆழ்வார்திருநகரி. விந்தை—அதிசயம்.*

*தரு*

*இராகம்—காம்போதி* *ஏகளாதம்*

*பல்லவி*

*137. மேயுதடய்யே!—பறவைகள்—மேயுதடய்யே!*

*அனுபல்லவி*

*மேயுது சீரங்க நாயகர் காவேரி ம்ருகமதங்கமழ் திருமுகத்துறை*
*சாயும் பொருநைத் திருச்சங்கணித்துறை தாறுடி*
*மால்வரைத் தேறுடியேவந்து—மேயுதடய்யே!*

*சரணங்கள்*

**சீரங்கராச பட்டர் திகழ் அலங்கார பட்டர்**
**சீயர்சுவாமி யெங்கள் திருமாலையாண்டார்**
**ஆரங்கடகம்புனை தோழப்பர் முதலோர்**
**ஆதீனம் திருமலை நம்பி பண்ணைகளும்**
**சீராளன் தெய்வ சிகாமணி நம்பி**
**தியாகம்செய் அமுதாரும் செல்லப் பண்டாரி**

காரான வயிணவன் திருமாலிருஞ்சோலைக்
கணக்குப்பிள்ளை இவர்கள் இணைக்கப் பழனமெல்
லாம்—மேயுதடய்யே!
மேலாகிய கமிட்டி மெம்பர்கள் சேஷைய்யங்கார்
விருதைப் பொருந்திப்படி சுந்தர ராசய்யங்கார்
மல்லான மல்லேனி அழகருசாமி மன்னன்
மாட்சிமை தங்கிய மீனாட்சி நாயக்கருடன்
ஆலோசனை அம்பலம் அர்ச்சுனப் பெருமாளும்
ஆனரபிள் மானேச ராகும் அதிகாரியும்
கோலா கலகச்சேரித் தாசில்தா ரோடழகர்
கோவில் மணியம் செய்வார் வரவிப்பழனமெ
லாம்—மேயுதடய்யே!
ஆண்டவன் பண்ணை அலங்காரன் நல்லூர்
அழகர்தம் தேனூர் அணிதிரு வேடகம்
தாண்டவ கிருஷ்ணன் தழை சோழவந்தான்
சமயநல்லூர்திரு மானத்தம் செல் லூர்
பாண்டியன் கூடற்பதி ஆச்சான் பற்றும்
பங்கயத் தாளெம் பிராட்டிதன் பற்றும்
பூண்டியும் தல்லா குளம் வண்டியூரும்
புணரிபோல் வைகைப் புரவெங்கணும் சுற்றி—
மேயுதடய்யே!
கீரம் குருவித்துறை சம்புலு புத்தூர்
சிந்துபட்டி மல்லாங் கிணறு திருத்தங்கல்
வாரமாம் சீவில்லி புத்தூர்முக் கூடல்
வடமேற் கழகர் வளர்தாடிக் கொம்பும்
நாரசிங்கம் திருமோகூரும் மேலூர்
நவில்திருக் கோட்டியூர் புல்லாணி மெய்யம்
வீரம்செய் கொந்தகையாம் குந்தீ நகரும்
மேவிக் குமாரத்துடன் தாவிக் கொழுத்திங்கே—
மேயுதடய்யே!

137. ம்ருகமதம் — கஸ்தூரி. ம்ருகமதம் கமழ் காவேரித் திருமுகத்துறையும், பொருநைச் சங்கணித்

*துறையும் நாடி என்க. காராளர்—வேளாளர். மல்லேனி அழகருசாமி என்பவர் சௌராட்டிரர். மல்லேனி என்பது அழகர்சாமியின் குடும்பச் சிறப்புப் பெயர். பிராட்டிப் பத்தென்பது இப்போது விராட்டிப்பத்து என வழங்கப் படுகிறது. வைகைப் புரவு—வைகைநீர் பாயும் வயல். தீரம் குருவித்துறை—தீரமாகிய குருவித்துறை. தீரம்—ஆற்றை அடுத்துள்ள நிலம். நாரசிங்கம்—நரசிங்கம். ஆனைமலையில் நரசிங்கப்பெருமான் கோயில்கொண்டு எழுந்தருளி இருக்கும் பிரதேசம்.*

*சிங்கன் சின்னக்குழுவனைக் கண்ணிகுத்த அழைத்தல்*

*வசனம்*

அடே! வாராய் தம்பீ! சின்னக் குழுவா!
ஆதிமத்யாந்தம் இன்றிவாழ் சுந்தரன்
அகிலாண்ட கோடி பிரம்மாண்ட நாயகன்
மதிதவழ் குடுமி மலையலங் காரன்
நதிமிகு நாட்டில் துதிவயற் காட்டில்
ஒருசுமை கொம்பில் ஒட்டுகன் தடவி.
வெருவரும் தட்டு விரித்திங்கு வைத்தேன்;
கண்ணிகள் கூடிக் கட்டுவோம் வாடா!
நல்லதாகக் கட்டுமைய்யா! பெரியசிங்கக் குழுவனாரே!

வசனம் 2. *ஆதிமத்யாந்தம் இன்றி—தொடக்கமும் இடையும் முடிவும் இன்றி. வெருவரும்-அச்சம் தோன்றும்.*

*சிங்கன் சின்னக்குழுவனைக் கண்ணி கொண்டுவரச் சொல்லுதல்*

*தரு*

*இராகம்—செஞ்சுருட்டி* *தாளம் சாய்ப்பு*

*பல்லவி*

138. குழுவா! கண்ணிகள் கொண்டுவா—கூர்வேல்கொண்ட

*அனுபல்லவி*

வழுவா துள்ளான் முழுதும்—வதிந்த சமயம்
இங்கே—குழுவா!

*சரணங்கள்*

மாடப் புறாக்களும் மணல்வெளிக் காடைகளும்
பேடைக் குலங்களுடனே கொஞ்சுது வஞ்சக்—குழுவா !
குதிரையின் கண்ணியும் கொடுவிடைக் கண்ணியும்
எதிரெதிராய்க் குத்துவோம் எத்துவோம் மெத்தக்—
குழுவா !
சாவளி தனைப்பாடித் தருணமிதென்று நாடித்
தேவடியாரைக் கொண்டாடித் தெளிந்து கூடிக்—
குழுவா !

*138. உள்ளான்—பறவை வகைகளில் ஒன்று. வதிந்த—தங்கிய. விடைக்கண்ணி—காளையின் வால் மயிரால் செய்த கண்ணி. எத்துவோம்—ஏமாற்றுவோம். சாவளி—ஜாவளி—ஒருவகை இசைப்பாடல். தே அடியார்—தெய்வத் தொண்டர்.*

*வசனம்*

*சின்னக் குழுவன் கூறுவது*

கொண்டுவந்து உகந்து தந்த கண்ணிகளைப் பந்தஞ்செய்து முந்தவேட்டை யாடின சுந்தரராச மூர்த்தியே போல இந்த வேட்டையாடுமையா ! சொந்தக் குழுவனரே !

வசனம் 3. *பந்தம் செய்தல்—கட்டுதல்.*

*சிங்கக் குறவன் கூறுதல்*

*தரு*

*இராகம்—நாட்டை* *தாளம்—திரிபுடை*

139. கருத்தக் கண்ணிகளை இருத்திக் குத்து—கொடுங்
காடைக் குலம்படும் சாலவே
பெருத்த கண்ணிகளைப் பிரித்துக் குத்து—புழுப்
பிறக்கி விழும் பரபரக்கவே
சிவத்த கண்ணிகளில் பலத்துக் குத்து—வரும்
சிச்சிலிகள் படும் மிச்சமாய்
அவத்தனல்ல நல்லசமத்தன்—உனையன்றி
ஆர் எனக்குரிமை பாரடா!

காமனுடனே இராமன் அடலுடை
வீமன் இலக்கிய சோமனும்
மாமன் முதலிய சேமவனசரர்
தாமும் வருக விடாமலே.

*139. அடல்—வலிமை. சேமம்—பாதுகாப்பு. வன சரர்—வேடர். வனசரர் தாமும் விடாமல் வருக—'என்று ஒட்டும் தட்டும் கண்ணியும் சதியும் வைத்து மறைந்து நின்றனர்' என அடுத்த பாடலில் முடியும்.*

*காடைகள் விழுதல்*

*அறுசீர்கழி நெடிலடியாசிரிய விருத்தம்*

**140.** என்றிவர் ஒட்டும் தட்டும் இருங்கண்ணி சதியும்வைத்து
நின்றனர் மறைந்தே அந்த நிமிடத்தில் நிமிட மாகிப்
பன்றிபோல் முட்டித் தட்டுள் படபடென் றோசை யிட்டுக்
கன்றிட வெளியாம் செவ்வற் காடைகள் விழுந்த தாமே.

*140. சதி—வஞ்சம். நிமிடமாகி—நெருக்கமாய்.*

*சிங்கன், பறவைகள் கண்ணியில் அகப்பட்டமை*
*சின்னக் குழுவனிடம் கூறுதல்*

*தரு*

*இராகம்—ஹமேர் கல்யாணி* | *தாளம்—ரூபகம்*

*பல்லவி*

**141.** வைத்தகுறியும் தைத்தவேட்டும் வாய்ப்புத்தான்
சின்னு!—வெகு
வாய்ப்புத்தான் சின்னு!

*அநுபல்லவி*

பைத்த அரவில் தித்தி நடஞ்செய்
பரமசுவாமி கிருபையினலே—வைத்தகுறியும்

*சரணங்கள்*

ஒட்டுகளெல்லாம் சிட்டுவகைபட் டுழன்று மாயுதே
தட்டுவாணிசொல் கெட்டி யாண்பிள்ளை
தஞ்சம் என்றெணித் துஞ்சினலென-வைத்தகுறியும்

தட்டுநிறைய நூறுகாடைத் தலைகள் பட்டுதே
துட்டுளாரைக் கணிகையாசைச்
சுருக்குக் கண்ணிகள் நெருக்கிக் கோறல்போல்—
வைத்தகுறியும்
வன்னப் புறவின் குலங்கள் விரிக்கும் வலையுட்பட்டுதே
சின்னப் புழுக்கை சிறுக்கி கண்வலைச்
சிக்கிப் பிரபுக்கள் வெட்கிப் போதல்போல்—
வைத்தகுறியும்
கொள்ளை கொள்ளையாய்க் குருவி வேட்டையும்
கூடிவந்துதே—கை—கூடிவந்துதே
கள்ளச் சிறுக்கி இங்கிதச் சிங்கி
கறிசெய்தாலல்லோ உருசியாமிது—வைத்தகுறியும்

*141. பைத்த—படமுடைய. தித்திநடம்—தாள ஒத்துக்கிசைந்த நடனம். உழன்று—வருந்தி. தஞ்சம்—புகல். துஞ்சினுல் என—செத்தாற்போல். கணிகை—பரத்தை. கோறல்—கொல்லுதல். இங்கிதம்—குறிப்பு.*

*சிங்கன் சின்னக்குழுவனை நோக்கிக் கூறல்*

*அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்*

142. இன்னநற் பறவை யெல்லாம் எடுத்தந்த வலையிற் கட்டிப்
பின்னையும் பெரிய கொக்குப் பிடித்திடப் பிணைத்த கண்ணி
முன்னர்வைத் திருக்கும் சிங்கன் முன்வெற்றி மொழிய வந்த
சின்னனை வெறித்து நோக்கிச் செய்கையைச் செப்பு வானே.

*தரு*

*இராகம்—மாயாமாளவகவுளை* *தாளம்—ஆதி*

*பல்லவி*

143. பேசாறேடையே—சற்றே—பேசாறேடையே

*அனுபல்லவி*

கூசாமல் உறைகொக்குக் கூட்டங்கள் கலையுது-பேசாறே

*சரணங்கள்*

பலமுக மீனும் பரிவுடன் பாயும்
வலைமுனை கல்லை மடுத்தாற் போல்வந்து—பேசாறே
பானகம் பருகும் பருவத்தில் வரும்
தூநிறக் கரும்பின் அரும்பெனவே குத்திப்—பேசாறே
காசாம்பூப் போன்ற பெருங் கண்ணியிலே
ஆசாரக் கள்ளக் கொக்கும் அகப்படும் வேளையிங்கே
—பேசாறே
தாராளமாய் இறங்கித் தவருதே
ஆராலும் கெண்டைகெளி றயிரையும் கொத்தும்நேரம்
—பேசாறே
கம்பிளிப் பயல்கள் சொல்லைக் கதியீனன்
நம்பிய படிக்கு வந்து நாரை இறங்கும் நேரம்—பேசாறே
மன்னவர் வழங்கும் வரிசையை அருகே
சின்ன மனிதன் வந்து சிதைப்பது போலவந்து-பேசாறே
மாயாமாளவ கவுளையிற் பாடித்
தாயாம் லயமிந்துஸ்தானி நடனந்தனில்—பேசாறே

*143. பேசாறேறடையே — பேசாதிரு அடே ஐயா. கல்லை மடுத்தால் போல்—கல்லை எறிந்தாற் போல். காசாம்பூ—காயாமலர். கதியீனன்—புகலிடம்இல்லாதவன்.*

*அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்*

144. அகப்பட்ட கொக்கை யெல்லாம் அலகிட்டு வலையிற்
பெய்து
முகப்பட்டம் அணிந்த சிங்கன் மொழிகுவான் முன்னை
நாளில்
சகப்பட்டம் பெற்ற ராமசந்திரன் பலிபுக் கெய்தார்
மிகப்பட்ட யங்கொள் கண்ணன் வினைப்புரு வீட்டினரே.

*144. அலகிட்டு—எண்ணி. பலிபுக்—ப₃லியைப் புசிக்கும் காக்கை. ராமன் பலிபுக்கை எய்தான் என்றது-இராமன் சித்திரகூட பர்வதத்தில் தங்கியிருந்தபொழுது இந்திரன் மகனை ஜயந்தன் என்பவன் தீய எண்ணங்கொண்டு*

*காக்கையுருவொடு சீதையைத் தீண்டி வருத்த, இராமன் அதன்மேல் அம்பேவித் தண்டித்த செய்தியைக் குறித்தது. பட்டயம்—சாஸனம். கண்ணன் வினைப் புரு வீட்டினர் என்றது, புருவுருவோடு தன்னைக் கொல்ல வந்த அசுரனைக் கண்ணன் கொன்ற செய்தியை உட்கொண்டு கூறியது. புரு என்றது இங்கே கொக்கினை.*

*சிங்கன் குருவிவேட்டை தாழ்ந்த தன்று என்று கூற*
*சிங்கியை நினைத்துப் புலம்புதல்*

**145.** ஆதலாற் குருவிவேட்டை அவமதிப் பின்றியார்க்கும்
ஓதலாம் மகிமை என்றே உயர்ந்தபே ருணர்வு ளோர்க்
கூதலா மனதறிந்து சுகந்தந்த சிங்கி தோளில் [கும்
காதலாய் நினைந்து நெஞ்சம் கரைகுவான்
அறைகுவானே.

*145. ஆதலால் குருவிவேட்டை யார்க்கும் அவமதிப் பின்று; உயர்ந்த பேருணர்வுளோர்க்கும் பெருமை ஓதலாம் என்று கூறி, மேலும், சிங்கி தோளில் காதலாய் அறைகுவான் என முடியும்.*

*தரு*
*இராகம்—இந்துஸ்தானி பியாகு* *ஆதிதாளம்*
*பல்லவி*

**146.** மதிமுக திலகமும் வாடையும் மஞ்சள்
புதுமணக் கோலமாய்ப் புணராளோ சிங்கி—இன்னம்
புணராளோ சிங்கி

*அனுபல்லவி*

ததியெனத் திரண்டு கதியெனும் இரண்டு
தனங்களும் புதையத் தழுவாளோ சிங்கி

*சரணங்கள்*

தாழ்சடை யுரக நீழலில் விரக
தாபமும் ஆறநான் சாயேனோ சிங்கி—மதிமுக
சங்கதி போலும் பொங்கிரு நாலு
சாதிப் பறவைக் குரல் கூவாளோ ?—மதிமுக
தாமரை விழியால் சேமநன் மொழிகள்
சாடை சன்னையும் செய்து மேவாளோ ?—மதிமுக

சந்தனம் களபம் பந்தினும் பெரிய
தன்தனங்களில் நான் அப்பேனோ ?—மதிமுக
சாதி சண்பகப்பூ ஓதியின் முடித்தே
தளிர்ச் சுருள் கடித்திதழ் தாராளோ ?—மதிமுக
தரளவெண்ணகையால் உவகை செய்ததரத்
தண்ணமுதூறல் தருவாளோ ?—மதிமுக
தருணமென் றமுதம் தருநிலை தெரிந்தே
தாடனம் புரியச் சலியாளோ ?—மதிமுக
சங்கத் தழகர் தடஞ்சுனை சூழும்
தங்கச் சிமய நெடுங்கிரிவாழும்—மதிமுக
சிங்கக் குழுவனை மகிழ்வொடு மேவும்
சிங்கிக் குமரியின் எழில்சுதை தூவும்—மதிமுக

*146. ததி — தயிர். தாழ் சடை உரக நிழலில்— தாழ்ந்து தொங்குகிற பின்னலாகிய பாம்பின் நிழலில். சங்கதி—சங்கீதம். சேமநன்மொழி—இன்பம் தரும் நல்ல சொல். ஓதி—கூந்தல். சிமயம்—உச்சி. சுதை—அமுது.*

*புட்கள் தப்பிப் போவதைச் சின்னன் புகலுதல்*
*அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்*

147. நினைந்தவர் புலம்பல் என்னும் நெறிப்படி மொழிந்து சிங்கன்
வனைந்தமட் குடங்கள் உண்ண மனம்கனிந் திருந்த வேளை
முனைந்தபோர் முகத்து வெற்றி முற்றிய தும்பையந்தார்
புனைந்தமெய்ச் சின்னன் புட்கள் போவதைப் புகலுவானே

*147. தும்பையந்தார்—பெருவீரச்செயல் புரிவதற்கு அறிகுறியாக வீரர் அணியும் தும்பைப் பூமாலை.*

*தரு*

*இராகம்—பியாகு* *தாளம்—ரூபகம்*

*பல்லவி*

148. பூமியெல்லாம் மேய்ந்து புள்ளினம் போகுதடய்யே!
—வானில் போகுதடய்யே.!

*அனுபல்லவி*

சாமி அழகர் சோலைமலைவாழ் சந்நிதி மேலே—நாளும்
தஞ்சமெனவே அஞ்சலி செய்யும் தவசிகள்போலே
—வலை
தப்பி அப்பாலே—வளமிகு —பூமி

*சரணங்கள்*

மீனவன் இழை ஆணிமுத்து விதான மேபோலும்—பெரு
வெள்ளையன்னமும் பிள்ளையன்னமும் மேவுதலாலும்
—இரை
வேண்டிமென் மேலும் —பூமி
காதலாய்வஞ்சி யோது கிருஷ்ணையங்கார் கவிநேராய்—
முழுக்
கருப்பில்லாமல் மாலலங் காரன் நற்சீராய்—இரு
கண்கொடு பாராய் —பூமி
தாயகமிசை பியாகு ரூபக தாளமோடாடி—வரு
தலையருவியை ஆடினோர் பவ சமுகம் போல்ஓடி—வேறு
தன் திசையை நாடி—வளமிகு —பூமி

*148. அழகனை தஞ்சமென்று சோலைமலையில் வாழும் தவசிகள் வினைக்கட்டறுத்து வீடடைதல் போலப் புள்ளினங்கள் வலையைத் தப்பி வளமிகு பூமியெலாம் மேய்ந்து அப்பால் போகுது என்றவாறு. மீனவன்—பாண்டியன். இழைத்தல்—செய்தல். விதானம்—மேற்கட்டி. வஞ்சி என்றது இக்குறவஞ்சி நாடக நூலை. தடையின்றி வரும் கிருஷ்ணய்யங்கார் கவி போலவும். அழகருடைய நல்ல புகழ் போலவும். புள்ளினம் தடையின்றி பூமியெங்கும் பரவி மேய்ந்து போகுது என்றவாறு. கருப்பு—குற்றம். பவசமூகம்—பாவக்கூட்டம். சோலைமலையிலுள்ள தலையருவியில் ஆடினோர் பாவங்கள் தொலைந்தமை போல. புள்ளினம் போகிறது என்றவாறு.*

*(149)சிங்கனைச் சின்னன் தேற்றுதலும், (150)சிங்கன் சின்னனிடம் சிங்கியைத் தேடித்தருக என்று கூறுதலும் (151) அதற்குச் சின்னன் கூறும் மறுமொழியும்.*

*அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்*

**149.** வினவின தில்லையோ காம வெறிபிடித் தார்கள் சிந்தை
அனவரத முங்கலங்கி அரற்றுவர் அகிலத் தென்றும்
கனவிலும் நினைவி தாகக் காணும்உன் கருத்துச் சிங்கா
மனவலி நிலைக்கச் சிங்கி மாயையை மடக்கு வாயே.

*149. சிங்கா! அகிலத்து காமவெறி பிடித்தார்கள். சிந்தை கலங்கி அனவரதமும் அரற்றுவர் என்று வினவின தில்லையோ? என இயைக்க. உலகத்தில் காமவெறிபிடித்தார் மனம் கலங்கி எப்போதும் புலம்புவர் என்று கூறுவதைக் கேட்டதில்லையோ? என்றவாறு. சிந்தை—மனம். அனவரதமும்—எப்போதும். அரற்றுதல்—புலம்புதல். வினவின தில்லையோ—கேட்டதில்லையோ? உன் கருத்து, கனவிலும் இது நினைவாகக் காணும் என இயைக்க. கனவுநிலையிலும் உன் மனத்தில் இச் சிங்கி நினைவே தோன்றும் என்பது பொருள். சிங்கிமாயை—சிங்கியின் மீது கொண்ட காதல். மடக்குதல்—மிகவிடாது அடக்குதல்.*

**150.** மாயையைக் கடந்தோர் போல வழுத்தினை சின்னா முன்னாள்
வேயைவென் றிடுதோட் சின்னி வேட்கையால் வேட்டை போனாய்
தாயைநிந் தித்த செல்வி தானென ஞானம் சொன்னாய்
சாயைபோல் தொடர்ந்து சிங்கி தன்னைநீ தருவை சார்ந்தே.

*150. மாயையைக் கடந்தோர்—துறவிகள். வேய்—மூங்கில். சாயை—நிழல். துறவிகள் போலக் காதலை அடக்கு என்று கூறினை! முன்பு சின்னிமீதெழுந்த காதலால் வேட்டைமேற் சென்ற நீ, தாயைப் பழித்த மகள் போல எனக்குப் புத்தி புகட்டினை! இனி அறிவு கூறுதலை*

விட்டு, நிழல்போலச் சிங்கியைத் தொடர்ந்து தேடிக் கண்டு தருக—என்று சின்னனை நோக்கிச் சிங்கன் கூறியவாறு.

**151. தருவை யென் றுரைத்தாய் ஏரி தான்மிக வற்றினாலும்**
**மருவுகுத் துக்கல் லுக்கு வாட்டம் ஏதேனும் உண்டோ?**
**கருவிழி முன்னர் வந்தால் காட்டுவேன் அதற்கு முந்தி**
**பருவநா கணையும் நாட்டிற் பதியையும் பாரென் றானே.**

*151. சிங்கியைத் தேடித்தா என்று எளிதாகச் சொல்லிவிட்டாய். என்னோடு நெருங்கிப் பழகியும் என் துன்பம் உனக்குத் தெரியவில்லை; ஏரி வறண்டாலும் குத்துக்கல்லுக்கு வாட்டம் உண்டோ? சிங்கி என் கண்ணெதிர் வந்தால் காட்டுவேன்; முதலில் வளம் நிறைந்த அழகர் நாட்டுள்ள ஊர்களிலும் நீ தேடிப்பார் என்று சிங்கனை நோக்கிச் சின்னன் கூறியவாறு. குத்துக்கல்—ஏரியில் உள்ள நீரின் அளவு காட்ட நடப்பட்ட கல். பருவநாகு—சூல் முதிர்ந்த சங்குகள்.*

*சிங்கன் புலம்புதல்*
*திபதை*
*கோலாட்டப் பாட்டுச் சந்தச் சிந்து*

*இராகம்—நவரோசு* *தாளம்—திரிபுடை*

**152.** *சிங்கியை நான் எங்கேயென்று தேடுவேனோ?*
*—நாடுவேனோ?*
*பங்கியென்ற சங்கதிபோல் பாங்கன் முன்னே*
*—ஏங்குவேனோ?*
*அன்னமே பசுங்கிளியே அல்லல் போகச் சொல்லுவீரே*
*மின்னிகர் இடைப் பெண் சிங்கி மேவியே வாழ்ந்திடும்*
*ஊரே!*
*தோகை மயிலே குயிலே! சொல்லுவாய் நாணை*
*வந்தானே!*
*பாகைவென்ற தேன்மொழியாள் பதியுமந்த*
*இடந்தானே*
*பொன்னிறமாகிய மானே! புள்ளினம் போற்றும்*
*கோமானே!*

கன்னிகுற மின்னை நானே காணுமிடம் சொல்நீ தானே
திருவரங்கம் பெரியகோயில் தேடியே எங்கும்
பார்த்தேனே
பருவதங்கள் போற்றும் திருப் பதிமலை யெல்லாம்
பார்த்தேனே
திருவெள்ளறை யூர்மலைமேல் தேடியே
கொண்டாடினேனே
மருவனம் சூழும் திருநீர் மலையிலும் சுற்றிப்
பார்த்தேனே
சங்கரன் போற்றிய திருத்தங்கல் மலைசார்ந்தும்
காணேனே
கங்குல் பகல்தேடிக் கடிகாசலத்திலும் காணேனே
வானமா மலையில் என் கண் வலைவீசி அறிந்தேனே
தேனமர் சோலை வாட்டாற்றுச் சிகரிதேடித்
திரிந்தேனே
ஓது திருக்குறுங்குடியூர் மலையுற்றும் காணேனே
யாதவாத்திரியினும் வேதாத்திரியினும் பார்த்தேனே
சலதிமோதிடும் சீ சஞர்த்தனமலையினும் பார்த்தேனே
திலகமாய் விளங்கும் அத்திகிரிமீதும் தேடினேனே
சிங்கவேள்குன் றெங்கணும்நான் தேடினதிலும்
காணேனே
பிங்கிமுனி போகும் அகோபிலத்து நுழைந்தும்
பார்த்தேனே.

152. பங்கி—கஞ்சா. அல்லல்—துன்பம். நாணவந் தான்—நாகணவாய்ப் புள். பதிதல்—தங்குதல். புள்ளினம் போற்றும் கோமான் என்றது கருடனை. கடிகாசலம்—தொண்டை நாட்டுத் திருமால் திருப்பதியுள் ஒன்று. இது திருக்கடிகை, சோளஸிம்ஹபுரம் என்றும் வழங்கப் படும். வாட்டாறு—மலைநாட்டுத் திருமால் திருப்பதிகளுள் ஒன்று. சிகரி—மலை. யாதவாத்திரி—யதுகிரி, திருநாராயண புரம். பிருங்கிமுனி என்பது. பிங்கிமுனி எனச் சிதைந்து நின்றது. சிங்கவேள் குன்றம்—ஸிம்ஹாசலம். ஆழ்வார் பாடியது இதுவேயென்றும், அஹோபிலமல்ல என்றும் ஆசிரியர் கருத்து.

*மலையெங்கும் தேடிச் சிங்கியைக் காணாத சிங்கன்,*
*திருமெய்யமலையை அடைந்து கேட்க*
*அது சிங்கி இருக்குமிடம் கூறுதல்*

*அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்*

153. எண்ணரிய வரைமேரு இமயமலை சீசைலம் இயல் அயோத்தி
நண்ணு சாளக்கிராமம் நரநாராய ணாச்சிரமம் நைமிசக் கான்
புண்ணியமாம் மதுரை கயை துவாரகை கோவர்த் தனம் புஷ்கரமும் தேடிக்
கண்ணன் வளர் திருமெய்யக் கருவரையைக் கேட்க நிசம் கழறிற் றன்றே.

*153. நைமிசக்கான் — நைமிசாரணியம். கருவரை— பெருமையுடைய மலை. நிசம் கழறிற்று—உண்மை கூறிற்று.*

154. சிங்கி எங்கும் போகவில்லை, அழகர் திவ்ய நகரமென்ற சீபதிக்குள்
தங்கி நின்றாள்; அறியாமல் சகமுழுதும் தடவி வந்தாய் தறுகட் சிங்கா !
எங்கும் அலையாமல் மலையாமல் வனகிரிக்கேகி எயின மாதர்
தங்கணவா ! சிங்கியுடன் தழைப்பை யென்று சத்யகிரி சாற்றிற் றன்றே

*154. தடவி—தேடி. எயினமாதர்—வேடர் மகள். சத்யகிரி—திருமெய்யமலை.*

*சின்னன் சிங்கனிடம் சிங்கி அடையாளம் கேட்டல்*

155. அப்பொழுது சின்னனும் தன் அரசனெனும் சிங்கனைப் பார்த் தகிலத் தாரும்
ஒப்பறும் உன் மனைவி சிங்கி உயர்ந்தகுணம் குறிகளை யான் உணர்ந்ததில்லை ;

செப்பும் அங்கம் அடையாளம் செய்கை யெல்லாம்
எந்தனுக்குத் தெரியும் வண்ணம்
இப்பொழுது கிருதிஒன்றால் இயம்புகெனச் சிங்கனும்
சற்றியம்பு வானே.

*155, அகிலத்து ஆரும் ஒப்பு அறும்—உலகத்தில் ஒப்பார் ஒருவரும் இல்லாத. கிருதி—கீர்த்தனம். இசைப் பாட்டு.*

*சிங்கன், சிங்கி அடையாளம் செப்புதல்*

*தரு*

*இராகம்—பிலகரி* *தாளம்—சாய்ப்பு*

*பல்லவி*

**156.** மடமாதை அடையாளம்கேள்—வங்கணச்சிங்கி

*அநுபல்லவி*

வடவையொத் தெகின நடைமிரட்டுமா
மாலமும் சாலமும் ஓலமும் சீலமும்
மடலில் வரைகிற வடிவும் நிறைகுற – மடமாதை

*சரணங்கள்*

நீலோற்பல நிறமும்—புத்தகங்கட்கு—
நிகராம் அடிப்புறமும்—உத்தமர்கட்கு
மாலாச் சொலும் குறமும்—தீயருக்குக்கண்
வலையால் செயும் மறமும்
பாதிமதிபோல் பாலமும் கண்விசாலமும்
கொள்கபோலமும் அனுகூலமும்
பச்சை இளநீர்கள் மெச்சு புளகமுள்ள
இச்சைதரும் இருதனக் கச்சையணிதன-மடமாதை
பணைவேய் நிகர்புயமும்—நாராயணியிற்
பதமாய் மொழி நயமும்—குறிகள் சொல்லிப்
பணியாடைகள் கொள் செயமும்—அழகுதேமல்
படப்பூரித்த குயமும்—மூகும்
அளக பாரமும் புனை ஆரமும்—சொல்
உதாரமும் உபகாரமும்

பட்டின் உடை பிணிவிட்டசடை குரல்
எட்டும் உடைமிட றொட்டு துடியிடை—மடமாதை
பாங்கா! இளையமன்ன!—சோலைமலையின்
பதிவாழ் எனது சின்ன!—என்றென்றைக்கும்
பாங்காய் உறையும் பொன்ன!—பாத்திரம் அறிந்து
பரிவாய் உதவும் கன்ன!—கிஞ்சுக இதழ்ப்
பானமும் அபிமானமும் புரிகானமும் குழல்நானமும்
பதுமம்நிகர் இரு கரமும் வளைசெவி
பாசிழைகொள் குமிழ்நாசி சுசிருசி—மடமாதை.

*156. எகின நடையால் வடவை ஒத்து மிரட்டும் மாமாலமும் என்க. அன்ன நடையால் காண்போரை வடவைத் தீ போல ஓட்டும் வஞ்சகமும் என்பது பொருள். எகினம்—அன்னம். ஓலமும்—ஆரவாரமும். சீலம்—ஒழுக்கம். மடல்—பனை முதலியவற்றின் இதழ். வடிவு—அழகு. நீலோற்பலம்—கருங்குவளை. அடிப்புறம்—புறவடி; புறவடிகளுக்கு புத்தகத்தை உவமை கூறுவது மரபு. மால்—பெருமை. பாலம்—நெற்றி. கபோலம்—கன்னம். புளகம்—மயிர் சிலிர்த்தல். பணைவேய்—பருத்த மூங்கில். நாராயணி—பார்வதி. பதம்—இன்பம். குயம்—தனம். மூசும்—மொய்த்த, அடர்ந்து. அளகபாரம்—கூந்தல். ஆரம்—மாலை. உதாரம்—மேம்பாடு. பின்னிவிட்ட சடை என்க. குரல் எட்டும் உடை மிடறு—எட்டு வகைக் குரலையும் உடைய கழுத்தினையும்; ஒட்டு துடி இடை—சுருங்கிய உடுக்குப்போலும் இடையினையும் உடைய. பாங்காய்—நன்றாய். கன்ன!—கர்ணனே!. பரிவாய்—அன்பாய். உதவும்—கொடுக்கின்ற. கிஞ்சுகம்—முள் முருக்கம்பூ. இதழ்ப்பானம்—அதரபானம். கானம்—இசை. குழல் நானமும்—கூந்தலில் அணிந்த கஸ்தூரியும். பாசிழை—பசிய அணிகலன். குமிழ்நாசி—குமிழம் பூப் போலும் மூக்கு. சுசி—சுத்தம். ருசி—சுவையறிவு. ஆகிய இவற்றையுடைய மடமாதை என்க.*

*அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்*

**157. உருவமதில் இரதியைப்போல் ஓசனையில் சுமந்திரன்போல்
ஊழி யத்தில்
கருவமிலா அடிமையைப்போல் கருணையில் தாய்போல்
கலவிக் கணிகைபோலும்
பொருமையில்இப் பூமியைப்போல் பரதமதில் உருவசிபோல்
புனிதம் உள்ள
சொருபஅறிவுடைச் சிங்கிகுணங்களைஎவ்
வகையொடுக்கிச் சொல்லு வேனே.**

*157. உருவம்—அழகு. ஓசனை—யோசனை. விவேகம். கலவி—கலவியில். கணிகை—வேசி. பரதம்—நாட்டியம். உருவசி—ஊர்வசி. சொருப அறிவு—அழகினை அறியும் அறிவு.*

*சிங்கன், திருக்கோட்டியூர் திருமோகூர் மதுரைவழியாகச் சிங்கியைத் தேடிச்சென்று சின்னனுடன் திருமாலிருஞ்சோலை மலைக்கருகில் ஒரு பொழிலில் சிங்கியைக் காணுதல்*

*லாவணி*

*இராகம்—முகாரி* *தாளம்—சாய்ப்பு*

*158. திருமெய்யம் உரைசெய்த மொழிப்படி—சிங்கன்
திருக்கோட்டியைத் தேடி
இருமெய் யம்பெனும் விழிச் சிங்கியை-நினைந்துகொண்
டெழுந்தான் வழிகூடி
திருமோகூர்த் தாளதாமரைத் தண்பணைத்
தேம்பொழில் ஆராய்ந்தே
வருமோ கூர்விழி மங்கை யென்றே—யானை
மலைக்கு வந்தான் வாய்த்தே
தங்களுக்கும் பெயர் தந்தருள் நரசிங்கர்
தாளிணை களைத் துதித்தே—கல்விச்
சங்கம் உறைந்ததமிழ் மதுரைக்கு வைகையைத்
தாண்டி வந்தான் குதித்தே
ஜட்ஜுகள் கலெக்டர் துரைகள் சூபரின்டெண்டு
தாசில்தார்களுக்கும்—குறி*

உட்சுவை யுறச்சொல்லிப் பரிசுபெற் ருளென்ற
    உரைகளெல்லாம் வெளுக்கும்
என்றும் புதுமண்டபம் ரங்கவிலாசம் போல்
    இருப்பதைப் பார்க்கையிலே
சென்றனள் ஒரு நல்உன் சிங்கி சீபதிக்கென்று
    சிலர்சொல ஏற்கையிலே
ஆவணி வடமூல வீதியின் வழியாக
    அழகர்பொன் மலைநோக்கி
லாவணி தாளம் சாய்ப்பு ராகம் முராரி பாடி
    நடந்தனர் சிலைதூக்கி
தல்லாகுளம் திருமாளிகை வடக்குச்
    சாலையைத் தான் கூடி
வில்லாளி கள்இரு வீரரும் நடந்தனர்
    வேடிக்கைப் பதம்பாடி
ராமனே டிலக்குவன் சீதையைத் தேடிமுன்
    நடந்ததுபோலும் செல்வார்
காமரசங்களைக் கனிப்பூ மரங்களைக் கண்டு
    கரைந்துகொண்டிது சொல்வார்.
கன்னலே வாழையே கொழிஞ்சியே சூதமே
    கமுகே பல பலவே
செந்நெலே மாதுளை தென்னையே என்னுடைச்
    சிங்கியைக் காணீரோ ?
மல்லிகை யேதளவே கதிர் பச்சை
    வனமே வன வனமே !
மெல்லியல் மோகனச் சிங்கி இருந்திடும்
    வேந்தலை சொல்வீரே !
அருளும் மருளும் என அறிவும் கலக்கமுடன்
    ஆளியும் சிங்கமும்போல்
இருளும் இடைவெளியும் இலங்கிடும் சோலைவழி
    ஏகினர் இருவரும் மேல்
வடமலை அப்பன்திருப் பதியுடன் பொய்கையும்
    மண்டபங்களும் கடந்தே

திடமிகு சிங்கனும் சின்னனும் சென்றனர்
திருமால் அருளாலே.

*158. திருக்கோட்டி—திருக்கோட்டியூர். இரு மெய் அம்பு எனும் விழி—உண்மையான இரண்டு அம்புபோலும் விழி. சிங்கன் என்று காணும் தன் இனத்தவரும் பெயரிட்டுக்கொள்ளும்படி அருள்புரிந்தமையால் தங்களுக்கும் பெயர் தந்தருள் நரசிங்கர் என்றான். நரசிங்கர்—யானை மலையிற் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள ஸ்வாமி. வெளுக்கும்—பிரசித்தம். ஆவணி வட மூல வீதி—வடக்காவணி மூலவீதி. தல்லாகுளம் திருமாளிகை—தல்லாகுளத்திலுள்ள பெருமாள் கோயில். இரு வீரர்—சிங்கனும் சின்னனும காமரசம் — காமச்சுவையை எழுப்பும் பொருள்கள். கொழுஞ்சி—நாரத்தை. சூதம்—மாமரம். பலவாகிய பலா மரமே என்க. மாதுளையே என்க. தளவு—முல்லை. வ(ன்)ன அனமே! என்க. வேந்தவை—அரசர் சபை.*

*அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்*

**159.** அப்பொழுது சோலைமலைக் கருகுவிரிபூவனத்தின்
அகடு வாழும்
முப்பழமும் உதிரும்முதிர் சோலையெல்லாம் மாலுடையிம்
முருடர் தேடத்
துப்புறவாம் நதிமணலின் படுகையில்பச் சிளங்கமு
கந் தோட்டத் தூடோர்
செப்பளவாம் கனிநிறை தேமாநிழற்கண் நின்று
சிங்கி சிரிக்கின்றாளே.

*159. விரிபூவனம்—மலர்ந்த பூக்களையுடைய சோலை. அகடு—உள்ளிடம். முப்பழம்—மா, பலா, வாழை என்பனவற்றின் பழங்கள். முருடர்—முரடர். ஓர் செப்பு அளவு ஆம் கனி—ஒரு செப்புப்போலும் பழம். தேமா—இனிய மாமரம்.*

160. சிரித்தகுற வஞ்சியைச்சிங் கனும்பார்க்கக் கணவனை
அச் சிங்கி நோக்கத்
தரித்திரருக் கிருகோடி தனங்கிடைத்த தென
மனங்கள் சந்தோஷித்துப்
பொருத்தமிகு காதலெனும் கடல்கள்கரை புரண்ட
தெனப் பொங்கிப் பொங்கி
ஒருத்தரைமற் றொருத்தர்முறை முறைதழுவி முத்த
மிட்டொன் றுரைப்ப ரன்றே.

*160. தரித்திரர்க்கு—மிடியுடையோர்க்கு. இருகோடி—இரண்டுகோடி. தனம்—செல்வம் (பணம்).*

*சிங்கன் குறத்தியை வினவுதல்*

*ஜாவளி*

*தேசிக தோடி ராகம் — இந்துஸ்தானி தாளம்*

*161. நீ எங்ஙனே நெடு நாளிருந்தாய் பெண்ணே !
தாய் எங்ஙனே என்று தேடிஎங் கன்றெனவே
தஞ்சைப்பதி வனம் ஆடலூர் மஞ்சக்குப்பமும் கூடலூர்
சம்பைப்பதியும் நான் கூடவே ரம்பப் பிரியமுடன்
தேடவே—நீ எங்ஙனே
அரே தொம்மென—தத்தோம் தரிகிடதக—தாம் என
தக்கத் தக தகுதிகூ—தத்தீங் தத்தீங் திங்தா—தொம்
தோம் தோமென்றுடி
நாயகன்மேல் விசுவாசமும் நேசமும்
நங்கைக் கழகென வேதமே
அங்கைக் கனியென ஓதுமே
துங்கப் புதுமலர் சூடவே
சிங்கக் குழுவன் நான் தேடவே—நீ எங்ஙனே
தேனும் தினையிடி மாவுமே—சீனிகற்கண்டு மேதி நெய்
தீனிக்குத் தகுமானநொய்—தேவாமிர்தமென
விருந்திடப்
பாவாய்! உனைநம்பி இருந்திட*

*தாம்—இத்தா—தகதிக தகுதிகு—தோம் தத்தேய்—*
*தகஜணு தகதிமி—*
*தத்தாரேத் தத்தாரே—த்தாம் தாம் தாமென்றுடி—*
*நீ எங்ஙனே.*

*161. தஞ்சைப்பதி—தஞ்சாவூர். வனம் ஆடலூர்—அழகிய கூத்து நிகழும் இடமாகிய சிதம்பரம். சம்பைப் பதி—காவிரிப்பூம்பட்டினம். ரம்ப—நிரம்ப, மிக. மேதி நெய்—எருமை நெய். தகுமான—தக்க. நொய்—குறுணை.*

*குறத்தி கூறல்*
*ஆந்திர சுசுபத்திய சந்தம்*

**162.** மாசொன்றிலாத முழு மதியுனது வதனமே
வண்டேறு செய்யதா மரைவிழிகளே
நாசிதான் குமிழ்மலரை நகைசெய்யுமே செவிகள்
நவில் வள்ளையைப் பாரில் நடவி விடுமே
வீசும் இருதோளும் வெல்லுமே தண்ணுமையை
விரிவாம் உன் மார்புதான் விழைவுதருமே
தேசுலாவிய இடையும் நேசமாம் இருதுடையும்
செய்யதாள் நடையும் மயல்செய்ய வருமே
ஆசைமிக மீறுதே இலவிதழ் அருந்த வருவாய்
வாசமிகு மாலையும் புனுகும் வண் களபமும்
பாசினிலை ஏலமும் பிளவு பாதியும் தருதி
தேசம் இசையேறுநர சிங்க வெயினு !

*162. வதனம்—நெற்றி. நடவி விடும்—ஓட்டும். தண்ணுமை—முழவு. விழைவு தரும்—ஆசையைத் தரும். தேசு—ஒளி. மயல்—காம மயக்கம். பாசினிலை என்றது வெற்றிலையை. பிளவுபாதி—பாதிப்பாக்கு.*

*குறவன் குறத்தி வினவிடை*
*ஏசல் சந்தச் சிந்து.*

**163.** சந்திரன் போலத் தளளென்று
தாடையிலே அடிப்பதென்ன? சிங்கீ!—நல்ல

சாதியுலாந்தாக் கமலச்சோடு
வச்சிரத் தோடிதுதான் சிங்கா!
முந்தியகா திரண்டினும் பூ
முளரியினும் சிவந்ததென்ன? சிங்கீ—சந்திர
முருகு பொடியிரு கோடி பெருகு
குருவிந்தமல்லோ சிங்கா!
எந்திரமுக் கோணம் என
இசைந்த பச்சைப் பலகை எதோ? சிங்கீ?—விலை
எழுதரிய மகிமைபெற்ற கருடப்பச்சைப் பாவிலியே
உந்தியுறை இடைதனிலே ஒட்டியொளிர் [சிங்கா!
பணியாது சிங்கீ! கன
யோகமுற்ற பேர்கள் கட்டும் நாகர்ஒட்டியாணம்
என்பார் சிங்கா!

*163. தாடை—கன்னம். உலாந்தாக்கமலம்—வயிர வகையில் ஒன்று. உலாந்தாக்கமலமாகிய உயர்ந்த வயிரத் தால் செய்யப்பட்ட இரண்டு கோடு இது என்றவாறு. முளரிப்பூவினும் என மாறுக. முளரி—தாமரை. சந்திர முருகு—பிறை வடிவமாய் அமைந்த ஒரு வகைக் காதணி. பொடி — சன்னம் — சிறிய இரத்தினம். குருவிந்தம்—மாணிக்கம். காதிரண்டினும் சிவந்தது, சந்திரமுருகிற் பதித்த ஒரு சன்னம் இரண்டு கோடியளவில் விலை மிகும் மாணிக்கக்கல் என்றவாறு. பாவிலி—ஒருவகைக் காதணி.*

*இப்படி மொழிந்த சிங்கியுடைய அணிதுணி முதலியவைகளைக் கண்டு ஐயுற்று சிங்கன் வினவலுக்குச் சிங்கிதரும் விடை*

*திபதை*

**164.** *பூரத்தைப் போலுன் கழுத்தை வளைத்துப்*
*பொருந்தும் பணிதியென் சிங்கீ!*
*ஆரத்தனமுள்ள ஆண்டாள் அளித்த கிள்ளட்டிகை*
*பாரடா சிங்கா!*

கோவைக் கனிகளும் கொம்பேறிமூக்கனும்
கொங்கைக்கு மேலேது? சிங்கீ!
கோவில்திருமலை நம்பி தரும் பொன்கொடியுடன்
தாயித்துச் சிங்கா!
தாமரைக் காயி தெனக்கா திரண்டிலும்
தாலாடுவ தென்ன? சிங்கீ!
சோமன் எனும் சீனிவாச நம்பி தந்த சொன்னச்
சிமிக்கி காண் சிங்கா!
முன்கை யிரண்டினும் இந்திர கோபங்கள்
மொய்த்துக் கிடப்பதென்? சிங்கீ!
என்னைக் குதவிசெய் எட்டப்ப பூபன்வந் தீய்
துவர்க்கைக்கட்டு சிங்கா!

*164.* கிள்ளட்டிகை—ஒரு கழுத்தணி. தாயித்து—மந்திரத்தகடு அடங்கியதும் மார்பில் கொடியுடன் அணியத்தக்கதுமான ஒரு அணி. சோமன்—குபேரன். பணிதி—பணி—ஆபரணம். இந்திரகோபம்—பட்டுப்பூச்சி. இந்திரகோபம் போலும் நிறமுடையதனை இந்திரகோபம் என்றான். துவர்க்கைக்கட்டு—கையில் அணியத்தக்க பவளத்தாலான காப்பு (ரக்ஷை). எட்டப்ப பூபன்—எட்டயபுரத்து அரசர்.

இராகம்—செஞ்சுருட்டி தாளம் ஆதி

165. முத்திரை மோதிரம் ஏதடி? சிங்கீ!
முத்தமிழ் மாறன் கொடுத்ததே சிங்கா!
மெத்தெனும் தோள்வங்கி ஏதடி? சிங்கீ!
வெற்றிகூர் சோழன் விடுத்தனன் சிங்கா!
குத்துணிப் பாவாடை ஏதடி? சிங்கீ!
கொச்சியாள் வேந்தன் கொடுத்தனன் சிங்கா!
மத்தியில் பொட்டுனக் கேதடி? சிங்கீ!
மலையாள மன்னர் வழங்கினர் சிங்கா!
ஆரணிச் சல்லாவும் ஏதடி? சிங்கீ!
அந்தவூர் வேந்தன் அனுப்பினர் சிங்கா!

*வாரணி பூண்முலைக் கச்சேதடி? சிங்கி!*
மைசூராள் மன்னர் வழங்கினார் சிங்கா!
*காரணம் கேளாயோ கணவனே சிங்கா!*
கச்சிக்குப் போவோம் வா கப்பல்மேல் ஏறி.

*165. மாறன்—பாண்டியன். குத்துணிப்பாவாடை—சிறுபாவாடை. கச்சி—காஞ்சி.*

*முடுகு சந்தச் சிந்து*

**166.** களபச் சந்தனம் பூசிக்கொண்டு—கற்றை
விசிறி வீசிக்கொண்டு
கற்றோர் புகழ் பேசிக்கொண்டு—கைகள் கோர்த்து
வீசிக்கொண்டு
கச்சிக்குப் போவோம் வாடா கணவ! நாம் கப்பல்
மேல் ஏறிக்கொண்டு.

*166. கற்றைவிசிறி—மயில்தோகை விசிறி.*

*கப்பல் சிந்து*

**167.** ஏலேலே பெரியாழ்வார்—எங்கள்—இளையாழ்வார்
துணையாமே
அழகர் கப்பல் எழுந்து—பொன்னித்திரு—அரங்கர்
முகப்படித்துறையில்
மழைமுகில்போல் இழிந்து சிந்தாமணித்துறைக்
காவிரி வழியாய்க்
குழலிசை மால் கோவிலடி—திருக்—குடந்தை
கண்ணபுரம் கூடிப்
பழகிய சுந்தரராசன்—நாக—பட்டணத்—
துறைமுகத்தில் படிந்து
நிழல் சுழி தனுக்கோடி திருவணை புல்லாணி
நிட்டைபுரி வாட்டாறு திருவனந்தபுரம்
கழனிசெய் சனார்த்தனம் சேர்த்துவாரகையும்
கண்டுவட கடல்சுற்றிப் புரிசெகன்னாதம்
பழமைபெறு திருவல்லிக்கேணியெம் பெருமான்

பார்த்தசாரதி தந்த பரிசில்களும் வாங்கி
அழலவிர் பொன் மணிகொண்டு தலசயனம் தாண்டி
அழகர்திரு மலைதேடி வருகுதடா! கப்பல்!
ஏலேலோ பெரியாழ்வார்—எங்கள்—இளையாழ்வார்
துணையாமே.

*167. இளையாழ்வார் — இராமானுஜர். திருவரங்கர் பொன்னித் திருமுகப்படித்துறை என்க. இழிந்து— இறங்கி. நிழல்சுழி—நிழலையும் சுழிக்கின்ற. திருவணை யாகிய புல்லாணி. நிட்(ஷ்)டை—தியானம். கழனி—வயல். அழல் அவிர்—அக்கினிபோல் ஒளிவிடுகின்ற. பொன்னும் மணியும் என உம்மை விரிக்க. தலசயனம்—கடல்மல்லை.*

நலங்கு

168. வாகுவும் நால் மந்தரமே! வாசவன் பிரம்மாந்தரமே!
நாகுபுகழ்க் கந்தரமே!—நாமங்களும் சுந்தரமே!
மாகரிலார் தந்தரமே! வகுப்பதெல்லாம் தந்தரமே!
பாக நுசுப் பந்தரமே! பாதகம் அப்பியந்தரமே!

*168. நால்வாகுவும் என்க. நான்கு தோளும் என்பது பொருள். மந்தரம்—மந்தரமலை போலும். வாசவன் பிரம்மாந்தரமே—இந்திரனும், பிரமனும் ஆகாயத்தில் நின்று அழகரை சேவிக்கின்றனர் என்கை. நாகு—சங்கு. கந்தரம் — கழுத்து. மாகரில் ஆர் தம் தரம்—தேவருள் தமக்கு (அழகருக்கு) எவர் ஒப்பாவர். வகுப்பது எல்லாம் தம் தரமே—பாகுபாடு செய்து படைப்ப தெல்லாம் அவ்வழகருடைய தகுதியே. பாகம்—நடுவிலுள்ள. நுசுப்பு அந்தரமே—இடை ஆகாயமே. பாதகம் அப்பி யந்தரம்—(அழகரை அடைதற்கு) இடையூறாய் இருப்பது தீவினையே. அப்யந்தரம்—இடையூறு.*

ஊஞ்சல்த் திருநாமம்

169. முத்தாரம் சரப்பளி பொன் முந்நூ லாட
முழுமதிபோல் முகத்தில்இள முறுவல்ஆட
கொத்தாரும் துளவமலர் மாலை ஆடக்
குறை தீர்ந்தோம் என்றடியார் குழுக் கொண்டாடக்

கத்தூரித் திருநாமம் கருணை ஆடக்
கமலைபுவி இருமருங்கும் களிப்புற்றுட
மத்தாக மேருவைமுன் திரித்த சோலை
மலைஅலங்காரப் பெருமாள் ஆடிர் ஊஞ்சல்.

*169. சரப்பளி—கழுத்தணியுள் ஒன்று. கத்தூரி—கஸ்தூரி. கமலை—திருமகள். புவி—பூமிதேவி. திரித்த—சுழலச்செய்த.*

*எச்சரிகை*

*இராகம்—நவரோசு* — *திரிசிர ஏகதாளம்*

**170.** எச்சரிகை! ஆண்டாளுக் கேற்ற மணவாளா!
எச்சரிகை! பூமாதுக் கின்பமிகு தோளா!
எச்சரிகை! ஆழ்வார்கள் ஏத்தும் இருபாதா!
எச்சரிகை! மறைநால் இசைந்(த்)த மதுசூதா!
எச்சரிகை! சோலைமலை யிளையாளும் அரசே!
எச்சரிகை! கடவுளர்கள் எவருக்கும் சிரசே!
எச்சரிகை! இபம்மூலம் என்வந்து காத்தாய்!
எச்சரிகை! பிரமாண்டம் எழில்உந்தி பூத்தாய்!

*170. மறை நாலும் என உம்மை விரிக்க. சிரசு—தலை; தலையானவனே என்பது பொருள். இபம்—யானை—கஜேந்திரன். உந்தி—கொப்பூழ்.*

*சிங்கன் சிங்கியைக் கொண்டாடுதல்*

*எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்*

**171.** சிங்கிதெறி சிங்கியுந சிங்கிவரு சிங்கனமெய்
திரண்டுமலை செண்டு முலையே
பங்கிநுகர் பங்கிதிரி பங்கிநல பங்கியொளிர்
பங்கியொா டிணங்கு நிலையே
தங்கிடுப்ர சங்கிமத னங்கிசம தங்கிமுனி
சங்கைசெம் மதங்கி கலையே
இங்கிதம் அடங்கிருகன் அங்கிரு கரும்புருவம்
என்பவை இரண்டு சிலையே.

*171. 'சிங்கிதெறி சிங்கியு நசுங்கி வரு' என்னும் தொடக்கமுடைய இப்பாடற் பொருள் விளங்கவில்லை.*

## பின்னும் சிங்கியைச் சிங்கன் வினவலும் சிங்கி விடை கூறுதலும்

### திபதை

172. ஏகாந்தமாய் ஒன்றும் என்னுடன் சொல்லாமல்
எவ்விதம் போகலாம்? சிங்கி!
மோகாந்தருக்குக் குறி சொல்லித் தேடும்
முயற்சியில் போய்வந்தேன் சிங்கா!
கழுத்தினில் காறை உனக்கு மினுக்கிடக்
கட்டினது ஆரடி? சிங்கி!
வழுத்தும் பெரிய பெருமாள் கொடுத்தது
வன்னப்பொன் காறைகாண் சிங்கா!
கையில் இருதலை மண்ணுண்ணிப் பாம்புபோல்
கட்டிக் கிடப்பதென்? சிங்கி!
மெய்யர்க்கு மெய்யர்நல் வேங்கடத்தார் தந்த
வெற்றிக் கடகம்பார் சிங்கா!
சங்கம் பழம்போலும் தங்க முகப்புள்ள
தாவடம் ஏதடி? சிங்கி!
எங்கள் வனகிரி சுந்தரராசன் முன்
ஈந்த முத்தாரம்காண் சிங்கா!
எள்ளிளம் பூவில்லோர் மின்மினிக் கீடம்
இருக்கிக் கடித்ததென்? சிங்கி!
புள்ளி மயில்எங்கள் ஆண்டாள் அருள்கெம்புப்
புல்லாக்குத் தானடா சிங்கா!
வெள்ளிக் கிரணம்போல் நெற்றிக்கு மேலாடி
மின்னுவ தென்னடி? சிங்கி!
அள்ளிப் பணத்துடன் கஞ்சி வரதன்
அருள் சுட்டி யல்லவோ சிங்கா!
தென்னங் குரும்பைமேல் பன்றுடை வெள்ளிச்
சிறுமணி யாதுபேர்? சிங்கி!
பன்னும் குறுங்குடி நம்பியார் இட்டது
பாத சரமடா சிங்கா!

காட்டானைக் கொம்பிரு கையிற் பிடித்துக்
கவடிக்க வேண்டாமோ? சிங்கி !
நாட்டார் நகைக்க நடுவீதியில் வந்து
நாணம் கெடுக்காதே சிங்கா !
கரிகரம் செய்துவிற் காமச் சுனையைக்
கலுழிபோல் செய்கிறேன் சிங்கி !
பரிவொன்றும் இன்றி அவை முன்னர் என்னைப்
பரிபவம் செய்யாதே சிங்கா !
கொங்கையில் நின்றும் குளிர்ந்து பரிமளம்
குப்பென் றடிப்பதென்? சிங்கி !
தங்கிடு ரேணுகைக் கத்தூரியும் திமிர்
சவ்வாது வாடைகாண் சிங்கா !
அன்னது பூசிடில் உன்னது வீக்கம்
அடங்கிச் சரியாமோ? சிங்கி !
மன்னநின் செங்கைக் கடங்குமல்லால் வல்ல
வாட்டுக் கடங்காது சிங்கா !
கரணம் புரிந்து கழையேறி ஆடியென்
காதலைத் தீரரயோ? சிங்கி!
அரணம் பொருந்தும் மனைமேடைப் பள்ளி
யறையினில் ஆடுவோம் சிங்கா !
நாவிரி வாகி நயப் பேச்செல்லாம் எந்த
நாட்டிலே கற்றாய்நீ? சிங்கி !
காவிரி தாம்பிர வர்ணிக் கரையில்
கனம்பெறக் கற்றது சிங்கா !
மாவிருஞ்சோலை மலையலங்காரனை
வாழ்த்திக் கொண்டாடுவோம் சிங்கி !
ஆலிலைமேற்பள்ளி கொண்டருள் மாலடி
யாரையும் வாழ்த்துவோம் சிங்கா !

172. ஏகாந்தமாய்—இரகசியமாய். மோகாந்தருக்கு—மோகத்தால் குருடரானவர்க்கு. பெரியபெருமாள் என்றது அரங்கநகரப்பனை. வன்னம்—அழகு. தாவடம்—மாலை. எள்ளிளம்பூ என்றது நாசியை. மின்மினிக் கீடம்—

*மின்மினியாகிய புழு. கெம்பு—மாணிக்கம். பன்னுடையும் வெள்ளிச் சிறுமணியும் சேர்ந்த இதன் பேர் யாது என்க. காட்டானைக் கொம்பு என்றது தனத்தை. கரிகரம்—ஒரு காமலீலை. காமச்சுனை என்றது அந்தரங்கமான உறுப்பை. கலுழி—வெள்ளம். பரிபவம்—அவமானம் ரேணுகைக் கத்தூரி—ஒருவகைக் கஸ்தூரி. திமிர்—பூசிய. வல்லவாட்டு—மேலாடை.*

*வாழ்த்துதல்*

**173.** சோலைமலை யிடத்தானைச் சுந்தரமின் வலத்தானை
ஆலிலையில் பாலகனை அழகனையான் வாழ்த்துகிறேன்.
வேலையமு தளித்தானை வேதமெல்லாம் விளித்தானைச்
சீலமிகுதேவ சிகாமணியை வாழ்த்துகிறேன்.
தேசிகர்க்குத் தேசிகராம் திருமாலை யாண்டாரும்
ஆசிரியர் துதித்திடும் தென்னுரியர்க ளும்வாழி.
பூசுரர்கள் குலதிலகன் பூருவசிகை வைணவருள்
காசலையாக் கிருஷ்ணய்யங்கார் சொலும் கவிகள் வாழி.
கர்த்தர்திரு மாலழகர் கால்மலர்க்குக் கைங்கரியம்
நித்தமும்செய் எண்ணுன்கு நிருவாகி களும் வாழி.
வர்த்தனைசேரும் கமிட்டி மன்னருடன் மானேசர்
உத்தமமாய்ச் செய்யும் உயர்பரிசிலும் வாழி.
நூபுரகங்கை நதியும் நோயதிலாச் சீபதியும்
கோபுரங்க ளுடனழகர் கோவில்மகம் மிகவாழி.
மாபுரமாம் வைகை வளநாடும் வைணவமும்
மீபுரமாம் விண்டு வியனுலகும் வாழியவே!.

*173. சுந்தரமின் — சுந்தரவல்லித்தாயார். வலம்—வலப்பக்கம். விளித்தல்—பேசுதல். காசு அலையா—குற்றங்களால் வருத்தப்படாத. வர்த்தனை சேரும்—மிக்க. கமிட்டி மன்னர்—நிர்வாகக் குழுவின் தலைவர். பரிசில்—கொடை. மகம்—வேள்வி. மீபுரம்—மேலுலகு.*

மங்களம்

இராகம்—புன்னாகவராளி

174. மங்களம் திருமருவும் அணியும்மணி மார்பர்க்கு
மங்களம் சோலைமலை மாலழகருக்கு
மங்களம் சுந்தரமின் வலத்துறையும் மாமுகிற்கு
மங்களம் கோதைபுணர் மணவாளருக்கு
ஜெய மங்களம் நித்ய சுபமங்களம்.

174. திருவும் மருவும் மணியும் அணியும் என உம்மை விரிக்க. கோதை-ஆண்டாள்.

இராகம்—சுருட்டி

175. வேதாகமங்களுக்கு மங்களம்—பொருள்
விளக்கும் பாடியங்களுக்கு மங்களம்
போதாயனர் விதிக்கு மங்களம்—தருமம்
புகலும் சாத்திரங்கட்கு மங்களம்
திருவாய்மொழிக்கு மங்களம்—சேர்ந்த
திவ்யப்ரபந்தங்கட்கு மங்களம்
பெருமாள் திருப்பதிகட் கெல்லாம் மங்களம்—நல்லோர்
பேசுந் துதிகட்கெல்லாம் மங்களம்
அழகர் பிள்ளைத் தமிழ்க்குச் சோபனம்—இவர்
அருமைத் திருப்புகழ்க்குச் சோபனம்
பழகும் அந்தாதிகட்குச் சோபனம்—இன்பம்
பகர்சந்தத் தாழிசைக்குச் சோபனம்
பள்ளுப் பிரபந்தத்துக்குச் சோபனம்—மேன்மை
பகர் கலம்பத்துக்குச் சோபனம்
கிள்ளைவிடு தூதுக்குச் சோபனம்—இன்பம்
கிடைக்கும் பதிகங்கட்குச் சோபனம்
கொள்ளும் கோவைத்துறைக்குச் சோபனம்—நயம்
கூறும் தருக்களுக்குச் சோபனம்
கொள்ளும் விலாசங்கட்குச் சோபனம்—இந்தக்
குறவஞ்சித் தமிழுக்கும் சோபனம்.

சோலைமலைக் குறவஞ்சி முற்றிற்று

சுந்தரவல்லி சமேத சவுந்தர ராஜாய மங்களம்.

*175. பாடியங்கள் — ஸ்ரீபாஷ்யம் ஈடு முதலிய விரிவுரைகள். போதாயன விதி—போதாயன சூத்திரம். திருப்புகழ், சந்தத்தாழிசை, பள்ளு, பதிகம், கோவைத்துறை, தரு, விலாசம் என்பவை திருமாலிருஞ்சோலைமலை அழகர் மீது முன்னோர்களால் இயற்றப்பெற்ற நூல்கள். இவை இந்நாள் வரை அச்சிட்டு வெளிப்படாதவை. தரு—ஒரு வகை இசைப்பாட்டு.*

குறிப்புரை முற்றிற்று

---

# ஸ்ரீஸூக்திமாலா வெளியீடுகள்

பதவுரை, அரும்பதவுரை, ப்ரமாணத்திரட்டு
முதலானவற்றோடு கூடிய பெரியவாச்சான்பிள்ளை முதலான
பூர்வாசார்யர்களின் க்$_3$ரந்த$_2$ங்கள்

| | க்$_3$ரந்த$_2$ங்கள் | விலை | தபால் |
|---|---|---|---|
| 1. | பரந்த ரஹஸ்யம் முதலிய எட்டு ரஹஸ்யங்கள் | 1-50 | -40 |
| 2. | ஸ்தோத்ரரத்நசது:ஶ்லோகீ ஜிதந்தே வ்யாக்யானங்கள் [அச்சில்] | | |
| 3. | திருப்பல்லாண்டு வ்யாக்யானம் | 1-50 | -40 |
| 4. | முதல் திருவந்தாதி வ்யாக்யானம் | 1-88 | -50 |
| 5. | பெருமாள் திருமொழி வ்யாக்யானம் [அச்சில்] | | |
| 6. | திருமாலை வ்யாக்யானம் [அச்சில்] | | |
| 7. | திருவாசிரியம் பெரிய திருவந்தாதி வ்யாக்யானம் | 1-63 | -45 |
| 8. | சது:ச்லோகீ வ்யாக்யானம் [நாயனாராச்சான்பிள்ளை] | 1-50 | -40 |
| 9 | கத்ய வ்யாக்யானங்கள் [அச்சில்] | | |
| 10. | நாச்சியார் திருமொழி வ்யாக்யானம் [அச்சில்] | | |
| 11. | திருச்சந்தவிருத்த வ்யாக்யானம் | 3-00 | -65 |
| 12. | நான்முகன் திருவந்தாதி வ்யாக்யானம் [அச்சில்] | | |
| 13. | ஸ்ரீராமாயண தனிச்லோகம் [விவரணத்துடன்] part I | 3-50 | -75 |
| | ஷை இரண்டாம் பாகம் [விவரணத்துடன்] | 7-00 | 1-35 |
| 14. | திருப்பள்ளியெழுச்சி வ்யாக்யானம் | 0-50 | -20 |
| 15. | பாசுரப்படி ராமாயணம் [விலையில்லை தபால்கூலி 0-10] | | |
| 16. | அமலனாதிபிரான் வ்யாக்யானங்கள் [அச்சில்] | | |
| 17. | கண்ணிநுண் சிறுத்தாம்பு வ்யாக்யானம் | 2-75 | -70 |
| 18. | சிறியதிருமடல் வ்யாக்யானம் [அச்சில்] | | |
| 19. | முமுக்ஷுப்படி வ்யாக்யானம் | 3-00 | -65 |
| 20. | பெரியதிருமடல் வ்யாக்யானம் [அச்சில்] | | |
| 21. | முதல் திருவந்தாதி, அப்பிள்ளையுரை | 3-00 | -65 |
| 22. | இரண்டாந்திருவந்தாதி வ்யாக்யானம் | 4-00 | -85 |
| 23. | ஆறாயிரப்படி கு$_3$ருபரம்பராப்ரப$_4$ாவம் | 12-00 | 1-50 |
| 24. | ஸ்ரீவசநபூ$_4$ஷண வ்யாக்யாநம் 4-அரும்பதவுரைகளுடன் முதல் பாகம் | 6-00 | 1-20 |
| 25. | மூன்றாந்திருவந்தாதி வ்யாக்யானம் [விவரணத்துடன்] | 4-00 | -85 |
| 26. | அருளிச்செயல் ரஹஸ்யம் [பூ$_4$ஷணத்துடன்] | 2 50 | -65 |
| 27. | திருவெழுகூற்றிருக்கை வ்யாக்யானம் (விவரணத்துடன்) | 1-00 | -35 |
| 28. | கைசிகபுராணம் | 1-00 | -35 |

P. T. O

# ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம் வெளியீடுகள்

(ஸுத3ர்ஶன பத்ரிகையில் வெளிவந்த எளியநடை நூல்கள்)

| | | | |
|---|---|---|---|
| 1. | திருப்பாவை வ்யாக்யானம் | 4-00 | -85 |
| 2. | [போதாயந] ஸந்த்யாவந்தநம் பதவுரையுடன் | 0-50 | -20 |
| 3. | [போதாயந] உபாகர்மவிதி | 0-50 | -20 |
| 4. | புருஷஸூக்த வ்யாக்யானம் | 0-75 | -35 |
| 5 | நாராயண ஸூக்த வ்யாக்யானம் | 0-75 | -35 |
| 6. | ஸ்ரீஸூக்த வ்யாக்யானம் | 2-00 | -50 |
| 7. | பூ நீளா விஷ்ணுஸூக்த வ்யாக்யானங்கள் | 1-75 | -45 |
| 8. | தேஹளீஶ ஸுப்ரபாதம் | 0-25 | -20 |
| 9 | ராமாநுஜதேசிக ஸ்தோத்ரங்கள் | 1-00 | -40 |
| 10. | விசிஷ்டாத்வைதவிஜயம் [முதல் பாகம்] | 10-00 | 1-50 |
| | ஷை இரண்டாம் பாகம் | 5-00 | 1-00 |
| 11. | சாதிமத ஆராய்ச்சி | 2-00 | -50 |
| 12. | ஸ்ரீலக்ஷ்மீ ந்ருஸிம்ஹஸ்தவம் | 0-50 | -20 |
| 13. | ஸந்மதகாரிகாவளீ | 1-75 | -45 |
| 14. | விஷ்ணுசித்தவிஜயம் முதல் பாகம் | 5-00 | 1 00 |
| | ஷை இரண்டாம் பாகம் | 7-00 | 1-50 |
| 15. | கம்பனின் சமயம் முதல் பாகம் | 1-00 | -40 |
| 16. | சாரீரககாரிகாவளீ [முதல் பாகம்] | 3-00 | -65 |
| 17. | பெரியாழ்வார் ப்ரபாவம் | 4-00 | -85 |
| 18. | ஸாத்விகவிஜய ஸர்வஸ்வம் [தபால் உள்பட] | 0-75 | — |
| 19. | ஸந்த்4யாவந்த3நபா4ஷ்யம் | 3-00 | -75 |
| 20 | திருப்பல்லாண்டு வ்யாக்யானம் | 2-00 | -50 |
| 21. | மகரநெடுங்குழைக்காதர் பாமாலையந்தாதி | 1-50 | -45 |
| 22. | ஸ்ரீகேசவமணிமாலை | 0-75 | -35 |
| 23. | மாமுனிகள் அறுநூறுவது ஆண்டு மலர் | 1-50 | -50 |
| 24 | சங்கரரும் வைணவமும் [தபால் உள்பட] | 0-75 | — |
| 25. | ஸித்தோ4பாய விஜயம் [ஸ்ரீரங்கராஜ விஜயம்] | 3-00 | -80 |
| 26. | திருப்பாவை, திருப்பள்ளியெழுச்சி மூலம் மட்டும் | 0-20 | -10 |
| 27. | கத்யத்ரயம் மூலம் மட்டும் | 0-25 | -15 |
| 28. | கீ3தா வ்யாக்2யானம் முதல் ஷட்கம் | 10-00 | 1-50 |
| 29. | அக்நிஹோத்ரியும் வைணவமும் | 2-50 | -85 |

கிடைக்குமிடம்:-

ஸ்ரீ. ஓ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், அட்வகேட்,

3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.